PUVANAKKANNAN TRATERS

BARUK PAL POTI

BARUK TOOTH POWDER





ஓம்

தத்ஸத்

# சோதிட ரகசியமென்னும்

## ஆயுள்கணித மூலமும்-உரையும்.

இஃது

ம-ா-ா-ஸ்ரீ, ஜோதிடப் பண்டிதராகிய

செஞ்சி-ஏகாம்பரமுதலியார்

அவர்களியற்றியதை

ம-ா-ா-ஸ்ரீ,

பி-எம்-பொன்னுசாமிமுதலியாரவர்களால்

பரிசோதிக்கப்பட்டு

**FIRST EDITION**

*1000 COPIES.*

இவை

சென்னை-சூளை

ம-ா-ா-ஸ்ரீ, வேலூர்,

குப்புசாமிமுதலியாரவர்கள்

அமெரிக்கன் டைமெண்ட் பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

**1908.**

உ

கடவுள் துணை.

# சோதிட ரகசிய மென்னும் ஆயுள்கணித மூலமும்-உரையும்.

## விநாயகர்-காப்பு.

### விருத்தம்.

பாதிமதி தனையணிந்த பரமன்காப்பு
பராபரியாள் யென்தாயார் பாதங்காப்பு
சோதியாம் வள்ளிமணாளந் தான்காப்பு
சுத்தமுள சித்தருடச் சீர்தாட்காப்பு
ஆதியாம் சோதிட ரகசியமென்னும்
அறையுஞ்சீர் ஆயுளாங் கணிதந்தன்னை
மேதினியில் மூலமுரை யாகச்சொல்ல
மேதகுசீர் விநாயகன்தன் பாதங்காப்பே.

## முகவுரை.

### விருத்தம்.

பூலோக மாணிடற்கு வேண்டுமென்றுப்
பொதிகைவா ழகத்தியமா முனிவரோடு
மேலான போகர்புலிப்பாணி யானோர்
மேன்மையுள்ள காக்கேயர் புஜண்டரின்னம்
சாலான சட்டமுனி இராமதேவர்
சார்பான கருவூரார் காலாங்கிநாதர்
மேலான தன்வந்திரி பவந்தரோடுங்
கலசமா முனிவரொடு மச்சரூமே.

இதுவுமது.

ஆமெனவே பிரமரிஷி கருணானந்தர்
அதியா மிவரெண்பேர் சித்தர்தாமும்
தாமெனவே யோதிவைத்த கணிதநூற்கள்
தரணிமிசைக் கோடானக் கோடியுண்டு
நாமெனவே யத்தனையும் பார்ப்பதற்கு
நாளதுவும் போதாதே யென்றுயெண்ணி
யாமெனவே காண்பதற்கு சூக்ஷமாக
கணிதநூற் புலவருடக் கருணையாலே.

இதுவுமது.

ஆகவே சோதிடச் சித்தியென்னும்
அனுபோக மாமாயுள் கணிதந்தன்னை
பாகமாய் பலபேருங் காணவேண்டிப்
பார்ப்பதற்குக் கண்ணுடி போலேதோற்ற
தாகமிலாத் தாம்தாமே கண்டுகொள்ள
தக்கதோர் சூக்ஷாதிச் சூக்ஷம்யாவும்
போகமாய்ச் சேர்த்துமே ஜெகத்திலோங்க
செஞ்சி ஏகாம்பரமும் வெளியிட்டேனே.

முகவுரை முற்றிற்று.

---



# நான்முகம்.

## நிஷேகம்.

### விருத்தம்.

பூவையே யனையார்பூத்த நாள்முதல் மூன்றுநாளும் [ம்
மேவிடப் புணர்ச்சிபின்னை விரும்புநாட் பன்னிரண்டா
மேவிய கருவதுண்டாம் யிங்கிதி லிரட்டைநாளாண்
பாரிய வொற்றைநாளிற் பெண்ணெனப் பகர்வாய்நீயே.

(இ-ள்.) ஸ்ரீ பூத்தநாள் முதல் மூன்றுநாளும் விலக்கப்பட்டன, அதன்மேற் பனிரெண்டுநாளுங் கெற்பமுண்டாம், அதில் இரட்டித்தநாளெல்லாம் ஆண் ஆகும், ஒற்றைநாளெல்லாம் பெண்ணென் றறியவும்,

பகர்தருசோதிமூலம் பனையுறு ளோணந்தோணி
தகவிலுத்திரங்கள்மூன்றுஞ் சதையநா ளத்தஞ்சாலப்
புதல்வர்கள் புணர்ச்சிவிட்டஞ் சித்திரை புநர்தம்பூசம்
மகசிரங் குதிரையின்னுள் மத்திமந் தீதுமற்றே.

(இ-ள்.) சுவாதி, மூலம், அநுஷம், ரோகிணி, திருவோணம், ரேவதி, உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, சதையம், அஸ்தம், இவை நிஷேகத்திற்குச் சுத்தமான தினமென்பது, அவிட்டம், சித்திரை, புனர்பூசம், பூசம், மிருகசீரிடம், அசுவனி, இவை மத்திடம், அல்லாதவையெல்லாம் ஆகாது, (எ-று.) (2)

தீதுவா வெட்டிரித்தை தியவர் வாரஞ்செப்பில்
வோதரு பிரந்தநாட்கள் பகலுட னொழிக்கப்பட்ட
தாதவிழ் குழலி கௌவம் சரராசி மிகவும்நன்றும்
யேதகு கோட்கள்நோக்கில் மிக்கவும் விழுமிநாமே.

(இ-ள்.) பவுர்நமி, அமாவாசை, அஷ்டமி, ரித்தை ஞாயிரு, செவ்வாய், சனி, ஜென்ம நக்ஷத்திரங்களும், பகலும் விலக்கப்பட்டன, அல்லாதவைகளுங், சரராசிகளும் வுத்தமம், மற்றராசிகளும் சுபக்கிரக நோக்குண்டாகில் நலம், (எ-று.) (3)

விழுமிய மதிகெண்டங்கள் வெள்ளிபொன்னஞ்
சோடொன்பான், எழுமிடம் நல்லர்புந்தி யேழிஞெடொ
ன்பானல்லன், அழிவுறு பாபர்பன்னொன் ருறெரு
மூன்றில்நல்லர், செழுமணிப் பூணினர்கள் புணர்ச்சியை
செப்புங்காலே.

(இ-ள்.) உதையம், 4-ம் மிடம், 10-ம் மிடம் சந்திரன் நல்லன், வெள்ளியும், வியாழமும் 5-ம் மிடம் 9-ம் மிடம் உதயத்தினும் நல்லர், புதன் 7-ம் மிடம் 9-ம் மிடம் நல்லன், பாபர் 11-ம் மிடம், 6-ம் மிடம் 3-ம் மிடம் நல்லர், (எ-று.) (4)

பிள்ளைப்பிறப்பு.

நன்றுநற் குழவிதோன்றும் பொழுதினில் நன்னீராடிக்
கன்றொடு பசும்பொன்பூமி கலைபல மறையோர்க்கீய்ந்து
சென்றுமைந்தனையெடுத்துத்திருமுகங்கண்டுசெவ்வேள்
ஒன்றிய சாதகங்க ளோலையி லெழுதிவைப்பாம்.

(இ-ள்.) பிள்ளை பிறந்தபோது பிதா ஸ்நானஞ்செய்து பிராமணருக்குப் பசுவுங்கன்றும் பொன்னும் பூமி அல்லது தன்னுலீன்றவரையில் தானஞ்செய்து அப்புத்திரர் முகங்கண்டு சாதகமெழுதி வைப்பது மகாவுத்தமம், எ-று. (5)

நாமகரணம்.

எழிற்பெய ரிடுநாள்பத்தில் யீராறி லோணந்தோணி
வழுத்துமான் றலைபார்மூல மகமத்தஞ் சதையம்விட்டம்
விழுப்பனை யுத்திரங்கள் விளங்கிரு பூசநன்றும்
மொழித்திடானு வாவையொன்பா ஞெத்தித்த பக்கத்
[துள்ளார்.

(இ-ள்.) பிராமணருக்குப் பன்னிரண்டாநாள், அல்லாதவர்களுக்கு ஒன்பதாநாள் நாமகரணம் பண்ணுவது, திருவோணம், ரேவதி, மிருகசீரிடம், ரோகணி, மூலம், அத்தம், சதையம், அவிட்டம், அநுஷம், உத்திரங்கள்மூன்றும், சோதி, புனர்பூசம், பூசம் இவையும்; இரட்டித்த பக்கங்களும் நல்லது, நவமியும், உவாவுமொழிய மற்றவைகள் நல்லது, எ-று. (6)

உள்வரு நிலைபிராசி வுதித்திட வுச்சிமுன்னே
எள்ளிரு நம்மிநற்கோள் வாரத்தெட் டினிற்கோள் நீக்கி
யொள்ளியபகை நீச்சத்தை நோக்குங்கோ ளுதையமாற்றி
பிள்ளைதன் னுமஞ்சாற்றிப் பிறைநுதற் கருங்கட்பேதாய்.

(இ-ள்.) ஸ்திரராசிகளிலே உச்சிக்குமுன்னே நற்கோள் வாரங்களிலே அஷ்டமசுத்தியுண்டாக பகைநீச்சக் கோள்கள் நோக்குங் கோளுதைமாற்றி நாமகரணஞ் சாற்றுவது நன்று, எ-று. (7).

வித்தியாரம்பம்.

மகவினுக் கைந்திற்பெண்ணை மாவிரு பூசஞ்செங்கை
யகலிய வோணமாதி மூன்றத்த மாகிமூன்று
பகருமுத்திரங்கள் தோணிப் பார்நலவிருத்தைபன்மூன்
றிகலுமெட்டுவாவீராறு நீக்கிமே லினிதுகூறே.

(இ-ள்.) பிள்ளை ஐந்துவயதுக்கு புகுந்தவாறே உத்தராயனம் பிறந்தவுடன் ஆசாரியனைப்பூசித்து வித்தியாரம்பம் துவக்குவது, அசுபதி, அநுஷம், புனர்பூசம், பூசம், திருவாதிரை, திருவோணம், அவிட்டம், சதையம், அஸ்தம், சித்திரை, சுவாதி, உத்திரட்டாதி, உத்திரம், ரேவதி, ரோகணி இவைநல்லது, இருத்தை, திரயோதசி, அஷ்டமி, உவாவும், துவாதசியும், விலக்கப்பட்டன, எ-று. (8)

இதுவுமது.

கூறிய சனிசேய்வாரம் நிலையோரை கொள்ளார் திங்கள்
ஏறிய பத்தும்ஆறே டீராரே ழியம்பார்புந்தி
சீறிடு மாறில்வெள்ளி யாறேழெட் டனைத்துந்தீயர்
வாறுபன் னொன்றுமூன்று பாபர்நன் றருகுமாய்ந்தால்.

(இ-ள்.) சனியும், செவ்வாயும், ஸ்திரராசிகளும், விலக்கப்பட்டன, திங்கள், 1-ம் மிடம் 6-ம் மிடம் 12-ம்மிடம் 7-ம் மிடம் உதையம் பொல்லான், புதன் 6-ம் மிடம் பொல்லான், வெள்ளி 6-ம் மிடம் 7-ம் மிடம் பொல்லான், 8-ம் மிடத்தில் எல்லாருந்தீயர், பாபர் 3-6-11-மிடம் நல்லர். இனி யொன்று சிறப்பித்தவதனல், சத்தசாஸ்திரம், சாமுத்திய சாஸ்திரம், காந்தருவ நீதிசாஸ்திரம், இவையிற்றுக்குப் புநர்பூசம் நன்று. ஆயுர்வேதாகம சர்வசாஸ்திரம் இவையிற்றுக்கு அவிட்டம் நல்

லது, சோதிடசாஸ்திரத்திற்குச் சோதிநல்லது, கூபசாஸ்திரத்திற்கும், தற்கசாஸ்திரத்திற்கும், திருவாதிரை நல்லது, அசுவசாஸ்திரத்திற்கு அசுபதி நல்லது, கன்மசாஸ்திரங்களுக்குத் திருவோணம் நல்லது, யோகசாஸ்திரத்துக்குச் சதையம் நல்லது, எ-று. (9)

வாகனமேறவும், ஆயுதம் பயிற்றவும்.

மான்றலை யுத்திரங்கள் மகமத்தம் புநர்தமோணம்
ஈன்றசித்திரை பார்சோதி ரேவதி பனைமானந்தை
தோன்று பூரணைபொன்புந்தி சுகன்மதி கதிர்வாரங்கள்
ஆன்ற வாகனங்களேற வாயுதம் பயிற்றலாமே.

(இ-ள்.) மிருகசீரிடம், உத்திரங்கள் மூன்றும், மகம், அஸ்த்தம் புநர்பூசம், திருவோணம், சித்திரை, ரோகணி, சோதி, ரேவதி, அனுடம், அசுவனி, இந்நாளிலே நந்தை, பூரணை இந்த பக்கங்களிலே வியாழம், புதன், வெள்ளி, திங்கள், ஞாயிறு இவ்வார வுதையங்களிலே வாகனங்களேறவும், ஆயுதங்கள் பயிற்றவும் நன்று, எ-று. (10)

கிரகநோக்குகள்.

சேறுமுதைய மேழிடங்கள் முழுநோக்கொன்பான்
றிகழ்மூக்காற், பாரிலைந்தும் அரைநோக்காம் பத்துநா
ன்குங் கால்நோக்காம், ஆறின்மூன்றும் பன்னொன்றும்
அறைக்கால் நோக்காம் ஆறெட்டும், நாரியிரண்டும் பனி
ரண்டும் நயனமில்லை நவக்கோட்கே.

(இ-ள்.) உதையராசியும் 7-ம் ராசியும் முழுநோக்கு, 9-ம் ராசி முக்கால்நோக்கு, 5-ம் ராசி அரைநோக்கு, 11-4 கால்நோக்கு, 3-11 அரைக்கால் நோக்கு, 2, 6, 8, 12 இந்தயிடங்கள் நோக்கில்லை யென்பது, இவையெல்லாம், தந்தாமாக்ஷி நிலங்களில் நின்றபோது இதிற் சொன்னதனுக்கு முழுபலன், நட்பில் நின்றபோது சொன்ன இவையிற்றில் நாலிலொன்று குறையும், உச்சத்தில் நின்றபோது பத்திலொன்று எறும், பகையில் நின்றபோது, ஒன்றுபாதியாகும், நீச்சத்தில் நின்றபோது ஒன்றுகால் ஆகும் ஆகையால் இவ்வகையாக நோக்கென்று அறியவும், எ-று. (11

# கிரக சார நக்ஷத்திரக் கால்கள்.

அசுவனி, ஆதியாக, ரேவதி, அந்தமாகவுள்ள இருபத்தேழு நக்ஷத்திரங்களும், மேஷ மாதியாக மீனம் அந்தமாகவுள்ள, பன்னிரண்டு இராசிகளிலும் அடங்கி யிருக்கின்றன.

| | | | |
|---|---|---|---|
| மீனம்<br>பூரட்டாதி பின்கால்<br>உத்திரட்டாதி<br>ரேவதியும் | மேஷம்<br>அசுவனி<br>பரணி<br>கார்த்திகை முதற்காலும் | விருஷபம்<br>கார்த்திகை பின் முக்கால்<br>ரோகணி<br>மிருகசீரிட முன்னரையும் | மிதுனம்<br>மிருகசீரிடம் பின்னரை<br>திருவாதிரை<br>புனர்பூசம் முன்முக்காலும் |
| கும்பம்<br>அவிட்டம் பின்னரை<br>சதயம்<br>பூரட்டாதி முன்முக்காலும் | இராசியொன்றுக்கு இரண்டேகால் நக்ஷத்திரம்,<br>நக்ஷத்திரம் ஒன்றுக்கு நாலுகால்.<br>இதினால் ஒரு இராசிக்கு நக்ஷத்திரக்கால்கள் 9<br>கால்கள் என்பதற்கு பாதங்கள் என்றும் பெயர். | | கடகம்<br>புனர்பூசம் பின்கால்<br>பூசம்<br>ஆயிலியமும் |
| மகரம்<br>உத்திராடம் பின்முக்கால்<br>திருவோணம்<br>அவிட்ட முன்னரையும் | | | சிம்மம்<br>மகம்<br>பூரம்<br>உத்திரம் முதற்காலும் |
| தனுசு<br>மூலம்<br>பூராடம்<br>உத்திராடம் முதற்காலும் | விருச்சிகம்<br>விசாகத்தின் பின்கால்<br>அநுஷம்<br>கேட்டையும் | துலாம்<br>சித்திரையின் பின்னரை<br>சுவாதி<br>விசாகத்தின் முன்முக்காலு | கன்னி<br>உத்திரத்தின் பின்முக்கால்<br>அஸ்த்தம்<br>சித்திரையின் முன்னரையும் |

# கிரகங்களின்

## உச்சம் - நீச்சம் - நட்பு - ஆட்சி - பகை
## மூலத் திரிகோணம்-திக்கு.

| | | | |
|---|---|---|---|
| சூரிய<br>நட்பு | சூரிய<br>உச்சம் | சூரிய<br>பகை | சூரிய<br>பகை |
| சூரிய<br>நட்பு | இராசி | | சூரிய<br>நட்பு |
| சூரிய<br>பகை | | | சூரிய<br>ஆட்சி |
| சூரிய<br>நட்பு | சூரிய<br>பகை | சூரிய<br>நீசம் | சூரிய<br>பகை |

| | | | |
|---|---|---|---|
| சந்திரன்<br>நட்பு | சந்திரன்<br>நட்பு | சந்திரன்<br>உச்சம் | சந்திரன்<br>பகை |
| சந்திரன்<br>நட்பு | இராசி | | சந்திரன்<br>ஆட்சி |
| சந்திரன்<br>பகை | | | சந்திரன்<br>பகை |
| சந்திரன்<br>நட்பு | சந்திரன்<br>நீச்சம் | சந்திரன்<br>பகை | சந்திரன்<br>நட்பு |

| | | | |
|---|---|---|---|
| செவ்வா<br>நட்பு | செவ்வா<br>ஆட்சி | செவ்வா<br>பகை | செவ்வா<br>நட்பு |
| செவ்வா<br>பகை | | | கெவ்வா<br>நீச்சம் |
| செவ்வா<br>உச்சம் | | | செவ்வா<br>நட்பு |
| செவ்வா<br>பகை | செவ்வா<br>ஆட்சி | செவ்வா<br>நட்பு | செவ்வா<br>பகை |

| | | | |
|---|---|---|---|
| புதன்<br>நீச்சம் | புதன்<br>நட்பு | புதன்<br>பகை | புதன்<br>ஆட்சி |
| புதன்<br>பகை | | | புதன்<br>பகை |
| புதன்<br>நட்பு | | | புதன்<br>நட்பு |
| புதன்<br>பகை | புதன்<br>பகை | புதன்<br>நட்பு | புதன்<br>ஆட்சி |

| | | | |
|---|---|---|---|
| குரு<br>ஆட்சி | குரு<br>பகை | குரு<br>நட்பு | குரு<br>நட்பு |
| குரு<br>நட்பு | இராசி | | குரு<br>உச்சம் |
| குரு<br>நீசம் | | | குரு<br>பகை |
| குரு<br>ஆட்சி | குரு<br>நட்பு | குரு<br>பகை | குரு<br>பகை |

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன்<br>உச்சம் | சுக்கிரன்<br>நட்பு | சுக்கிரன்<br>ஆட்சி | சுக்கிரன்<br>பகை |
| சுக்கிரன்<br>நட்பு | இராசி | | சுக்கிரன்<br>பகை |
| சுக்கிரன்<br>பகை | | | சுக்கிரன்<br>பகை |
| சுக்கிரன்<br>நட்பு | சுக்கிரன்<br>பகை | சுக்கிரன்<br>ஆட்சி | சுக்கிரன்<br>நீசம் |

[illegible]

| | | | |
|---|---|---|---|
| சனி பகை | சனி நட்பு | சனி பகை | சனி நட்பு |
| சனி ஆக்ஷி | இராசி | | சனி பகை |
| சனி ஆக்ஷி | | | சனி நட்பு |
| சனி பகை | சனி நட்பு | சனி உச்சம் | சனி பகை |

| | | | |
|---|---|---|---|
| ராகு நட்பு | ராகு பகை | ராகு நீசம் | ராகு நட்பு |
| ராகு பகை | இராசி | | ராகு பகை |
| ராகு ஆக்ஷி | | | ராகு பகை |
| ராகு பகை | ராகு உச்சம் | ராகு நட்பு | ராகு பகை |

| | | | |
|---|---|---|---|
| கேது நட்பு | கேது ஆக்ஷி | கேது நீசம் | கேது நட்பு |
| கேது பகை | இராசி | | கேது பகை |
| கேது நட்பு | | | கேது பகை |
| கேது பகை | கேது உச்சம் | கேது நட்பு | கேது பகை |

| | | | |
|---|---|---|---|
| | | | சூரியன் பரிவேட |
| காலன் உச்சம் தூம-நீச் | இராசி | | சனி இந்-தனு குளிகன் நீச்சம் |
| | | | தூமன் உச்சம் காலன் நீச்சம் |
| சூரியன் இந்-த-ச பரிவே | | | |

| | | | |
|---|---|---|---|
| | செவ்வா | சந்திரன் | |
| சனி | மூலத்திரிகோண இராசி | | |
| | | | சூரியன் |
| குரு | இராகு கேது | சுக்கிரன் | புதன் |

| | | | |
|---|---|---|---|
| மீனம் வடக்கு | மேஷம் கிழக்கு | ரிஷபம் தெற்கு | மிதுனம் மேற்கு |
| கும்பம் மேற்கு | இராசி திக்கு | | கடகம் வடக்கு |
| மகரம் தெற்கு | | | சிங்கம் கிழக்கு |
| தனுசு கிழக்கு | விருச்சி வடக்கு | துலாம் மேற்கு | கன்னி தெற் |

# இலக்கிணம்பார்க்கும் தினசரிகண்ணுடி.

விவாகம், புத்திரஜெனனம் முதலிய சகலமான, சுபகாரியங்களுக்கும், இலக்கிணங்கள் குறிக்க இதை யேற்படுத்திஞேம்.



| | | | | |
|---|---|---|---|---|
| சித்திரைமீ | உ | 1-க்கு | ($8\frac{1}{4}$) | விளுடிகழித்து ல்க்கிணம் பார்க்கவும் |
| வையாசிமீ | உ | 1-க்கு | ($8\frac{3}{4}$) | விளுடிகழிக்கவும். |
| ஆனிமீ | உ | 1-க்கு | (10) | விளுடிகழிக்கவும். |
| ஆடிமீ | உ | 1-க்கு | ($10\frac{1}{2}$) | விளுடிகழிக்கவும். |
| ஆவணிமீ | உ | 1-க்கு | ($10\frac{1}{8}$) | விளுடிகழிக்கவும். |
| புரட்டாமீ | உ | 1-க்கு | ($9\frac{3}{4}$) | விளுடிகழிக்கவும். |
| ஐப்பிசிமீ | உ | 1-க்கு | ($10\frac{1}{4}$) | விளுடிகழிக்கவும். |
| கார்த்திகை | உ | 1-க்கு | ($10\frac{1}{2}$) | விளுடிகழிக்கவும். |
| மார்கழிமீ | உ | 1-க்கு | ($11\frac{1}{2}$) | விளுடிகழிக்கவும். |
| தைமீ | உ | 1-க்கு | ($10\frac{1}{2}$) | விளுடிகழிக்கவும். |
| மாசிமீ | உ | 1-க்கு | ($9\frac{1}{2}$) | விளுடிகழிக்கவும். |
| பங்குனிமீ | உ | 1-க்கு | ($8\frac{1}{2}$) | விளுடிகழிக்கவும். |

## யுகபேதங்கள்.

கிரேதாயுகத்தில் கர்ப்பாதானஞ்செய்ய நியமித்த லக்கிணமே ஜெனன லக்கிணமாகவும், திரேதாயுகத்தில் கெர்ப்பம்தறித்த குறிப்பே ஜெனன லக்கிணமாகவும், துவாபரயுகத்தில் ஜெனனத்தின் தோற்றமே ஜெனனலக்கினமாகவும்,இந்த கலியுகத்தில் சிசுவு பூபதமானதே ஜெனனலக்கிணமாகவும் குறிப்பதே முறைமையாக இருக்கின்றது.

## கிரகங்களின்நிலே.

### விருத்தம்.

குறித்தகதிரோன் புகர்புந்தி குலவிநிற்கு மொரு மாதஞ், செறித்தமதிநா ளிரண்டேகாற் செவ்வாய்மாத மொன்றரையாம், கறுத்தசனியாண் டிரண்டரையாங் கனகன்ருனு மோராண்டாம், யிருத்தபாம்பாண் டொன் றரையா மிராசியொன்றில் நின்றிடுநாள்.

(இ-ள்.) ஆதித்தன், புதன், சுக்கிரன் ஒருராசியில் ஒருமாதம் நிற்பார்கள், சந்திரனிரண்டேகால் நாள் நிற்பன், செவ்வாய் ஒன்றரை மாதம் நிற்பன், சனி இரண்டரை வருஷம் நிற்பன், வியாழம் ஒருவருஷம் நிற்பன், ராகுகேது ஒன்றரைவருஷம் நிற்பார்கள், எ-று. (12)

ஜாதகம்.

விருத்தம்.

புவியிற்குழவி பிறந்திடினு நன்மைதீமை நாடுங்கால், அவனிக்கருப்ப முதலாக வாராய்ந்தறிக வறியாயேற், புவனிதன்னிற் சீற்றோக்கும் பொழுதுகொள்க வுதயமுயிர், தவறில்மதிசே ரோரையுடல் தாமக்கூந்தன் மாமயிலே.

(இ-ள்.) ஜெனித்தவர்களுக்கெல்லாம், நன்மை, தீமை விசாரிக்குமிடத்து, கெர்ப்பாதானம் முகூர்த்தமாகக்கொள்வது, அப்படி கொள்ள முடியாததலால், சிரோதயமானபோது முகூர்த்தமாகக் கொள்வதாம், அதாவது பிறந்தபோது உதிக்கின்றவிராசியை உயிரென்றும், ஜென்மலக்கினமென்றும் அறிவது, சந்திரன்நின்ற விராசியை உடலென்றும், சந்திரலக்கினமென்றும் அறிவது, எ-று. (13)

பத்தேழு நாலுதையம் பத்தி ✠அரசிருக்கில்
எத்தலத்தில் தீக்கோ ளிருந்தாலுஞ்—சுத்த
ஆயிரம் யானைக்குள் ஹரிபோலும் வாழ்வனே
பாயுமிருள் கண்ட கதிர்.

(இ-ள்.) பத்தாமிடம் அல்லது ஏழாமிடம் அல்லது நான்காமிடம் அல்லது உதயமாகிய ஜென்மலக்கினமான ஒன்றாமிடம் இவ்விடங்களில் எந்தயிடத்திலாகிலும் (நவக்கிரகங்களில் அரசனாக யிருக்கப்பட்ட) ☞ குருவிருக்கில் மதங்கொண்ட ஆயிரங்காட்டானைக் கூட்டத்தில் மிருக இராஜேந்திரனாகிய ஒரு சிங்கமாகப்பட்டது நுழைந்த மாத்திரத்தில் அந்த ஆனைக்கூட்டங்கள் எவ்விதமாக அலறி ஓட்டம் பிடிக்குமோ அவ்விதமாகவும், சூரியனைக்கண்டவுடன் இருளெவ்விதமாக மாயமாய்ப் பரந்தோடுமோ அவ்விதமாகவும் பாபக்கிரகங்கள் எந்த துர்ஸ்தானங்களிலிருந்தாலும் பார்த்தாலும் யாதொரு தீமையும் செய்யார்கள் என்பதாம், எ-று, (14)

✠ அரசு என்பது குரு.

விருத்தம்.

பொன்னுடன் வெள்ளிபுந்தி பொலிவுட னேக்கவந்த
மன்னிளங் குழவிதன்மேல் வலிந்ததீக் கோள்கனேக்குப்
பன்னெடுங் கதிர்வாள்வீசும் பகலவன் றன்னைக்கண்ட
துன்னிருள் போலமாய்ந்து சுகமிகப் பெருகுமன்றே.

(இ-ள்.) வியாழமுஞ், சுக்கிரனும், புதனும் நோக்கப்பிறந்தவன் பாபக்கிரகங்கள் செய்யுந்தன்மைகள் ஆதித்தனைக்கண்ட யிருள்போல நீங்கும், எ-று. (15)

மாமன்சிறுவன் றாய்தந்தை மரணமைந்து யீரைந்தும், பூமன்காரி மதிவெய்யோ னிற்கிற் புகட்கோள் நோக்கிலவே, சோமற்கேழ் சேய் சனிநிற்கிற் றாய்சாஞ் சுடற்கேழ் பிதாமரணந், தீமைகோட்க ளுடலுயிரைப் பற்றி நிற்கிற் சிறுவன்சாம்.

(இ-ள்.) உதையவிராசிக்கு 5-மிடம் 10-மிடம் செவ்வாய் நிற்கில் மாமனுக்கும், சனிநிற்கில் சிசுவுக்கும், சந்திரநிற்கில் மாதாவுக்கும், சூரியனிற்கில் பிதாவுக்கும் மரணமுண்டென்க, சுபக்கிரக நோக்கில்லாமல் சந்திரனுக்கு, 7-மிடத்தில் செவ்வாயாதல், சனியாதல் நிற்கில் மாதாமரணம், ஆதித்தனுக்கு 7-மிடத்தில் செவ்வாய் சனியும் நிற்கில் பிதாமரணமென்பது, எ-று. (16)

சாருமுதயந் தனக்காரிற் கதிராயதற்கேழ் சனிசெவ்வாய்
சேரில்மகவும் பிதாவுடன்சாந் திங்களாகிற் றாயுடன்சாம்
காரியுதிப்பச் சேய்நான்கிற் கதிரோ னேழிற்கலந்திடினும்
பாரில்மகவும் பகற்கிடவாப் பாம்பினுதையம் ராக்கிடவா

(இ-ள்.) உதயத்திற்கு 6-மிடத்தில் ஆதித்தநிற்க, ஆதித்தனுக்கு 7-மிடத்தில் சனிசெவ்வாய்நிற்கப் பிள்ளையும்பிதாவும் மரணம், 6-மிடத்தில் சந்திரனிற்கத் தாயுடன் மரணம், உதையத்தில் சனிநிற்க, 4-மிடத்தில் செவ்வாய்நிற்க, 7-மிடத்தில் சூரியனிற்க சுபக்கிரகங்கள் நோக்கில்லையாகில் பிள்ளை யன்றைப்பகலே மரணமென்பது, உதையத்தே ராகு கேதுக்கள் நிற்கப் பிள்ளை அன்றிரவே மரணம், (எ-று.) (17)

கிடைத்தவுயிரோ டுடல்தருணுள் வருநாள்தீதேற் கெழுமியகோட்,படைத்தநோக்கமின்றெனினும் பாலன் மரணந் தேயுமதிக், கடுத்தவிருபாற் றீக்கோளே லன்னை புதல்வ னுடன்வீயுந், தொடுத்தகூட லராத்தீண்டிற் றேன்றுமகவு மரணமன்றே.

(இ-ள்.) சென்மலக்கினத்திலும், சந்திரலக்கினத்திலும், பாபக்கிரகங்கள் நிற்கச் சுபக்கிரகம் பாராதிருந்தால் பிள்ளைமரணமென்பது, அமரபக்ஷத்துச் சந்திரனுக்கு முன்பின் பாபக்கிரகம் நிற்கத் தாயும் பிள்ளையும் மரணம், ஜெனித்தபொழுது தூமாதி பஞ்சக்கிரகஞ்சூழ கிராணந்தீண்டில் சிசுவு அன்றேமரணம், எ-று. (18)

சொன்னபூசஞ் சித்திரை பூராடநாளில் மதிதோன் றிற், பின்னுமுதனுற் கால்னேறும் பிதாதாய்பிள்ளை மாமன்சாம், பன்னென்றென்பான் சனிசேயும் பாம்பொன் பதிலும் பிதாமரணம், பொன்னேக்காத லெட்டேழிற் புதல்வன் பொன்றுஞ் சனிசெவ்வாய்.

(இ-ள்.) பூசம், சித்திரை, பூராடம் இந்நாளில் சந்திரநிற்க முதற்காலிலே செனிக்கில் பிதாமரணம், இரண்டாங்காலில் மாதாமரணம், மூன்றுங்காலில் பிள்ளைமரணம், நாலாங்காலில் மாமன்மரணமென்பது, 11-மிடம் 9-மிடமாதல் சனிசெவ்வாய் நிற்கினும், 9-மிடத்தில் பாம்பு நிற்கினும், பிதாமரணம், 8-ல் 7-ல் சனி செவ்வாய் நிற்கில் பிள்ளைமரணம், இவையெல்லாம், சுபக்கிரகங்கள் நோக்கில்லையாகில் நன்மையில்லை, எ-று. (19)

செவ்வாய்மூன்றி லுடன்பிறந்தார் சனிசேய்வெள்ளி யெழிற்பிள்ளை, தவ்வாமதிய மேழிற்றய் தந்தைமரணங் கதிரேழி, லவ்வாயலவ னுதிப்பவதற் காறுமூன்றுந் தீய்க்கோளேல், மைவார்குழலா யீராறில் நற்கோள் நிற்கில் மகன்போமே.

(இ-ள்.) 3-மிடத்தில் செவ்வாய் நிற்கில் உடன்பிறந்தார் மரணம், 7-மிடத்தில் சனி, செவ்வாய், வெள்ளிநிற்கில் பிள்ளைமரணம், சந்திரன் 7-மிடத்தில் நிற்கில் தாய்மரணம், ஆதித்தன் 7-மிடத்தில் நிற்கில் பிதாமரணம், கடகம் உதையமாக 6-மிடத்திலும், 3-மிடத்திலும் பாபர் நிற்க 12-மிடத்தில் சுபக்கிரகம் நிற்கில் பிள்ளைமரணம், எ-று. (20)

மகவினுயிருக் காரேழில் மற்றையெட்டில் மூன்றனில்
மிகவுந்தேயு மதியுடனே வெங்கோள் நிற்பநற்கோள்கள்
திகழுநோக்க மின்றெனினுந் தேயுமதிக்கு நாலெட்டில்
நிகழுந்தீய்கோள் நின்றிடினு மெச்சமரண நிச்சயமே.

(இ-ள்.) உதயத்திற்கு 6-7-8-12-மிடத்தில் க்ஷீணசந்திரனிற்க, அவனுடனே பாபக்கிரகம்நிற்க, சுபக்கிரகம் நோக்காதொழியினும், க்ஷீணசந்திரனுக்கு 4-மிடம், 8-மிடத்தில் பாபக்கிரகம் நிற்கினும்பிள்ளை மரணம், எ-று. (21)

கதிரவற் கிரண்டீராறிற் காறிசேர் தந்தைக்காகா
மதிதனக் கிறண்டீராறில் மந்தன்சேர் மாதுர்க்காகா
கதிர்குசன் அரவங்கூடி காரகத் தானம்நிற்க [மே.
அதிதுறைத் தந்தைதாய்க்கு அரிட்டமென் றுரைக்கலா

(இ-ள்.) சூரியனுக்கு ரண்டாமிடம், அல்லது பனிரண்டாமிடம் சனிநிற்க தந்தைக்கு கெண்டம், சந்திரனுக்கு ரண்டாமிடம், அல்லது பனிரண்டாமிடம் சனி நிற்க தாய்க்குகெண்டம், சூரியன், குசன், பாம்பு இவர்கள் கூடி லக்கினத்திற்கு காரகஸ்தானமாகிய 7-ல் நிற்கில் சுபக்கிரகம் நோக்கில்லாதிருந்தால் தந்தைக்கும் தாய்க்கும் உடனே கெண்டங்கள் வரும், எ-று. (22)

நிச்சமேவு கதிருதையம் நிகழ்பாட்டதனி னிலவு
திப்ப, வச்சந்தீக்கோட் பன்னிரண்டின் மருவின்மரண
மகற்கேற்பப், பச்சைமதியுங் கதிரவனும் பாலனுயிர்க்
குப் பன்னிரண்டிற், கச்சுமுலையாய் நிற்பாரேற் கண்
போமென்றே லொருகண்போம்.

(இ-ள்.) ஆதித்தனுஞ் சந்திரனுங்கூட உதையஞ்செய்ய, அதற்குப் பன்னிரெண்டாமிடத்தில் பாபக்கிரகம் நிற்க, ஆதித்தன் அஸ்தமிக்க சந்திரனுதையமாக, உதயத்திற்கு 12-மிடத்தில் பாபக்கிரகம் நிற்க, சுபக்கிரகங்கள் நோக்காதொழியில் பிள்ளைமரணமென்க, உதையத்திற்கு 12-மிடத்தில் சந்திராதித்தர் நிற்க பிள்ளையிரண்டு கண்ணுங் கெடும், ஒருவர் நிற்கில் ஒருகண்கெடும், 12-மிடத்தில் நிற்கிறவர்களைச் சனி செவ்வாய் நோக்கிற்கண்கெடும், எ-று. (23)

ஆறு நாளில் மரணமாவதரிய.

விருத்தம்.

சீர்பெரு மிந்துக்கேழிற் செங்கதிர் செவ்வாய்கூடிற்
பேர்பெற யிருக்கக்கேளாய் பேசவே லக்கினாதி
பார்பெற பெலமேகுன்ற பார்தனிற் பிறந்தபாலன்
ஆர்பெற யாறுநாட்குட் டாவது மரணமென்னே.

(இ-ள்.) மாதுர்க்காரகனாகிய சந்திரன் நின்ற இராசிக்கு 7-ஆம் இராசியில் பிதுர்க்காரகனாகியச் சூரியனும், சகோதரக்காரகனாகிய அங்காரகனுங் கூடி அதிலிருக்க, இலக்கினாதிபதி பலன் குறைந் திருக்க சுபக்கிரகம் பாராதிருந்தால் பூமியிற் பிறந்த பாலகன் ஆறுநா ளி·ĺ மரண மாகுவான், எ-று. (1)

ஏழு நாளில் மரணமாவதரிய.

வேறு விருத்தம்.

என்னவே மேடமுதல் கன்னியாக
இயம்பவே கடசிலக் கினமதாக
பன்னவேநாலா மிடத்திற்பாபர் மீறி நிற்க
பரிவாக யலது துலாம் முதலாய்கேளாய்
மின்னவே மீனங்கடை லக்கினமாக
மிக்கதோர் சகிக்கெட்டிற் பாபர் நிற்க
உன்னிய யுலகுதனில் யுதித்தபாலன்
ஓதுவாய் யேழா நாள் சாகுமென்றே.

(இ-ள்.) மேஷவிராசிமுதல், கன்னியாவிராசி கடசியான இலக்கி னமாகவிருக்க, இலக்கினத்திற்கு, 4-ஆம் மிடத்தில் பாபக்கோட்கள் சுபக்கிரகம்பாராமல் நிற்க, அல்லது துலாம் இராசிமுதல், மீனவிராசி கடசியான இலக்கினமாக விருக்க, சந்திரன் நின்ற இராசிக்கு, 8-ஆம் இராசியில் பாபக்கோட்கள் இருக்க,உலகில் உதித்தபாலன் ஏழுநாளில் மரணமாகும், எ-று. (2)

பத்து நாளில் மரணமாவதறிய.

வேறு விருத்தம்.

என்றதோர் லக்கினத்திற் கெட்டினிற் வெய்யோ நிற்க
குன்றிட செவ்வாய்நாலிற் குந்திடச் சனியும்ரெண்டில்
நன்றெனப் பன்னிரண்டை நண்ணிட லக்கினாதி
இன்றெனப் பிறந்தபாலன் ஈரைந்து நாளிற்போமே.

(இ–ள்.) இலக்கணத்திற்கு 8-ம் இராசியில் சூரியன்யிருக்க 4-ம் இராசியில் அங்காரகனிருக்க இரண்டாம் ராசியில் சனியிருக்க, 12-ம் இராசியில் இலக்கினாதிபதியிருக்க பாரில்வந்துதித்தபாலன் பத்து நாளில் மரணமாகும், எ-று. (3)

இருபது நாளில் மரணமாவதறிய.

போமென யெட்டாம்வீட்டிற் பொரிந்தியே முடவநிற்க
ஆமென வைந்திற்செவ்வா யமர்ந்திட லக்கினத்திற்
ருமெனக் கேதுதானுந் தானுறப் பிறந்தபாலன்
நாமென யிருபாநாளில் நமன்பதி சேரும்பாரே.

(இ–ள்.) இலக்கினத்திற்கு 8-ஆம் இராசியில் சனிபகவானிருக்க 5-ஆம் இராசியில் அங்காரகனிருக்க, இலக்கினத்திற் கேது பகவானிருக்க புவியில் பிறந்த பாலன் இருபதுநாளில் மரணமாகும், எ-று.

ஒரு மாதத்திற்குள் மரணமாவதறிய.

பார்க்கவே சுபக்கோள்தானும் பரவும்லக் கினமதற்கு
ஏர்க்கவே யாறுயெட்டு யிடமதி லிருக்கப்பாவர்
தீர்க்கவே வலிவாய்பார்க்க திகழுடன் பிறந்தபாலன்
சேர்க்கவே திங்களுக்குள் சண்டனூர்சேர்வானென்னே

(இ–ள்.) இலக்கினத்திற்கு 6-ஆம் இராசியிலும், 8-ஆம் இராசியிலும் சுபக்கிரகங்கள் இருக்கபாபர்கள் பெலமுடையவராய் அவரைப்பார்க்க பிறந்தபாலன் ஒருமாதத்திற்குள் மரணமாகுவன், எ-று. (5)

என்னவே யிந்துதானு மியம்பும்லக் கினமதற்கு
மன்னிய ஆறுயெட்டில் மருவிடச் சுபரும்பாபர்
பன்னிப் பாராதிருக்கப் பாரினில் பிறந்தபாலன்
உன்னியே யொருமாதத்தில் வுயிரது நீங்குங்கூறே.

(இ—ள்.) மாதுர்க்காரகனுகிய சந்திரபகவான், இலக்கினத்திற்கு, 6-ஆம் இராசியிலும், 8-ஆம் இராசியிலும், இருக்க, பாபக் கோட்களும், சுபக்கோட்களும், அவரைப் பாராமலிருக்கப் பாரில் பிறந்த பாலன், ஒருமாதத்திற்குள் மரணமாகுவன், எ-று. (6)

கூறவே லக்கினத்திற் குலவியே கதிரேன்சுன்னும்
ஏறிடலக்கினுதி யெழில்பலம் குறைந்தே நிற்க [ன்
சேறவே செவ்வாய்பார்க்கிற் ஜெகத்தினில் பிறந்தபால
பேறவே திங்களுக்குள் போகுமே காலனூற்கே.

(இ—ள்.) இலக்கினத்தில் பிதுர்க்காரகனுகிய சூரியனும், ஆயுட்காரகனுகிய சனியும், கூடி இருக்க, இலக்கினுதிபதி பெலன் குறைந்திருக்க அவரைச் செவ்வாய்ப்பார்க்கப் பிறந்த பாலன் ஒரு மாதத்திற்குள் மரணமாகுவான், எ-று. (7)

கூற்கென லக்கினத்திற் குவிந்துமே ருகுயெட்டில்
ஏற்கென யிந்துனிற்க யிரும்பாப ரவரைப்பார்க்க
தீற்கென சுபர்நோக்கில்லா திகழுடன் பிறந்தபாலன்
ஊற்கென யொருமாதத்தி லுயிரது நீங்குஞ்சொல்லே.

(இ—ள்.) இல்க்கினத்தில் ராகுவிருக்க 6-ஆம் இராசியிலும், 8-ம் இராசியிலும், மாதுர்க்காரகனுகிய சந்திரபகவான்நிற்க அவரைப்பாபக் கோட்கள் பார்க்க, சுபக்கோட்கள் பாராதிருக்க பிறந்த பாலன் ஒரு மாதத்திற்குள் மரணமாகுவான், எ-று. (8)

சொல்லவே பாபர்தாமும் சுகமெனும் லக்கினத்திற்கு
வெல்லவே யிரண்டாறெட்டு விரையமு மேறிநிற்க
அல்லவே கதிரோனைந்தில் யமர்ந்திடப் பிறந்தபாலன்
புல்லவே திங்களுக்குள் போகுமே சண்டநூறே.

(இ—ள்.) இலக்கினத்திற்கு 2-ஆம் இராசியிலும், 6-ஆம் இராசியிலும், 8-ஆம் இராசியிலும், விரையத்தானமாகிய 12-ஆம் இராசியிலும் பாபக்கோட்களிருக்க, பிதுர்க்காரகனுகிய சூரியன் 5-ஆம் இராசியிலிருக்கச் சுபக்கிரகம்பாராதிருக்கப் பிறந்தபாலகன் ஒருமாதத்திற்குள் நமன்பதிசேர்வன், (எ-று.) (9)

இரண்டு மாதத்தில் மரணமாவதறிய.

ஊறெனவெட்டாமிட முருவிடை கோலதாக
நேறெனக் கதிரோன்சேயும் நேசமாய்க் கூடிதானும்

பாறென யதிலிருக்கப் பரிவுடன் பிறந்தபாலன்
கூறெனத் திங்கள்ரெண்டில் கூற்றனூர்சேர்வன்காணே

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ஆம் இராசி ரிஷபம், துலகமாக விருக்க, பிதுர்க்காரகனாகிய சூரியனும், சகோதரக் காரகனாகிய அங்காரகனுங் கூடி அதிலிருக்கப் பார்மீதுப் பிறந்த பாலன், இரண்டுமாதத்திற்குள் யெமபதி சேர்குவன், எ-று. (10)

காணவே லக்கினாதிக் கனமிகும் பாபர்கூடி
பூணவே லக்கினத்திற்கு பொரிந்திய யேழில்நிற்க
நாணவே பாபர்பார்க்க நலமுடன் பிறந்தபாலன்
தோணவே திங்கள்ரண்டில் தோஷமா மரணமாமே.

(இ-ள்.) இலக்கினாதிபதியும் பாபக்கோட்களும் கூடி, இலக்கினத்திற்கு, 7-ஆம் இராசியிலிருக்க அவரைப் பாபக்கிரகங்களால் பார்க்கப்படப் பிறந்த பாலன் இரண்டுமாதத்திற்குள் மரணமாவான்.

இருபது நாளில் மரணமாவதறிய.

ஆமென யிலக்கினாதி யவர்பெலங் குறைந்தேநிற்க
நாமெனப் பாபர்தானும் லக்கின மதனிலேற
தாமென கிராணந்தன்னில் தானென யுதித்தபாலன்
போமென யிருபாநாளில் பிள்ளையும் சாகுமென்னே.

(இ-ள்.) இலக்கினாதிபதி பெலன் குறைந்திருக்க, இலக்கினத்தில் பாபக்கோட்கள் ஏறினிற்க கிராணத்தில் பிறந்த பாலன் இருபது நாளில் மரலியூர் சேர்குவன், எ-று. (12)

மூன்று மாதத்தில் மரணமாவதறிய.

என்னவே லக்கினத்திற் கேழதா மிடத்திற்றானும்
இன்னிய குருவினோடு யிலக்கினாதி பதியுங்கூடி
பன்னிய சத்துருவீட்டில் பரிவுட னிருக்கவந்தோன்
மன்னிய திங்கள்மூன்றில் மரணமா முறைசெய்வாயே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 7-ஆம் இராசியில் புத்திரகாரகனாகிய வியாழபகவானும், இலக்கினாதிபதியுங் கூடி சத்துரு ஸ்தானத்திலிருக்க பாரில்பிறந்தபாலன் மூன்றுமாதத்தில் மரணமாகுவன், எ-று.

நாலு மாதத்திற் மரணமாவதரிய.

வாயென லக்கினதி வரியபா பர்களுங்கூடி
நேயென வைந்தாம்வீட்டில் துலங்கிட யவரைத்தாமும்
சேயென சுபர்நோக்காமல் நின்றிடப் பிறந்தபாலன்
ஆயென திங்கள்நாலில் யவனுயிர் போகுஞ்சாற்றே.

(இ-ள்.) இலக்கினதிபதியும் பாபக்கோட்களுங்கூடி இலக்கினத்திற்கு ஐந்தாம் இராசியிலிருக்க, அவரைச் சுபக்கிரகங்கள் பாற்காதிருக்க பூமியின்கண் உதித்தபாலன், நாலுமாதத்தில் மரணமாகுவன்.

சாற்றவே லக்கினதி சதுற்பாபர் பெலமேகுன்ற
ஏற்றதோர் லக்கினதி யெட்டினி லேறினிற்க
தோற்றமாய் பாபர்பார்க்க தொல்புவி வந்தபாலன்
போற்றவே திங்கள்நாலிற் போமவ னுயிர்தான்கூறே.

(இ-ள்.) இலக்கினதிபதியும் பாபக்கோட்களும் பெலன் குறைந்திருக்க, இலக்கினதிபதி இலக்கினத்திற்கு 8-ஆம் இராசியிலிருக்க, அவரைப் பாபக்கிரகங்கள் பார்க்கப் பாரில் பிறந்தப்பாலன் நாலுமாதத்திற்குள் மரணமாகுவான், எ-று. (15)

ஆறு மாதத்தில் மரணமாவதரிய.

கூறவே லக்கினதிக் கொடியதோர் பாபர்தாமும்
நேறவே பலமேகுன்றி நின்றிட யவரைத்தாமும்
ஏறவே சுபர்பாரும லிருந்திடப் பிறந்தபாலன்
ஆறவே திங்களாறில் அவனுயிர் போகும்பாறே.

(இ-ள்.) இலக்கினதிபதியும் பாபக்கிரகங்களும் பெலன் குறைந்திருக்க, அவரை சுபக்கிரகங்கள் பாருதிருக்க பிறந்த பாலன் ஆறு மாதத்தில் மரணமாகுவான், எ-று. (16)

ஏழு மாதத்தில் மரணமாவதரிய.

பாறென யாராமாதிப் பரவியே யெட்டாமாதி
தேறெனச் சேயுங்கூடி நின்றிட லக்கினத்தே
பேறென லக்கினதி பெலன்குன்றிப் பிறந்தபாலன்
ஏறெனத் திங்களேழில் யேமனூர் போவான்மாதே.

(இ-ள்) இலக்கிணத்திற்கு 6 - ஆம் இராசியாதிபனும், 8-ஆம் இராசி யாதிபனும், சகோதரக்காரகனுகிய அங்காரகன் இவர்கள் மூவருங்கூடி இலக்கிணத்திலிருக்க, இலக்கினுதிபதி பெலன் குறைந் திருக்கப் பிறந்தபாலன் ஏழுமாதத்தில் மரணமாகுவான், எ-று. (17)

எட்டு மாதத்தில் மரணமாவதரிய.

மாதென லக்கினத்திற்கு மறியவே சொல்லக்கேளாய்
போதென யாறுயெட்டுப் பனிரண்டா மிடத்திற்றனும்
தீதெனப் பாபர்நிற்கத் திகழுடன் பிறந்தப்பாலன்
ஏதெனத் திங்களெட்டில் யேமனூர்சார்வான்சொல்லே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 6-ஆம் இராசியிலும், 8-ஆம் இராசியிலும், 12-ஆம் இராசியிலும் பாபக்கோட்கள் ஏறிநிற்கப் பாரில் பிறந்த பாலன் எட்டாமாதத்தில் மரணமாகுவான், எ-று. (18)

சொல்லவே லக்கினத்திற்கு சேரயா றெட்டிராறில்
இல்லவேலக்கினுதி யிராகுவு மொன்றுய்க்கூடி
புல்லவே யிருக்கத்தாமும் புவிதனில் பிறந்தபாலன்
வெல்லவே திங்களெட்டில் விட்டுயிர் மாள்வன்காணே.

(இ-ள்.) இலக்கிணத்திற்கு, 6-ஆம் இராசியினும் 8-ஆம் இராசியினும் 12-ஆம் இராசியினும், இலக்கினுதிபதியும், இராகுவுங்கூடி அத்தானங்களிலிருக்க பிறந்தபாலன் எட்டாம்மாதத்தில் மரணமாகுவான், எ-று. (19)

ஒன்பதா மாதத்தில் மரணமாவதரிய.

காணவே செவ்வாய்நாலில் கருதிய ராகுயெட்டாம்
பூணவே முடவன்றனும் பனிரண்டா மிடத்திலேற
வேணவே புவியிற்றனும் விளங்கிடப் பிறந்தபாலன்
நாணவே நவமாந்திங்கள் நமன்பதிச் சேர்குவானே.

(இ-ள்.) சகோதரக் காரகனுகியச் செவ்வாய் இலக்கினத்திற்கு 4-ஆம் இராசியிலிருக்க, இராகு 8-ஆம் இராசியிலிருக்க, சனி 12-ஆம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் ஒன்பதாமாதத்தில் மரணமாகுவான்.

பத்தா மாதத்தில் மரணமாவதரிய.

வாளென லக்கினத்திற்கு வரையுமெட் டாறுதன்னில்
தானென யிந்துநிற்க தன்னுடன் பாபர்கூட

நாமென நண்ணிப்பார்க்க நலமுடன் பிறந்தபாலன்
மாமென திங்கள்பத்தில் மரலியூர் சேர்வான்கூறே.

(இ-ள்.) இலக்கணத்திற்கு, 8-ம் இராசியிலும், 6-ம் இராசியிலும், சந்திரனிருக்க, அவருடன் பாபர்கள் கூடிட அல்லதுபார்க்கப் பிறந்தபாலன் பத்தாம்மாதத்தில் மரணமாகுவான், எ-று. (21)

கூறவே மூடவன்றானுங் குலவிலக்கினத்தில் நிற்க
சேறவே கதிரோனிந்துஞ் செவ்வாயு மேழில்மேவ
பேறவே புவியின்மீது பிறந்ததோர் பாலன்றானும்
மாறவே திங்கள்பத்தில் மரணமு மாவானென்னே.

(இ-ள்.) ஆயுட்காரகனாகிய சனி இலக்கினத்திலிருக்க, பிதுர்க்காரகனாகிய சூரியனும், மாதுர்க்காரகனாகிய சந்திரனும், சகோதரக்காரகனாகிய அங்காரகனும், இலக்கினத்திற்கு 7-ம் இராசியிலிருக்க பிறந்தபாலன் பத்தாம்மாதத்தில் மரணமாகுவான், எ-று. (22)

பதினொரு மாதத்தில் மரணமாவதரிய.

என்னவே மீனந்தானு மெழிலுரும் லக்கினமாக
மன்னிய கேதுசேயும் மருவிட நாலில்தானும்
பன்னிய கதிரோனேழில் பதிந்திடப் பிறந்தபாலன்
கன்னிய பதினொருந்திங்கள் காலனூர் சேர்வான்பாறே.

(இ-ள்.) இலக்கினம் மீனராசியாக, இலக்கினத்திற்கு 4-ம் இராசியில், கேதும், செவ்வாயுமிருக்க, சூரியன் 7-ம் இராசியிலிருக்க பிறந்தபாலன் பதினொருமாதத்தில் மரணமாகுவான், எ-று. (23)

ஒரு வருடத்தில் மரணமாவதரிய.

பார்க்கவே யெட்டினோடு பகரும்லக் கினத்திற்றானும்
ஏர்க்கவே பாபர்தானும் யிருந்திட யவரைக்கேளாய்
தீர்க்கவே சுபர்பாருமற் றானுறப் பிறந்தபாலன்
ஆர்க்கவே வருடமொன்றில் அவனுயிர் நீங்கும்பாறே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசியினும் இலக்கினத்தினும், பாபக்கோட்களிருக்க, அவரைச்சுபக்கோட்கள், பாராதிருக்கப் பிறந்தபாலன் ஒருவருடத்தில் மரணமாகுவான், எ-று. (24)

பாறென யெட்டெலது பகர்நிரையா யிருக்க
காறெனச் செவ்வாய்தானு காணவே யதனில்மேவ
பாறெனத் தரணிதன்னில் தானும்வந் துதித்தபாலன்
எறென வருடமொன்றில் யேமனூர் யேகுவானே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசி அல்லது துலாம் இராசியாகயிருக்க அதில் செவ்வாயிருக்க பிறந்தபாலன் ஒருவருடத்தில் மரணமாகுவான், எ-று. (25)

இரண்டு வருடத்தில் மரணமாவதரிய.

வேறு விருத்தம்.

வானென முடவனுமே வக்கிரமாக
வரியபுத னோடுமே செவ்வாய்க்கூடித்
தானென யெட்டஞ்சி யாறீருறிற்
ருன்வரு மேயிருக்க யின்னங்கேளாய்
மானென லக்கினமொடு யிரண்டிற்றுனும்
மருவியே சேயிருக்க யவரைத்தானும்
நானென சுபர்பார்க்கா திருக்கவந்தோன்
நாடிய வருடம்ரண்டில் நமனூர்போவான்.

(இ-ள்.) ஆயுட்காரகனுகிய சனிபகவான் வக்கிரமாகயிருக்க வித்தியாக்காரகனுகிய புதனும், சகோதரக்காரகனுகிய அங்காரகனுங்கூடி இலக்கினத்திற்கு 8-ம் இராசியிலும், 5-ம் இராசியிலும், 6-ம் இராசியிலும், 12-ம் இராசியிலும் இருக்க, இலக்கினத்தினும் 2-ம் இராசியினும் செவ்வாயிருக்க அவரை சுபக்கிரகங்கள் பாருதிருக்க பிறந்தபாலன் இரண்டு வருடத்தில் மரணமாகுவான், எ-று. (26)

வேறு.

போமென மேடந்தேளில் பொருந்தியே முடவனிற்க
சேமென யாறுயெட்டில் செவ்வாயு மிருந்துவாழ
நாமெனச் சுபர்நோக்கன்றி நண்ணியே பிறந்தபாலன்
தாமெனவருடம்ரண்டில் தான்சாகு மென்றுசெப்பே.

(இ-ள்.) மேஷவிராசியிலும், விருட்சிகவிராசியிலும், ஆயுட்காரகனுகிய சனி பகவானிருக்க, இலக்கினத்திற்கு 6-ம் இராசியிலும், 8-ம் இராசியிலும், சகோதரக்காரகனுகிய அங்காரகனிருக்க, அவரை சுபக்கிரகங்கள் பார்க்காதிருக்கப் பிறந்தபாலன் இரண்டு வருடத்தில் மரணமாகுவான், எ-று. (27)

செப்பவே மேடந்தேளும் சேரயெட்டாம் வீடாக
வெப்பவே முடவன்றனும் வக்கிரத் தோடுநிற்க
மெப்பவே செவ்வாய்பார்க்க மேலெனப் பிறந்தபாலன்
கப்பவே வருடம்ரண்டில் காலனூர் சேர்வான்காணே.

(இ-ள்.) மேஷவிராசியும், விருட்சிகவிராசியும், இலக்கினத்திற்கு 8-ம் இராசியாகவிருக்க, சனிவக்கிரித்து நிற்க அவனை அங்காரகன் பார்க்கப் பிறந்தபாலன் இரண்டுவருடத்தில் மரணமாகுவான், எ-று.

மூன்று வருடத்திற்குமுன் மரிப்பதறிய.

காணவே சசியுஞ்சுன்னுங் கருதுமூன் றதனில்நிற்க
நாணவே யவரைப்பாபர் நாடியே நீடிப்பார்க்க
பூணவே கிராணந்தன்னில் புகழுடன் பிறந்தபாலன்
தோணவே வருடமூன்றுக் குள்ளவன் மரணமாவான்.

(இ-ள்.) மாதுர்க்காரகனாகியச் சந்திரனும், ஆயுட்காரகனாகியச் சனியும், இலக்கினத்திற்கு 3-ம் இராசியிலிருக்க, அவர்களைப்பாபக்கிரகங்கள் பார்க்க கிராணத்தில் பிறந்தபாலன் மூன்றுவருடத்திற்குள் மரணமாகுவான், எ-று. (29)

மூன்று வருடத்தில் மரணமாவதறிய.

ஆகவே யாகுதேளும் யறியயெட் டிடமேயாக
பாகமா யதனிற்பொன்னும் பதிந்திட லக்கினத்தில்
தாகமாய் குளிகன்வாழ தானென யுதித்தபாலன்
மாகமாம் வருடம்மூன்றில் மரணமு மாவான்விள்ளே.

(இ-ள்.) மேஷவிராசியும், விருட்சிகவிராசியும், இலக்கினத்திற்கு 8-ம் இராசியாகவிருக்க, அதில் குருநிற்க, இலக்கினத்தில் குளிகனிருக்கப் பிறந்தபாலன் மூன்றுவருடத்தில் மரணமாகுவான், எ-று. (30)

விள்ளவே சேய்க்குயெட்டில் வியாழனு யிருக்கக்கேளாய்
தெள்ளிய கதிரோன்சேயுந் திகழுடன் கூடிநிற்க
உள்ளிய யிந்துபார்க்க வுலகினில் பிறந்தபாலன்
கொள்ளவே வருடமூன்றில் குறிகியே மரணமாவான்.

(இ-ள்.) சகோதரக்காரகனாகியச் செவ்வாய்நின்ற இராசிக்கு 8-ம் இராசியில் புத்திரக்காரகனாகிய வியாழனிருக்க, சூரியனும், செவ்வாயுங்கூடி ஒருராசியிலிருக்க அவர்களைச்சந்திரன்பார்க்கப் பிறந்தபாலன் மூன்று வருடத்தில் மரணமாகுவான், எ-று. (31)

நாலு வருடத்தில் மரணமாவதறிய.

ஆவெனத் தேய்வுமிந்து யமர்ந்திட நாலாம்வீட்டில்
ஏவென யிந்துக்காறில் யிலக்கினத் ததிபனிற்கத்
தாவென செவ்வாய்பார்க்க தரணியி லுதித்தபாலன்
நாவென நாலாமாண்டில் நமன்பதி சேர்வான்மாதே.

(இ-ள்.) தேய்வு பிறைசந்திரன் இலக்கினத்திற்கு 4-ம் இராசியிலிருக்க, சந்திரன் நின்ற இராசிக்கு 6-ம் இராசியில் இலக்கினாதிபதியிருக்க, அவரைச் செவ்வாய்ப்பார்க்கப் பிறந்தபாலன் நான்காவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (32)

மாதென லக்கினத்திற்கு மரிவிய யாறுயெட்டில்
போதென சந்திரன்தானும் பொருந்தியே யதனில்நிற்க
தோதெனப்பாபர்சுபர்கள் துலங்கிடப் பார்க்கவந்தோன்
ஓதென வருடம்நாலில் வுயிரது நீங்குவானே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 6-ம் இராசியினும், 8-ம் இராசியினும், மாதுர்க்காரகனாகியச் சந்திரனிருக்க அவரைப்பாபரும் சுபரும்பார்க்க பிறந்தபாலன் நாலாம் வருடத்தில் மரணமாகுவான், எ-று. (33)

ஐந்தாவது வருடத்தில் மரணமாவதறிய.

வானென லக்கினத்திற்கு வரையுமோ றெட்டிற்றானும்
நானென சுபக்கோள்நிற்க நலமுறும் லக்கினத்தை
தானென சுபரேபார்க்க தான்புவி யுதித்தபாலன்
ஆனென யாண்டுவைந்தில் யவனுயிர் நீங்கும்பாறே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசியில், சுபக்கிரகங்களிருக்க, இலக்கினத்தைச் சுபக்கிரகங்களை பார்க்க பிறந்தபாலன் ஐந்தாம் வருடம் மரணமாகுவான், எ-று. (34)

பாறென யாறிருரும் பார்க்கவே கடகமாக
சாறென புதனுமேவ சந்திரனவரைப்பார்க்க
சேறென லக்கினத்தில் சேயுறப் பிறந்தபாலன்
நேறென வருடமைந்தில் நிலைபிரிந்திரப்பான்சொல்லே

(இ-ள்.) 6-ம் இராசி 12-ம் இராசி கடகவிராசியாக அதில் புதன் இருக்க அவரை சந்திரன்பார்க்க இலக்கினத்தில் செவ்வாயிருக்கப் பிறந்தபாலன் ஐந்தாம் வருடத்தில் மரணமாகுவான், எ-று. (35)

ஆறுவது வருடத்தில் மரணமாவதரிய.

சொல்லவே சனியும் வெய்யோன் சந்திரன் ருகுங்கூடி
புல்லவே யாறுயெட்டுப் பனிரண்டா மிடமேவாழ
வல்லவே சுபர்பாராமல் வாழ்ந்திடப் பிறந்தபாலன்
தொல்லையாமாருமாண்டிற்ருேஷமாய்மாள்வானென்னே

(இ-ள்.) ஆயுட்காரகனுகியச் சனியும், பிதுர்க்காரகனுகிய, சூரியனும் இராகுவும், மாதுர்க்காரகனுகிய சந்திரனும்கூடி இலக்கினத்திற்கு, 6-ம் இராசியிலும், 8-ம் இராசியிலும், 12-ம் இராசியிலும், இருக்க அவரை சுபக்கோள்கள் பாருதிருக்கப் பிறந்தபாலன் ஆரும், வருடத்தில் மரணமாகுவான், எ-று. (36)

என்னவே யைந்தாம்வீட்டி லிருந்திட ராகுதானும்
பன்னிய பாபர்தானும் பலனுறக் குருவுங்கேளாய்
கன்னிய நாலில்மேவ காளையும் பிறப்பானுகில்
மன்னிய யாண்டியாரில் மரணமா மென்றுசாற்றே

(இ-ள்.) இராகு இலக்கினத்திற்கு 5-ம் இராசியிலிருக்க, பாபர் வலுவாகயிருக்க, வியாழம் 4-ம் இராசியிலிருக்கப் பிறந்தப்பாலன் ஆறுவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (37)

ஏழு வருஷத்திற்குமுன் மரணமாவதரிய.

சாற்றவே கதிர்சுன்சேயுஞ் சார்புற லக்கினமேவ
ஏற்றவே புகர்க்குயேழில் யிந்துகே வலனுய்நிற்க
போற்றவே குருபாருமல் புவிதனி லுதித்தபாலன்
தோற்றவேயாண்டேழுக்குள் தோஷமாய்மரணம்நேரும்

(இ-ள்.) பிதுர்க்காரகனாகிய சூரியனும், ஆயுட்காரகனாகிய சனியும், சகோதரக்காரகனாகிய செவ்வாயும், இலக்கினத்திலிருக்க, களத்திரக்காரகனாகிய சுக்கிரன் நின்ற இராசிக்கு 7-ம் இராசியில் சந்திரன் பெலன் குறைந்து இருக்க அவரை குரு பாராதிருக்கப் பிறந்தபாலன் ஏழுவருடத்திற்கு முன் மரணமாகுவான், எ-று. (38)

ஏழாவது வருடத்தில் மரணமாவதறிய.

நேரவே லக்கினத்தில் நிலவுசேய் முடவன்ராகு
கோரவே யிவர்கள்கூடிக் குலவியே யிருந்துவாழ
தேரவே புவியின்மீது தானும்வந் துதித்தபாலன்
காரவே வருடமேழிற் காலனூ ரேகுவானே.

(இ-ள்.) இலக்கினத்தில் மாதுர்க்காரகனாகிய சந்திரனும், சகோதரக்காரகனாகிய செவ்வாயும், ஆயுட்காரகனாகிய சனியும், இராகுவும் இவர்கள் கூடி இலக்கினத்திலிருக்கப் பிறந்தபாலன் ஏழாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (39)

வானென லக்கினத்திற்கு வரியவே சொல்லக்கேளாய்
பானென முன்பின்னாக பாபர்கள் பதியாய்நிற்க
ஏனென சுபர்நோக்காம லிருக்கவே பிறந்தபாலன்
கானென வாண்டுயேழில் காலனூர்ச் சேர்வான்பாரே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு முன்னும் பின்னுமாக பாபக்கோட்கள் நிற்க அவரைச் சுபக்கோட்கள் பாராதிருக்க பிறந்தபாலன், ஏழாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (40)

எட்டாவது வருடத்தில் மரணமாவதறிய.

பார்க்கவே லக்கினந்தானு பகர்துலா மிதுனமாக
சேர்க்கவே யெட்டாம்வீட்டில் சுக்கிர னேறிநிற்க
ஏர்க்கவே பாபர்நோக்கே லில்லையென பிறந்தபாலன்
கோர்க்கவேயாண்டுயெட்டில்கூத்தனூர்சேர்வான்காணே

(இ-ள்.) இலக்கினம் துலாம் இராசி, அல்லது மிதுனவிராசியாகவிருக்க, இலக்கினத்திற்கு 8-ம் இராசியில் களத்திரக்காரகனாகிய சுக்கிரனிருக்க, அவரைப்பாபர்கள் பாராதிருக்க எட்டாவது வருடத்தில் எமன்பதி சேர்குவன், எ-று. (41)

காணவே சந்திரந்தானுங் கருதிய லக்கினத்திற்கு
பூணவே யாறுயெட்டில் பொரிந்தியே யமர்ந்துநிற்க
வேணவே சுபர்கள்பார்க்க விளங்கவே பிறந்தபாலன்
நாணவே யாண்டுயெட்டில் நமன்பதி சேர்வனென்னே

(இ-ள்.) மாதுர்க்காரகனுகியச் சந்திரன் இலக்கினத்திற்கு 6-ம் இராசியிலும், 8-ம், இராசியிலும் இருக்க அவரைச் சுபக்கிரகங்கள் பார்க்கப்பிறந்தபாலன் எட்டாவது வருடத்தில் எமன்பதியைப்போய் சேர்குவான், எ-று. (42)

என்னவே யிந்துங்கேது மெழிலுடன் கூடிக்கேளாய்
மன்னவே யேழாம்வீட்டில் மருவிட பாபர்மூன்றில்
இன்னவே புவியிற்ருனு யினிமையாய் பிறந்தபாலன்
பன்னவே யாண்டுயெட்டில் பாலனு மரிப்பான்கூறே.

(இ-ள்.) மாதுர்க்காரகனுகியச் சந்திரனும், கேதுபகவானும் கூடி இலக்கினத்திற்கு, 7-ம் இராசியிலிருக்க, 3-ம் இராசியில் பாபக்கோட்க ளிருக்க பிறந்தபாலன் எட்டாவதுவருடத்தில் மரணமாகுவான் எ-று

ஒன்பதாம் வருடத்தில் மரணமாவதறிய.

கூறவே கதிரோனிந்தும் குலவுமெட் டாதிசன்னும்
பாறவே கூடிதானும் பதிஞேரும் வீட்டில்நிற்க
காறவே புவியிற்ருனுங் காணவே பிறந்தபாலன்
பேறவே நவமாமாண்டில் போவனே காலநூற்கே.

(இ-ள்.) பிதுர்க்காரகனுகியச் சூரியனும், மாதுர்க்காரகனுகியச் சந்திரனும், இலக்கினத்திற்கு, 8-ம் இராசியாதிபனும், ஆயுட்காரகனுகிய சனியும் கூடி இலக்கினத்திற்கு, 11-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் ஒன்பதாவது வருடத்தில் நமன்பதிச் சேர்குவான், எ-று.

ஊர்க்கவே கதிருமிந்து முற்றதோர் சேயுங்கூடி
ஆர்க்கவே லக்கினத்திற்கு ஐந்தெனும் வீட்டில்நிற்க
நீர்க்கவே சுபர்நோக்காமல் நின்றிடப் பிறந்தபாலன்
ஏர்க்கவே நவமாமாண்டில் யெமனூ றேகுவானே.

(இ-ள்) பிதுர்க்காரகனாகியச் சூரியனும், மாதுர்க்காரகனாகியச் சந்திரனும், சகோதரக்காரகனாகிய அங்காரகனும், இலக்கினத்திற்கு 5-ம் இராசியிலுமிருக்க அவரைச்சுபக்கோட்கள் பாராதிருக்கப் பிறந்த பாலன் ஒன்பதாவது வருடத்தில் கூற்றனூர் ஏகுவான், எ-று. (45)

வானென லக்கினந்தானும் வருஞ்சர்ப்ப திரேகாணமாக
தானென சனியும்பாபர் தயவுடன் கூடிநிற்க
நானெனப் புவியிற்றானும் நலமுடன் பிறந்தபாலன்
ஏனென நவமாமாண்டில் யிறப்பனென்றுரைசெய்வாயே.

(இ-ள்.) இலக்கினம் சர்ப்பத்திரேகாணமாக இருக்க, ஆயுட்காரகனாகியச் சனியும், பாபரும் கூடியிருக்கப் பிறந்தபாலன் ஒன்பதாம் வருடத்தில் மரணமாகுவான், எ-று. (46)

பத்தாம் வருடத்தில் மரணமாவதறிய.

செய்யவே கதிருமிந்தும் சேர்ந்தேழா மிடத்தில்நிற்க
எய்யவே யிராகுபார்க்க யிலக்கினாதி ராகுங்கூடி
துய்யவே யிருக்கத்தானுந் துலங்கிட பிறந்தபாலன்
மையவே யாண்டுபத்தில் பட்டுயிர் மாள்குவானே.

(இ-ள்.) பிதுர்க்காரகனாகியச் சூரியனும், மாதுர்க்காரகனாகியச் சந்திரனும், இலக்கினத்திற்கு 7-ம் இராசியிலிருக்க. அவரைப்பாபர் பார்க்க, இலக்கினாதிபதியும், இராகுவுங்கூடியிருக்கப் பிறந்தபாலன், பத்தாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (47)

வாகென யிந்துநின்ற வரைமிராசி கேந்திரத்தில்
பாகென யிராகுகேதுப் பரிவுட னமர்ந்துநிற்க
ஏகெனப் பாபர்நோக்கா திருந்திடப் பிறந்தபாலன்
வாகெனப் பத்தாமாண்டில் சுதனுமேமரிப்பானென்னே

(இ-ள்.) மாதுர்க்காரகனாகியச் சந்திரனுடைய கேந்திரத்தில் இராகுவேனும், கேதுவேனும் இருக்க அவரைப் பாபர் பாராதிருக்கப் பிறந்தபாலன் பத்தாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (48)

பதினேறுவது வருடத்தில் மரணமாவதரிய.

என்னவே லக்கினாதி பதி நின்ற ராசிக்கேழில்
மன்னவே கேதுநிற்க மரிவிட நாலில்வெய்யோன்
உன்னியே வுலகுதன்னில் உதையமாய்ப் பிறந்தபாலன்
கன்னவேபதினேருமாண்டில்காலனூர்போவான்மாதே.

(இ-ள்.) இலக்கினாதிபதி நின்ற இராசிக்கு 7-ம் இராசியில் கேது இருக்க, 4-ம் இராசியில் பிதுர்க்காரகனாகிய சூரியனிருக்கப் பிறந்த பாலன் பதினேறுவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (49)

மாதென யிந்தும்வெய்யோன் மகிழுடன் கூடிதானும்
போதென லக்கினத்தில் பொருந்தியே யமர்ந்துநிற்க
ஏதெனச் சுபர்நோக்காம லிருந்திடப் பிறந்தபாலன்
ஈதெனப்பதினேருமாண்டில்யிறப்பனென்றறைகுவாயே.

(இ—ள்.) மாதுர்க்காரகனாகியச் சந்திரனும், பிதுர்க்காரகனாகிய சூரியனும் கூடி இலக்கினத்திலிருக்க அவரைச்சுபர்கள் பாராதிருக்கப் பிறந்தபாலன் பதினேருவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. ()

பனிரண்டாவது வருடத்தில் மரணமாவதரிய.

வேறு விருத்தம்.

வாயென ரிஷபமொடு நிரையேதானும்
வளம்பெருகும் லக்கினத்திற் கேழதாக
தேயெனத் தேய்வுயிந்து யதிலேநிற்க
திகழாக லக்கினத்திற் காறும்வீட்டில்
தோயெனச் செவ்வாயு மிருக்கத்தானும்
தொல்புவியில் வந்துதித்தப் பாலன்றானும்
ஆயென யாண்டுபனி ரண்டிலேதான்
அவனுயிற் போகுமென யறைகுவாயே.

(இ-ள்.) ரிஷபவிராசியும், துலாம் இராசியும் இலக்கினத்திற்கு 7-ம் இராசியாகவிருக்க அதில் தேய்பிரை சந்திரனிருக்க, இலக்கினத்திற்கு 6-ம் இராசியில் அங்காரகனிருக்கப் பிறந்தபாலன் பனிரண்டாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (51)

வேறு விருத்தம்.

அரையவே லக்கினந்தன்னி லாதிற்ற னிந்துநிற்க
நிரையவே யவரைத்தாமும் நீடிய சுபர்பாரமல்
குரைபட யிருக்கத்தானும் குலவிடப் பிறந்தபாலன்
மரையவே பன்னிரண்டா மாண்டினி லிறப்பான்பாரே.

(இ-ள்.) இலக்கினத்தில் பிதுர்க்காரகனுகியச்சூரியனும், மாதுர்க் காரகனுகியச் சந்திரனும் கூடியிருக்க அவரைச் சுபர்கள் பாரு திருக்கப் பிறந்தபாலன் பனிரண்டாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று.

பார்க்கவே யிராகுதானும் பண்புள லக்கினத்திற்கு
தீர்க்கவே யேழாமிராசி தனிலுற கதிர்சுன்பாபர்
ஏர்க்கவே யவரைப்பார்க்க யெழிலுடன் பிறந்தபாலன்
கோர்க்கவே யீருருண்டில் கூற்றனு றேகுமென்னே.

(இ-ள்.) இராகு இலக்கினத்திற்கு ஏழாம் இராசியிலிருக்க, பிதுர்க்காரகனுகிய சூரியனும், ஆயுட்காரகனுகியச் சனியும், அவரைப்பார்க் கப் பிறந்தபாலன் வருடம் பனிரண்டில் மரணமாகுவான், எ-று. (53)

பனிரண்டாம் வருடம் வரும் கண்டமறிய.

என்னவே லக்கினுதி யெழில்பதியோன் றன்னேடே
குன்னவே யெட்டாமாதிக் கூடிகேந் திரத்திலேற
பன்னவே புவியிற்ருனும் பண்புடன் பிறந்தபாலன்
கன்னவே யீருருண்டில் கெண்டமும் வாய்க்குமாதே.

(இ-ள்.) இலக்கினுதிபதியும், இலக்கினத்திற்கு 8-ம் இராசியாதி பதியும்கூடி கேந்திரத்திலிருக்க பிறந்த பாலனுக்குப் பனிரண்டாம் வருடத்தில் கெண்டம் நேர்ந்து மரணமாகுவான், எ-று. (54)

பதின்மூன்ரும் வருடத்தில் மரணமாவதறிய.

மாதெனக் கதிருமிந்தும் மரிவிய செவ்வாயோடு
ஓதென சனியுங்கூடி யொருமித்து யிருக்கத்தானும்
தோதெனப் புவியில்வந்து தோன்றிய பாலன்கேளாய்
ஏதெனப் பதின்மூன்ருண்டில் யெமன்பதி சேர்குவானே

(இ-ள்.) பிதுர்க்காரகனாகிய சூரியனும், மாதுர்க்காரகனாகிய சந்திரனும், சகோதரக்காரகனாகிய அங்காரகனும், ஆயுட்காரகனாகிய சனியும், ஒன்றாகக்கூடியிருக்கப்பிறந்தபாலன் பதின்மூன்றாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (55)

சேரவே லக்கினத்தில் சிறந்தயெட் டாதி நிற்க
கூரவே யாறுநாலிற் குலவிய செவ்வாய் நிற்க
பேரவே புவியிற்றானும் பிறந்ததோர் பாலகன்றான்
நேர்பதி மூன்றுமாண்டில் நிந்தையாய் மரிப்பன்காணே.

(இ-ள்.) இலக்கினத்தில் இலக்கினத்திற்கு 8-ம் இராசியாதிபனிருக்க, இலக்கினத்திற்கு 6-ம் இராசியிலும் 4-ம் இராசியிலும், சகோதரக்காரகனாகிய அங்காரகனிருக்கப் பிறந்தபாலன் பதின்மூன்றாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (56)

பதினாலாவது வருடத்தில் மரணமாவதறிய.

காணவே மிதுனங்கன்னி சந்திரனுக் கேழதாக
பூணவே கதிருமாரல் பொருந்தியே கூடி நிற்க
தோணவே புவியிற்றானும் தோன்றியப் பாலகன்றான்
நாணவே பதிநாலாமாண்டில் நமன்பதி யடைகுவானே.

(இ-ள்.) மிதுனவிராசியும், கன்னியாவிராசியும், சந்திரன் நின்ற இராசிக்கு 7-ம் இராசியாகயிருக்க, பிதுர்க்காரகனாகிய சூரியனும், சகோதரக்காரகனாகிய அங்காரகனும் கூடியிருக்கப் பிறந்தபாலன் பதிநாலாமாண்டில் மரணமடைகுவான், எ-று. (57)

பதினைந்தாவது வருடத்தில் மரணமாவதறிய.

அடையவே தேய்வுமிந்து மலகதிர் சேயுங்கூடி
வடிவுள லக்கினத்திற்கு வைந்தெனு மிடத்தில் நிற்க
படியினில் விளங்கவேண்டி பரிவுடன் பிறந்தபாலன்
இடியெனப் பதினைந்தாமாண்டி லிறப்பனென் றறைகு
[வாயே.

(இ-ள்.) தேய்பிறைச் சந்திரனும், சூரியனும், செவ்வாயுங்கூடி, இலக்கினத்திற்கு 5-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் பதினைந்தாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (58)

5

அரையவே லக்கினாதி யானதோர் லக்கினத்திற்கு
திரையவே மூன்று ஆறு நீள்பனி ரண்டில்மேவ
இரையவே பாபருமெட் டேறிட சுபர்நோக்கில்லா
வரையவே பிறந்தபாலன் பதினறு மாண்டிற்சாகும்.

பதினாறுவது வருடத்தில் மரணமாவதறிய.

(இ-ள்.) இலக்கினாதிபதி இலக்கினத்திற்கு 3-ம் இராசியிலும், 6-ம் இராசியிலும், 12-ம் இராசியிலுமிருக்க, பாபக்கோட்கள் இலக்கினத்திற்கு 6-ம் இராசியிலும், 8-ம் இராசியிலும், இருக்க அவர்களை சுபக்கிரகங்கள் பாராமலிருக்கப் பிறந்தபாலன் பதினாறுவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (59)

ஏகவே பாபர்தாமும் சார்புரும் லக்கினத்திற்கு
ஆகவே யாறுமெட்டில் யமர்ந்திட லக்கினாதி
பாகவே பத்தில்நிற்கப் பரிவுடன் பிறந்தபாலன்
தாகமாய் பதினாறுண்டில் தானவ னிறப்பான்சொல்லே.

(இ-ள்.) பாபக்கோட்கள் இலக்கினத்திற்கு 6-ம் இராசியிலும், 8-ம் இராசியிலும் இருக்க இலக்கினாதிபதி இலக்கினத்திற்கு 10-ம் இடத்திலிருக்கப் பிறந்தபாலன் பதினாறும் வருடத்தில் மரணமாகுவான், எ-று. (60)

சொல்லவே லக்கினாதி சோர்வதாய் பெலமேகுன்ற
புல்லவே சந்திரன்தானும் பனிரண்டா மிடத்தில்நிற்க
வெல்லவே புவியின்மீது விளங்கவே பிறந்தபாலன்
செல்லவே பதினாறுண்டில் சேர்வனே நமனூர்நாடி.

(இ-ள்.) இலக்கினாதிபதி பெலன் குறைந்திருக்க மாதுர்க்காரகனாகிய சந்திரன் இலக்கினத்திற்கு 12-ம் இராசியில் இருக்கப் பிறந்தபாலன் பதினாறுவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (61)

பதினேழாவது வருடத்தில் மரணமாவதறிய.

நாடவே லக்கினாதிப் பதியுடன் சந்திரனானும்
மாடவே தனியாய்நிற்கக் குறிகிய மூடவன்பார்க்க
நீடவே புவியிற்றானும் நிலபடப் பிறந்தபாலன் [பாரே.
பாடவேபதி னேழாமாண்டில் பதைத்துயிர் மாள்வான்

(இ-ள்.) இலக்கினாதிபதியும் சந்திரனும் ஒன்றாய்க்கூடாமல் தனியாகநிற்க, அவரைச் சனிபார்க்கப் பிறந்தபாலன் பதினேழாவது வருடம் மரணமாகுவான், எ-று. (62)

பதினெட்டாவது வருடத்தில் மரணமாவதறிய.

வேறு விருத்தம்.

பாறென லக்கினாதிப் பதியொன்றாலும்
பதிவாக லக்கினத்திற் கெட்டில்நிற்க
ஏறென வெட்டுக்கு பதிபன்றாலும்
இருந்திட லக்கினத்தில்.ரண்டாமாதி
வேறென யாருமிராசி யலதுகேளாய்
விரையமெனும் பனிரண்டா மிடத்தில்நிற்க
பேறெனப் பிறந்திட்டப் பாலன்றாலும்
பேசும்பதி னெட்டாண்டில் மரணமாவன்.

(இ-ள்.) இலக்கினாதிபதி இலக்கினத்திற்கு 8-ம் இராசியிலிருக்க, 8-ம் இராசிக்கதிபன் இலக்கினத்திலிருக்க, 2-ம் இராசிக்கதிபன், 6-ம் இராசி அல்லது 12-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் பதினெட்டாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (63)

வேறு விருத்தம்.

ஆகவே புதன்சூரியன் அங்காரகனுங் கேளாய்
ஏகவே யொன்றாய்க்கூடிப் பதிந்தொரு வீட்டில்நிற்க
தாகவே தரணிதன்னில் தானும்வந் துதித்தபாலன்
சோகவேபதி னெட்டாமாண்டில் சோர்ந்துயிர் போகு
[மென்னே.

(இ-ள்.) வித்தியாக்காரகனாகிய புதனும், பிதுர்க்காரகனாகியச் சூரியனும், சகோதரக்காரகனாகிய அங்காரகன் இவர்கள் மூவருங் கூடி ஒரு இராசியிலிருக்க பிறந்தபாலன் பதினெட்டாம் வருடத்தில் மரணமாகுவான், எ-று. (64)

இருபதாம் வருடத்தில் மரணமாவதறிய.

எனப்பிதுர்க் காரனை யெழிற்கதிரோன் றன்னோடு
கனமிருங் கணக்கனாறும் கலந்துமே கூடிநிற்க
மனமுடன் புவியிற்றானு மகிழுடன் பிறந்தபாலன்
இனமுட னிருபானாண்டில் யேமனா றேகுவானே.

(இ-ள்.) பிதுர்க்காரகனாகியச் சூரியனும், வித்தியாக்காரகனாகிய புதனுங்கூடி ஒருராசியிலிருக்கப் பிறந்தபாலன் இருபதாம் வருடத்தில் மரணமாகுவான், எ-று. (65)

ஏகவே லக்கினாதி யெழில்கதி ரோனுங்கூட
தாகவே சுபர்நோக்கன்றி தானுறக் கேந்திரத்தில்
பாகமாய்ப் புவியிற்றானும் பண்புடன் பிறந்தபாலன்
வேகமா யிருபாநாண்டில் வேர்த்துயிர் மாள்வான்மாதே.

(இ - ள்.) இலக்கினாதிபதியும், பிதுர்க்காரகனாகிய சூரியனும், ஒன்றாய்கூடியிருக்க, அவரைச் சுபர்பாராதிருந்து, கேந்திரத்திலிருக்கப் பிறந்தபாலன் இருபதாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று.

இருபத் தோராவது வருடத்தில் மரணமாவதறிய.

மாதென சிங்கந்தன்னில் மதியவ னேறிநிற்க [க
ஏதெனச் செவ்வாய்சுன்னும் யெட்டெனும் வீட்டில்நிற்
போதெனச் சுபர்கள்பார்க்க புவிதனிற் பிறந்தபாலன்
வாதென யிருபத்தோரும் வருடத்தில் மரணமாமே.

(இ - ள்.) சிங்கவிராசியில் மாதுர்க்காரகனாகிய சந்திரனிருக்க, சகோதரக்காரகனாகிய அங்காரகனும், ஆயுட்காரகனாகியச் சனியுங்கூடி இலக்கினத்திற்கு 8-ம் இராசியிலிருக்க, அவர்களைச் சுபர்பார்க்கப் பிறந்தபாலன் இருபத்தோராவது வருடத்தில் மரணமாகுவான், எ-று.

இருபத்திரண்டாவது வருடத்தில் மரணமாவதறிய.

மாமெனுந் தேளைதானு மங்கிசை யாமதின்மேல்
தாமென முடவன்நிற்க தன்னையுங் கதிரோன்பார்க்க
நாமெனும் புவியிற்றானும் நாடியே பிறந்தபாலன்
ஆமென யிருபான்ரண்டு யாண்டினில் அரிட்டம்பாரே.

(இ-ள்.) விருச்சிகவிராசியின் அங்கிசையின்மேல் ஆயுட்காரகனாகிய சனியிருக்க அவரை பிதுர்க்காரகனாகிய சூரியன் பார்க்கப் பிறந்தபாலன் இருபத்திரண்டாம் வருடத்தில் மரணமாகுவான், எ-று. (68)

இருபத்தி மூன்றாவது வருடத்தில் மரணமாவதறிய.

பார்க்கவே லக்கினந்தானு பகர்ந்திடுங் கோலதாக
ஏர்க்கவே முடவனார்தன் யங்கிசை யாமதின்மேல்
கோர்க்கவே குருவேபார்க்க குணமுடன் பிறந்தபாலன்
பார்க்கவே யிருபான்மூன்று யாண்டினில் மரணம்நேரும்

(இ-ள்.) இலக்கினம் துலாம் இராசியாக ஆயுட்காரகனாகிய சனி அங்கிசையின்மேல் குருபார்க்கப் பிறந்தபாலன் இருபத்திமூன்றாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (69)

இருபத்தி நாலாவது வருடத்தில் மரணமாவதறிய.

நேரவே லக்கினந்தானும் நிலைபடக் கன்னியாக
பேரவே முடவனார்தம் பேசுமங் கிசையின்மேலே
சீரவே புதனும்பார்க்க சேயவன் பிறப்பானாகில்
ஏரவே யிருபன்நாலா மாண்டினி லிறப்பான்காணே.

(இ-ள்.) இலக்கினம் கன்னியா விராசியாகவிருக்க, ஆயுட்காரகனாகிய சனியின் அங்கிசையாக அதனை புதன்பார்க்கப் பிறந்தபாலன் இருபத்திநாலாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (70)

இருபத் தைந்தாவது வருடத்தில் மரணமாவதறிய.

காணவே லக்கினந்தானுங் கருதியச் சிங்கமாக
பூணவே சனியனார்தன் புகலுமங் கிசையாம்மேலே
ஊணவே பொன்னோன்பாற்க வுலகினிற் பிறந்தபாலன்
ஆணவே யிருபானைந்தில் யவனுயிர் போகும்சாற்றே.

(இ-ள்.) இலக்கினம் சிங்கவிராசியாகவிருக்க, ஆயுட்காரகனாகிய சனியின் அங்கிசையின்மேல் வியாழபகவான் பார்க்கப் பிறந்தபாலன் இருபத்தைந்தாம் வருடத்தில் மரணமாகுவான், எ-று. (71)

சாற்றவே யிந்துவிற்குச் சார்புற யிரண்டுபக்கம்
ஏற்றவே யிராகுசேயும் மெழில்சனி கேதுநிற்க
போற்றவே லக்கினாதிப் பெலன்குன்றப் பிறந்தபாலன்
யாற்றவே யிருபானைந்து யாண்டினிற் சாவான் கூறே.

(இ-ள்.) மாதுர்க்காரகனாகிய சந்திரன் நின்ற இராசிக்கு இரு புறமும் இராகு, சகோதரக்காரகனாகிய செவ்வாய், ஆயுட்காரகனாகிய சனி, கேது இவர்களிருக்க இலக்கினாதிபதி பெலன் குறைந்திருக்கப் பிறந்தபாலன் இருபத்தைந்தாம் வருடத்தில் மரணமாகுவான், எ-று.

இருபத்தாறும் வருடத்தில் மரணமாவதறிய.

கூறவே லக்கினந்தானும் குலவியக் கன்னியாக
சேறவே சனியனார்தன் செப்புமங் கிசையின்மேலே
கோரவே கேதுபார்க்க புவிதனி லுதித்தபாலன்
நேரவே யிருபானாறு யாண்டினில் சாகுவானே.

(இ-ள்.) இலக்கினம் கன்னியாவிராசியாகவிருக்க, ஆயுட்காரகனாகிய சனியின் அங்கிசையின்மேல் கேதுபார்க்கப் பிறந்தபாலன் இருபத்தாறும் வருடத்தில் மரணமடைகுவான், எ-று. (73)

வானெனக் கன்னிதானும் வரையிலக் கினமதாக [ய்
தானென யதனிற்சுன்னும் தானுறப் பொன்னோன்கேளா
பானென யாறுயெட்டுப் பனிரண்டி லிருக்கவந்தோன்
நானென யிருபானாறு யாண்டினில் சாவான்காணே.

(இ-ள்.) கன்னியாவிராசி லக்கினமாகவிருக்க, அதில் ஆயுட்காரகனாகியச் சனிபகவானிருக்க வியாழபகவான் இலக்கினத்திற்கு 6-ம் இராசியிலும், 8-ம் இராசியிலும், 12-ம் இராசியிலுமிருக்கப் பிறந்தபாலன், இருபத்தாறும் வருடத்தில் மரணமாகுவான், எ-று. (74)

இருபத்தேழாவது வருடத்தில் மரணமாவதறிய.

காணவே லக்கினந்தானுங் கருதுசீர் மிதுனமாக
பூணவே முடவனார்தன் யங்கிசை யாமதின்மேல்
தோணவே லக்கினாதித் தான்பார்க்கப் பிறந்தபாலன்
நாணவேபதி னேழாமாண்டில் நமன்பதி சேர்குவானே.

(இ-ள்.) இலக்கினம் மிதுனவிராசியாக இருக்க, ஆயுட்காரகனாகிய சனி அங்கிசையின்மேல் இலக்கினாதிபதிப் பார்க்கப் பிறந்தபாலன் இருபத்தேழாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (75)

வானென வெட்டாமாதி வரையுஞ்சீர் லக்கினதி
தானென விருவற்புடமும் சரியுறக் கேந்திரமேற
மானென வெட்டில்கேது மரிவிடப் பிறந்தபாலன்
ஊனென விருபானேழு யாண்டினில் யெமனூர்போவான்.

(இ-ள்.) இலக்கினத்திற்கு எட்டாமிடத் ததிபனுடையப் புடமும், இலக்கினதிபதியின் புடமும் சரியாகவிருக்க, அவர் கேந்திரமேற, இலக்கினத்திற்கு எட்டாமிடத்தில் கேது யிருக்கப் பிறந்தபாலன், இருபத்தேழாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (76)

இருபத் தெட்டாவது வருடத்தில் மரணமாவதறிய.

போகவே லக்கினத்தில் பொரிந்திய ராகுகேது
ஏகவே கேதுவெய்யோ னிந்துவு மிருக்கக்கேளாய்
வாகவே யீரார்பொன்னோன் வாழ்ந்திடப் பிறந்தபாலன்
ஈகவே யிருபானெட்டு யாண்டினி லிறப்பானென்னே.

(இ-ள்.) இலக்கினத்தில் இராகுயிருக்க அல்லது கேது, சூரியன் சந்திரன் இவர்களிருக்க, இலக்கினத்திற்கு 12-ம் இராசியில் வியாழ பகவானிருக்கப் பிறந்தபாலன் இருபத்தெட்டாம் வருடத்தில் மரண மாகுவான், எ-று. (77)

என்னவே கேதுராகு வெழிற்செவ்வாய் மூவர்கூடி
புன்னவே லக்கினத்தில்வாழ புகர்புந்தி யெட்டில்மேவ
இன்னவே கேந்திரத்தி லிலாதுறப் பிறந்தபாலன்
வின்னவே யிருபானெட்டு வருடத்தில் சாகுவானே.

(இ-ள்.) கேதுவேனும், இராகுவேனும், செவ்வாயுடன்கூடி இலக்கினத்திலிருக்க, இலக்கினத்திற்கு 8-மிடத்தில் சுக்கிரனும், புதனுமிருக்க, கேந்திரத்திற்சுபர் இல்லாதிருக்கப் பிறந்தபாலன் இருபத்தெட்டாம் வருடத்தில் மரணமடைகுவான், எ-று. (78)

ஏகவே லக்கினதிப் பதியுடன் சாற்றக்கேளாய்
மாகவே யெட்டாமாதி மருவிய யிருவர்தாமும்
ஊகமா மாறிநிற்க உலகினில் பிறந்தபாலன்
ஈகவே யிருபானெட்டு யாண்டினி லிறப்பான்கூறே.

(இ-ள்.) இலக்கிஞதிபதியும், இலக்கினத்திற்கு எட்டாம் இராசியாதிபனும் மாறிநிற்கப் பிறந்தபாலன் இருபத்தெட்டாம் வருடத்தில் மரணமாகுவான், எ-று. (79)

வேறு-விருத்தம்.

கூறவே லக்கின்முங் கோலதாக
குருவிருக்க சேயிந்து ராகுங்கூடி
ஏறவே லக்கினத்திற் கியம்பக்கேளாய்
ஏழோடு பத்தைந்து விராசிதன்னில்
நேறவே பாபருமே கேந்திரமேரி
நீடியே லக்கினம் யெட்டில்மேவ
ஈறவே யித்தரையில் பிறந்தபாலன்
இருபத்தெட் டாம்வருட மிறப்பானென்னே.

(இ-ள்.) துலாம் இராசி இலக்கினமாகயிருக்க, அதில் குருவிருக்க, சகோதாக்காரகஞகிய அங்காரகனும், மாதுர்க்காரகஞகியச் சந்திரனும், இராகுங்கூடி இலக்கினத்திற்கு 7-ம் இராசியினும், 5-ம் இராசியினும், 10-ம் இராசியினும், இருக்க பாபர்கள் கேந்திரத்தினும் இலக்கினத்தினும், இலக்கினத்திற்கு 8-ம் இராசியிலுமிருக்கப் பிறந்த பாலன் இருபத்தெட்டாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. ()

இருபத் தோன்பதாவது வருடத்தில் மரணமாவதரிய.

வேறு-விருத்தம்.

என்னயெட் டாமிடத்தில் இருந்திடக் கதிரோன்ருனும்
மன்னிய மூன்ருமிராசி மதிசனி கூடிவாழ்க
பன்னியப் பாபர்பார்க்க பாரினில் பிறந்தபாலன் [ன்.
வின்னமா யிருபத்தொன்பான் வருடத்தில் மரணமாவா

(இ-ள்.) இலக்கினத்திற்கு, 8-ம் இராசியில் பிதுர்க்காரகஞகியச் சூரியனிருக்க, 3-ம் இராசியில் மாதுர்க்காரகஞகிய சந்திரனும், ஆயுட்காரகஞகியச் சனியும் கூடியிருக்க அவரைப்பாபர்கள் பார்க்கப்பிறந்த பாலன் இருபத்தொன்பதாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று.

வானென லக்கினந்தான் விருட்சிக விராசியாக
ஏனெனக் கதிரும்பொன்னு மெட்டாதி யேழிஞடு

ஊனென யதிலேநிற்க உற்பத்தி யானபாலன்
தானென யிருபத்தொன்பான் தனியாண்டில் மரணம்
[சொல்லே.

(இ-ள்.) இலக்கினம் விருட்சிக விராசியாகவிருக்க, அதில் சூரியன், வியாழன், இலக்கினத்திற்கு 8-ம் இராசியாதிபன், 7-ம் இராசியாதிபனும் கூடியிருக்கப் பிறந்தபாலன் இருபத்தொன்பதாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (82)

முப்பதாவது வருடத்தில் மரிப்பதறிய.

**வேறு-விருத்தம்.**

சொல்லவே லக்கினத்திற் கெட்டாமாதி
சோர்விலா கேந்திரத்தி லேறிநிற்க
வல்லதோர் தேய்வுயிந்து நல்லிடத்தில்
வாழ்ந்திட யெட்டிலே பாபர்மேவ
புல்லவே லக்கினதிப் பதியோன் ருனும்
பெலமதுக் குன்றியே தானிருக்க
முல்லவே புவிதனிலே யுதித்தபாலன்
முப்பதா மாண்டினிலே மரணமாவன்.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசியாதிபன் கேந்திரத்திலிருக்க, தேய்பிரைச்சந்திரன் நல்லயிடத்தில் வாழ இலக்கினத்திற்கு 8-ம் இராசியில் பாபக்கோட்களிருக்க இலக்கினதிபதி பெலயீனமாக விருக்கப் பிறந்தபாலன் முப்பதாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று.

**வேறு விருத்தம்.**

மாகவே லக்கினதி மருவியப் பொன்னேன் ருனும்
ஏகவே யொன்றுய்க்கூடி யிருந்திட லக்கினத்தில்
பாகமாய்ப் புவியிற்ருனும் பரிவுடன் பிறந்தபாலன்
தாகமாய் முப்பானுண்டில் தன்னுயிர் நீங்கும்பாரே.

(இ-ள்.) இலக்கினதிபதியும், வியாழபகவானுங்கூடி இலக்கினத்திலிருக்கப் பிறந்தபாலன் முப்பதாம் வருடத்தில் மரணமாகுவான். ()

முப்பதாம் வருடத்தில் வரும் கண்டமறிய.

பாறெனச் செவ்வாயிந்து பரவும்ரண் டிரூர்மேவ
ஏறெனப் பொன்னேன் றருகு யேழெட்டா மிராசிவாழ
தாறெனப் பிறந்தோனுக்கு தங்கிய முப்பாமாண்டில்
வாறெனக்கெண்டந்தானும் வாய்க்குமென் றறைகுவாயே.

(இ-ள்.) சகோதரக்காரகனாகிய அங்காரகனும், மாதுர்க்காரக னாகியச் சந்திரனும், இலக்கினத்திற்கு 2-ம் இராசியிலும் 12-ம் இராசி யிலுமிருக்க, புத்திரக்காரகனாகியக் குருவும், இராகுவும் இலக்கினத் திற்கு 7-ம் இராசியிலும் 8-ம் இராசியிலுமிருக்கப் பிறந்தபாலனுக்கு முப்பதாவது வருடத்தில் கெண்டமுண்டாம், எ-று. (85)

முப்பத் தோராவது வருடத்தில் வரும் கண்டமறிய.

வாயெனச் சேயுந்தானும் வாழயே ழாமிடத்தில்
ஏயென சனியனோடு யிலக்கினாதி பதியும்வாழ
நேயெனப் புவியிற்றானும் நீடிடப் பிறந்தபாலன்
மூயென முப்பானொன்று வருடத்தில் மரணமாமே.

(இ-ள்.) சகோதரக்காரகனாகிய அங்காரகன் இலக்கினத்திற்கு 7-ம் இராசியிலிருக்க, ஆயுட்காரகனாகிய சனிபகவானும், இலக்கினாதி பதியுங் கூடியிருக்கப் பிறந்தபாலன் முப்பத்தோராவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (86)

முப்பத்தி ரண்டாவதுவருடத்தில் வரும் கண்டமறிய.

ஆமென யெட்டாமாதி யானகேந் திரத்தில்மேவ
தாமென லக்கினாதித் தானிற்க வலுவதாக
நாமெனப் புவியிற்றானும் நலமுடன் பிறந்தபாலன்
யாமென முப்பான்ரண்டு யாண்டினில் மரணங்கூறே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசியாதிபன் கேந்திரத்தில் எறிநிற்க, இலக்கினாதிபதி வலுப்பெற்றுயிருக்கப் பிறந்தபாலன் முப்பத் திரண்டாம் வருடத்தில் மரணமாகுவான், எ-று. (87)

கூறவே எட்டாமாதிக் கேந்திர மதிலேநிற்க
பேறவே லக்கினாதிப் பாபரு மலதுகேளாய்
நேறவே பெலமேகுன்றி நின்றிடப் பிறந்தபாலன்
வீறவே முப்பான்ரண்டு வருடத்தில் மாள்குவானே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசியாதிபன் கேந்திரத்திலிருக்க, இலக்கினாதிபதியும், பாபரும் அல்லது பெலயீனமாகயிருக்கப் பிறந்தபாலன் முப்பத்திரண்டாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (88)

வானென லக்கினாதி வரையும்லக் கினமதற்கு
பானென யாறுயெட்டு பனிரண்டாம் ராசிவாழ
தானென தரணிதன்னில் தயவுடன் பிறந்தபாலன்
மூனென முப்பான்ரண்டு வருடத்தில் சாவான்மாதே.

(இ-ள்.) இலக்கினாதிபதி இலக்கினத்திற்கு 6-ம் இராசியிலும், 8-ம் இராசியிலும், 12-ம் இராசியிலுமிருக்கப் பிறந்தபாலன் முப்பத்திரண்டாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (89)

முப்பத்தி மூன்றுவதுவருடத்தில் வரும் கண்டமறிய.

மாதென லக்கினந்தான் விருட்சிகம் மேஷமாக
ஏதென யிந்துதானும் யிருந்திடப் பாபர்பாற்க
போதென சுபர்நோக்கில்லா பிறந்திட்ட பாலன்றானும்
ஓதென முப்பான்மூன்று வருடத்தில் மரணமாவான்.

(இ-ள்.) இலக்கினம் விருட்சிகவிராசி மேஷவிராசியாகவிருக்க, அதில் சந்திரனிருக்க அவரைப் பாபர்கள் பார்க்க சுபர்கள் பாராதிருக்கப் பிறந்தபாலன் முப்பத்திமூன்றுவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (90)

மாகவே லக்கினத்திற்கு மரிவிய நாலாம்வீட்டில்
போகவே வித்தியாக்காரப் புந்தியு மிருக்கத்தானும்
பாகவே பூமிதன்னில் பரிவுடன் பிறந்தபாலன்
ஆகவே முப்பான்மூன்று யாண்டினில்மரணஞ்சொல்வே

(இ-ள்.) இலக்கினத்திற்கு 4-ம் இராசியில் வித்தியாக்காரகனுகிய புதனிருக்கப் பிறந்தபாலன் முப்பத்திமூன்ருவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (91)

சொல்லவே யெட்டாமாதி சுகமிலாப் பாபர்கூடி
வல்லவே யிந்துகேந்திர மலதுதிரி கோணமேற
புல்லவே பாபர்பத்தைப் பார்த்திடப் பிறந்தபாலன்
அல்லவேமுப்பான்மூன்றுயாண்டினில்மரிப்பான்காணே

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசியாதிபனும் பாபருங்கூடி சந்திரகேந்திரம் அல்லது திரிகோணத்திலிருக்க, பாபர் இலக்கினத்திற்கு 10-ம் இராசியைப்பார்க்கப் பிறந்தபாலன் முப்பத்திமூன்ருவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (92)

முப்பத்தாருவது வருடத்தில் மரணமாவதறிய.

காணவே கனகன்சுக்கிரன் கருதுங்கேந் திரத்திலேற
பூணவே லக்கினுதிப் பாபருங் கூடபத்தில்
தோணவே யிந்துநிற்கத் துலங்கிடப் பிறந்தபாலன்
நாணவே முப்பானுறு நடையாண்டிற் சாவானென்னே.

(இ-ள்.) புத்திரக்காரகனுகிய வியாழபகவானும், களத்திரக்காரகனுகியச் சுக்கிரபகவானும் கேந்திரத்திலிருக்க, இலக்கினுதிபதியும் பாபரும் கூடிட, இலக்கினத்திற்கு 10-ம் இராசியில் மாதுர்க்காரகனுகிய சந்திரனிருக்கப் பிறந்தபாலன் முப்பத்தாருவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (93)

முப்பத்தேழாவது வருடத்தில் மரணமாவதறிய.

என்னவே மிதுனந்தானு மெழிலுரும் லக்கினமாக
பன்னவே கதிருந்துப் பார்க்கவே யிரண்டுபக்கம்
பின்னவே பாபர்பொன்னும் பார்த்திடப்பிறந்தபாலன்
மின்னவே முப்பானேழாம் வருடத்தில் மரிப்பான்கூறே.

(இ-ள்.) மிதுனவிராசி இலக்கினமாகவிருக்க அதில் சூரியன் வாழ அவருக்கு இரண்டுபக்கமும் பாபரும், குருவுமிருந்துப் பார்க்கப் பிறந்தபாலன் முப்பத்தேழாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று.

முப்பத்தெட்டாவது வருடத்தில் மரணமாவதரிய.

கூறவே பாபர்தானுங் கேந்திர மதனில்வாழ
ஏறவே லக்கினாதி யீராறி லிருக்கவெட்டோன்
பேறவே லக்கினத்தில் பதிந்திடப் பிறந்தபாலன்
யாறவே முப்பானெட்டு யாண்டினி லிறப்பான்பாரே.

(இ-ள்.) பாபர்கள் கேந்திரத்திலிருக்க, இலக்கினாதிபதி இலக்கினத்திற்கு 12-ம் இராசியிலிருக்க, 8-ம் இராசியாதிபன் இலக்கினத்திலிருக்க முப்பத்தெட்டாம் வருடத்தில் மரணமாகுவான், எ-று. ()

நாற்பதாவது வருடத்தில் மரணமாவதறிய.

பார்க்கவே லக்கினந்தானும் பகர்திர ராசியாக
ஏர்க்கவே யெட்டாமாதி யிருந்திடச் சுபரெட்டேற
தீர்க்கவே புவியிற்றானும் தானுமே பிறந்தபாலன்
நார்க்கவே நான்பாணாண்டில் நமன்பதி சேர்வான்மாதே.

(இ-ள்.) இலக்கினம் ஸ்திர இராசியாக விருக்க, இலக்கினத்திற்கு 8-ம் இராசி யாதிபன் அதிலிருக்க, சுபர்கள் 8-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் நாற்பதாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. ()

மாதென யெட்டாமாதி மருவிகேந் திரத்திற்செவ்வாய்
போதென லக்கினத்திற் பொருந்திட முடவன்வெய்யோ
ஏதென யாறுமூன்றி லிருந்திடப் பிறந்தபாலன் [ன்
ஓதென நார்ப்பாமாண்டில் வுயிரது நீங்கும்பாரே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசியாதிபன் கேந்திரத்திலிருக்க, செவ்வாய் லக்கினத்திலிருக்க சனி-சூரியன், இலக்கினத்திற்கு 6-ம் இராசியிலும் 3-ம் இராசியிலும் இருக்கப் பிறந்தபாலன் நார்ப்பதாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (97)

நாற்பத்தைந்தாவது வருடத்தில் மரணமாவதறிய.

பாறென லக்கினாதிப் பாபருங் கூடிதானும்
வீறென லக்கினத்திற்கு விளம்புமா றெட்டில்மேவ
ஏறென சுபர்பாராமல் யிருந்திடப் பிறந்தபாலன்
மீறென நார்ப்பத்தைந்தா மாண்டினி லிறப்பான்சாற்றே.

(இ-ள்.) இலக்கிஞதிபதியும், பாபரும் கூடி இலக்கினத்திற்கு 6-ம் இராசியிலும், 8-ம் இராசியிலும், இருக்க, அவரைச் சுபர்கள் பாரு திருக்கப் பிறந்தபாலன் நார்ப்பத் தைந்தாவது வருடத்தில் மரணமா குவான், எ-று. (98)

நாற்பத்தேழாவது வருடத்தில் மரணமாவதரிய.

சாற்றவே மேடந்தன்னில் சந்திர னிருக்கக்கேளாய்
போற்றவே லக்கிஞதிப் பெலமது பெற்றுநிற்க
ஏற்றதோர் சுபரேபார்க்க யெழிலுடன் பிறந்தபாலன்
தோற்றவே நார்ப்பத்தேழ் மாண்டினில் சாகுவானே.

(இ-ள்.) மேஷவிராசியில் மாதுர்க்காரகஞகிய சந்திரனிருக்க, இலக்கிஞதிபதி வலுவாகயிருக்க, அவரைப் பாபர்கள் பார்க்கப் பிறந் தபாலன் நார்ப்பத்தேழாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று.

நாற்பத் தெட்டாவது வருடத்தில் மரணமாவதறிய.

வானென லக்கினந்தன்னில் வளம்பெரு மிந்துவாழ
பானென யவரைத்தாமும் பாபர்க ளிருந்துப்பார்க்க
நானென சுபர்நோக்காமல் நின்றிடப் பிறந்தபாலன்
ஊனென நார்ப்பானெட்டுயாண்டினிலுயிர்போமென்னே

(இ-ள்.) இலக்கினத்தில் மாதுர்க்காரகஞகியச் சந்திரனிருக்க, அவரைப் பாபர்கள் பார்க்க, சுபர்கள் பாருமலிருக்கப் பிறந்தபாலன் நார்ப்பத்தெட்டாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (100)

அன்பதாவது வருடத்தில் மரணமாவதறிய.

என்னவே லக்கிஞதி யெழில்சுபர் வீட்டில்நிற்க
பன்னவே யெட்டாமாதி பார்க்கயா றெட்டில்மேவ
உன்னவே புவியிற்ருனும் உதையமாய் வந்தபாலன்
அன்னவே யன்பாஞண்டில் யவனுயிர் போகும்விள்ளே.

(இ-ள்.) இலக்கிஞதிபதி சுபர்களுடைய வீட்டிலிருக்க, இலக் கினத்திற்கு 8-ம் இராசி யாதிபன் இலக்கினத்திற்கு 6-ம் இராசியிலும், 8-ம் இராசியிலும் இருக்கப் பிறந்தபாலன் அன்பதாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (101)

விள்ளவே லக்கினாதி விளங்கிடு மெட்டாமாதி
துள்ளவே பாபர்கூடி துலங்கிட லக்கினமெட்டில்
கொள்ளவே யிருந்துவாழ குலவிடப் பிறந்தபாலன்
அள்ளவே யன்பாணுண்டில் யவனுயிர் நீங்குமென்னே.

(இ-ள்.) இலக்கினாதிபதியும் இலக்கினத்திற்கு எட்டாம் இராசியாதிபதியும் பாபருங்கூடி இலக்கினத்திற்கு 8-ம் இராசியிலும் இலக்கினத்திலும் இருக்கப் பிறந்தப் பாலகன் அன்பதாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (102)

மின்னிய லக்கினத்திற்கு மருவிய பத்தாம்வீட்டில்
பன்னியப் பாபரோடுப் பனிரண்டா மிடத்தினாதி
உன்னியே யிருக்கத்தானு முலகினிற் பிறந்தபாலன்
மன்னியே யன்பாணுண்டில் மரணமு மாவான்சொல்லே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 10-ம் இராசியில், பாபரும் 12-ம் இராசி யாதிபனும் கூடி இருக்கப் பிறந்தபாலன் அன்பதாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (103)

அன்பத்தி ரண்டாவது வருடத்தில் மரணமாவதறிய.

சொல்லவே யுபயராசிக் கதிபனு மைந்தில்மேவ
வல்லவே யிந்துசுன்னும் வாழயெட் டீரார்தன்னில்
புல்லவே புவியிற்றானும் புகழுடன் பிறந்தபாலன்
வெல்லவே யன்பான்ரண்டு வருடத்தில் மரணங்கூறே.

(இ-ள்.) உபயராசிக் கதிபதி இல்க்கினத்திற்கு 5-ம் இராசியிலிருக்க, மாதுர்க்காரகனாகிய சந்திரனும், ஆயுட்காரகனாகியச் சனியும், இல்க்கினத்திற்கு 8-ம் இராசியிலும், 12-ம் இராசியிலும் இருக்கப் பிறந்தபாலன் அன்பத்திரண்டாவதுவருடத்தில்மரணமாகுவான்,எ-று.

கூறவே லக்கினத்தில் குலவியச் சனியும்மேவ
ஏறவே யெட்டீருறில் யிந்துவு மிருக்கமற்றோர்
தேறவே பதினொரும்வீட்டில் தானுறப் பிறந்தபாலன்
தேறவே யன்பான்ரண்டு யாண்டினில் சாகுஞ்சாற்றே.

(இ-ள்.) இலக்கினத்தில் ஆயுட்காரகனாகிய சனிபகவானிருக்க, இலக்கினத்திற்கு 8-ம் இராசியிலும் 12-ம் இராசியிலும், மாதுர்க்காரகனாகிய சந்திரனிருக்க, மற்ற கிரகங்கள் 11-ம் இராசியிலிருக்கப் பிறந்த பாலன் அன்பத்திரண்டாவது வருடத்தில் மரணமாகுவான். ()

அன்பத்திநாலாவது வருடத்தில் மரணமாவதறிய.

சாற்றவே லக்கினாதி சார்ந்துயெட் டதனில்நிற்க
ஏற்றவே யிந்துவீட்டிற் கதிபதி யிந்துக்கெட்டாய்
தோற்றவே யிருக்கத்தானும் தோன்றியப் பாலகன்றான்
மாற்றவே யன்பானாலா மாண்டினி லிரப்பான்காணே.

(இ-ள்.) இலக்கினாதிபதி இலக்கினத்திற்கு 8-ம் இராசியிலிருக்க, சந்திரனுடைய மனையினுக்கதிபதி சந்திரனுக்கு 8-ம் இராசியிலிருக்கப் பிறந்தவன் அன்பத்திநாலாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று.

அன்பத்தாறுவது வருடத்தில் மரணமாவதரிய.

காணவே லக்கினத்திற்கு கருதும்நால் தனுசதாக
பூணவே யதனிற்றானும் பொன்னவ னிருக்கபணிசேய்
நாணவே யெட்டியாறில் நின்றிடப் பிறந்தபாலன்
தோணவே யன்பானாறில் தோஷமாய் மரணம்நேரும்.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 4-ம் இராசி தனுசு விராசியாகவிருக்க, அதில் குருவிருக்க, இராகுவும், செவ்வாயும், இலக்கினத்திற்கு 8-ம் இராசியிலும், 6-ம் இராசியிலும் இருக்கப் பிறந்தபாலன் அன்பத்தாறாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (107)

அன்பத்தேழாவது வருடத்தில் மரணமாவதறிய.

நேரவே சிலையேதானும் நீடும்லக் கினமதாக
சேரவே குருவிருக்க சேய்ராகு யெட்டில்மேவ
கோரவே குவலயத்தில் கொப்பெனப் பிறந்தபாலன்
மீரவே யன்பத்தேழாம் வருடத்தி லிறப்பான்கூறே.

(இ-ள்.) தனுசு விராசி இலக்கினமாக விருக்க அதில் வியாழபகவானிருக்க, செவ்வாய், இராகுவும், இலக்கினத்திற்கு 8-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் அன்பத்தேழாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (108)

அன்பத் தெட்டாவது வருடத்தில் மரணமாவதறிய.

கூறவே குருவும்ராகும் குலவிய செவ்வாய்கூடி
ஏறவே லக்கினத்திற்கு யாறெட்டா மனையில்நிற்க
சீறவே புவியின்மீதுச் சிறப்புடன் பிறந்தபாலன்
ஆரவே யன்பானெட்டு யாண்டினி லிறப்பானென்னே.

(இ-ள்.) புத்திரக்காரனாகிய வியாழபகவானும், இராகுவும், சகோதரக்காரகனாகிய அங்காரகனுங் கூடி இலக்கினத்திற்கு 6-ம் இராசியிலும், 8-ம் இராசியிலும் இருக்கப் பிறந்தபாலன் அன்பத்தெட்டாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (109)

தென்னவே யிந்துப்பாபர் நலமுடன் கூடிநிற்க
மன்னிய யெட்டாமாதி மருவிட யேழாம்வீட்டில்
கன்னவே புவியிற்றானுங் களிப்புடன் பிறந்தபாலன்
வின்னிய யன்பத்தெட்டாம் வருடத்திலிறப்பான்காணே.

(இ-ள்.) மாதுர்க்காரகனாகியச் சந்திரனும், பாபக்கோட்களும் கூடி ஒருராசியிலிருக்க, இலக்கினத்திற்கு 8-ம் இராசியாதிபன், 7-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் அன்பத்தெட்டாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (110)

அறுபதாவது வருடத்தில் மரணமாவதறிய.

காணவே கும்பந்தானுங் கருதுசீர் லக்கினமாக
வேணவே பொன்னோனெட்டாம் வீட்டினி லிருக்கபாபர்
பூணவே கேந்திரமேற புவிதனிற் பிறந்தபாலன்
நாணவே யருபானாண்டில் நமன்பதிச் சேர்குவானே.

(இ-ள்.) கும்பவிராசி லக்கினமாகவிருக்க, வியாழபகவான் இலக்கினத்திற்கு 8-ம் இராசியிலிருக்க, பாபக்கோட்கள் கேந்திரமேறி நிற்கப் பிறந்தபால்ன் அறுபதாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று.

வானெனக் கதிரோன்பத்தில் வாழ்ந்திடசனியேகேளாய்
பானென லக்கினத்தும் பனிரண்டா மிடத்தில்நிற்க
தானென வியாழனெட்டாய்த் தானுறப் பிறந்தபாலன்
கானென யறுபானாண்டில் காலனூர்ப் போயிசேர்வன்.

(இ-ள்.) மாதுர்க்காரகனாகியச் சூரியன் இலக்கினத்திற்கு 10-ம் இராசியிலிருக்க, ஆயுட்காரகனாகிய சனிபகவான், இலக்கினத்திலும், இலக்கினத்திற்கு 12-ம் இராசியிலும் இருக்க புத்திரக்காரகனாகிய குருபகவான் 8-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் அறுபதாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (112)

வேறு விருத்தம்.

சேரவே சனியவனும் லக்கினமேற
சந்திரனும் நாவிலுற சேயேழாக
கூரவே குருகதிரும் பத்தில்மேவ
குலவிய புகர்புந்திக் கூறக்கேளாய்
மீரவே மேலோர்க ளுடனேகூடி
மிக்கதோர் மனைதனிலே மருவநன்றாய்
தேரவே தான்பிறந்தப் பாலன்றானும்
தேடியறு பானாண்டில் மரணமாவான்.

(இ-ள்.) ஆயுட்காரகனாகி சனிபகவான் இலக்கிணத்திலிருக்க, மாதுர்க்காரகனாகிய சந்திரன் இலக்கினத்திற்கு 4-ம் இராசியிலிருக்க சகோதரக்காரகனாகிய செவ்வாய் 7-ம் இராசியிலிருக்க, புத்திரக்காரகனாகிய வியாழபகவானும், பிதுர்க்காரகனாகிய சூரியனும் 10-ம் இராசியிலிருக்க, களத்திரக்காரகனாகியச் சுக்கிரனும், வித்தியாக் காரகனாகிய புதனும் மேலோர்களுடன் கூடியிருக்கப் பிறந்தபாலன் அறுபதாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (113)

வேறு-விருத்தம்.

மாகவே லக்கினத்தில் மகிழ்புகர் புந்தியோடு
ஏகவே சனியுங்கூடி யேறகேந் திரமேமற்றோர்
பாகவே மூன்றுலாபம் பதிந்திடப் பிறந்தபாலன்
சோகவே யறுபானாண்டில் சாவினென்றுரைசெய்வாயே.

(இ-ள்.) இலக்கினத்தில் களத்திரக்காரகனாகிய சுக்கிரனும், வித்தியாக் காரகனாகியப் புதனும், ஆயுட்காரகனாகிய சனி பகவானும்கூடி இலக்கினத்திலும் கேந்திரத்திலு மிருக்க, மற்றக் கிரகங்கள் இலக்கினத்திற்கு 3-ம் இராசியிலும், லாபஸ்தானமாகிய 11-ம் இராசியிலும் இருக்கப் பிறந்தபாலன் அறுபதாவது வருடத்தில் மரணமாகுவான்.

செய்யவே புகரோன்றனும் சிறந்தபத் ததனில்நிற்க
எய்யவே புதனும்பொன்னு மிந்துவு மவரைபார்க்க
வையவே பாரிற்றனும் பன்புடன் பிறந்தபாலன்
நுய்யவே யறுபானுண்டில் தோஷமாய் மரணமாவன்.

(இ-ள்.) களத்திரக் காரகனாகியச் சுக்கிரபகவான் இலக்கினத்திற்கு 10-ம் இராசியிலிருக்க, வித்தியாக்காரகனாகிய புதனும், புத்திரக்காரகனாகியக் குருவும், மாதுர்க்காரகனாகிய சந்திரனும், அவரைப் பார்க்கப் பிறந்தபாலன் அருபதாவது வருடத்தில் மரணமாகுவான்.

அறுபத்தைந்தாவது வருடத்தில் மரணமாவதறிய.

மாவென லக்கினத்திற்கு மறையுமெட் டாதியோடு
தேவெனப் பாபரிந்தும் திரிகோண மதனிலேதான்
தாவென யவர்கள்கூடி தங்கிடப் பிறந்தபாலன்
யாவென யறுபத்தைந்தா மாண்டினி லிறப்பானென்னே

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் மிடத் ததிபனும், பாபக்கோட்களும் மாதுர்க்காரகனாகியச் சந்திரன் இவர்கள் மூவருங்கூடி திரிகோணத்திலிருக்க பிறந்தபாலன் அருபத்தைந்தாம் வருடத்தில் மரணமாகுவான், எ-று. (116)

என்னவே கடகந்தானு மிலக்கினமா யிந்துநிற்க
பன்னவே சனிமேடத்தில் பதிந்திடக் குருவேழாக
மன்னவே புவியிற்றனு மகிழுடன் பிறந்தபாலன்
வின்னவே யறுபத்தைந்தாம் வருடத்திலிறப்பான்கூறே.

(இ-ள்.) கடகவிராசி இலக்கினமாக விருக்க அதில் சந்திரனிருக்க ஆயுட்காரகனாகியச் சனி மேஷ விராசியிலிருக்க, புத்திரக்காரகனாகிய வியாழபகவான் இலக்கினத்திற்கு 7-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் அறுபத்தைந்தாம் வருடத்தில் மரணமாகுவான், எ-று. (117)

அறுபத்தாறாவது வருடத்தில் மரணமாவதறிய.

கூறவே லக்கினத்திற்குக் குலவிய நாலாம்வீட்டில்
ஏறவே சுக்கிரன்றனும் யெழிலுட னிருக்கக்கேளாய்
கோளவே குவலயத்தில் குணமுடன் பிறந்தபாலன்
யாளவே யறுபானாறு யாண்டினிற் சாகுவானே.

(இ-ள்.) களத்திரக்காரகனுகியச் சுக்கிரன் இலக்கினத்திற்கு 4-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் அறுபத்தாரும் வருடத்தில் மரணமாகுவான், எ-று. (118)

வானென லக்கினத்திற்கு வாருள யெட்டாம்வீட்டில்
பானென சுபரேவாழப் பாபரும் கேந்திரமேற
தானெனத் தரணிதன்னில் தழைத்திடப் பிறந்தபாலன்
நானென யறுபானூறு நடையாண்டில்நமனூர்சேர்வான்

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசியில் சுபக்கோட்களிருக்க பாபக்கோட்கள் கேந்திரமேறி நிற்கப்பிறந்த பாலன் அறுபத்தாறும் வருடத்தில் மரணமாகுவான், எ-று. (119)

அறுபத்தேட்டாவது வருடத்தில் மரணமாவதறிய.

சேரவே கதிரோன்லக்கினோன் சேர்ந்துபத்ததனில்நிற்க
ஏரவே சனியும்லக்கின மிருந்திட குருநால்மேவ
மீரவே புவியிற்றனும் மேலெனப் பிறந்தபாலன்
யாரவே யறுபானெட்டு யாண்டினி லிறப்பான்சொல்லே.

(இ-ள்.) பிதுர்க்காரகனுகியச் சூரியனும், இலக்கினதிபதியும் இலக்கினத்திற்குப் பத்தாம் இராசியில் இருக்க, ஆயுட்காரகனுகியச் சனி இலக்கினத்திலிருக்க, புத்திரக்காரனுகியக் குரு 4-ம் இராசியி லிருக்கப் பிறந்தபாலன் அறுபத்தெட்டாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (120)

எழுபதாவதுவருடத்தில் மரணமாவதறிய.

வேறு-விருத்தம்.

சொல்லவே சனியுமே பெலன்குறைந்து
சேரகேந் திரமலதுத் திரிகோணத்தில்
புல்லவே புதனோடுக் கதிரோன் றனும்
புகழாகக் கூடிட யலதுகேளாய்
வல்லவே தனித்தனி யாகநிற்க
வாகாகப் பிறந்திட்டப் பாலன்றனும்
இல்லவே யெழுபதா மாண்டிற்றனும்
எமலோகம் போவனென யியம்புவாயே.

(இ-ள்.) ஆயுட்காரகனுகியச் சனிபகவான் பெலன் குறைந்து கேந்திரம் அல்லது திரிகோணத்திலிருக்க, வித்தியாக்காரகனுகியப் புதனும், பிதுர்க்காரகனுகியச் சூரியனும் கூடிட அல்லது தனித்தனியாக இருக்கப் பிறந்தபாலன் எழுபதாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (121)

வாயென சனிநீச்ச மடைந்தே தானும்
வளர்கேந்திர திரிகோண மேறிநிற்க
நேயமாம் லக்கினமே யதுவேதானும்
நீடியநல்ல மனையா யிருக்க
தோயவே சுபக்கோட்க ளதிலிருக்க
தொல்லுலகில் வந்துமே பிறந்தபாலன்
ஏயவே யெழுபதா மாண்டுதன்னில்
ஏங்கியே யுயிர்நீங்கி யெமனூர்போவான்.

(இ-ள்.) ஆயுட்காரகனுகியச் சனிபகவான் நீச்சனுய் கேந்திர திரிகோணத்திலிருக்க இலக்கினமான இராசி நல்ல வீடாகவிருக்க அதில் சுபக்கிரகங்கள் இருக்கப் பிறந்தபாலன் எழுபதாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (122)

வேறு விருத்தம்.

போகவே செவ்வாயைந்தில் பொருந்திடசனியேதானும்
ஆகவே பெலமேகுன்ற யலகதிர் யேழில்மேவ
பாகமாய்ப் புவியிற்ருனும் பன்புடன் பிறந்தபாலன்
ஏகவே யெழுபாணுண்டில் யெமன்பதி யடைகுவானே.

(இ-ள்.) சகோதரக்காரகனுகியக் செவ்வாய் இலக்கினத்திற்கு 5-ம் இராசியிலிருக்க, ஆயுட்காரகனுகிய சனிபகவான் பெலன் குறைந்திருக்க பிதுர்க்காரகனுகியச் சூரியன் இலக்கினத்திற்கு 7-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் எழுபதாவது வருடத்தில் மரணமாகுவான்.

எழுபத்தைந்தாம் வருடத்தில் மரணமாவதறிய.

அடையவேசேயைந்தேறயறுங்கதிரேழில்மேவ, முடவனும் நீச்சந்தன்னில் மரிவியே யிருந்துவாழ, அடையவே புவியிற்ருனும் யன்புடன் பிறந்தபாலன், தடையென யெழுபத்தைந்தா மாண்டினி லிறப்பானென்னே.

(இ-ள்.) சகோதரக்காரகனாகியச் செவ்வாய் இலக்கினத்திற்கு 5-ம் இராசியிலிருக்க, பிதுர்க்காரகனாகிய சூரியன் 7-ம் இராசியிலிருக்க ஆயுட்காரகனாகியச் சனிபகவான் நீச்சஸ்தானமேறி நிற்கப்பிறந்த பாலன் எழுபத்தைந்தாம் வருடத்தில் மரணமாகுவான், எ-று. (124)

எழுபத்தோன்பதாவது வருடத்தில் மரணமாவதறிய.

என்னவே பொன்னோனிந்து யிருக்ககேந் திரத்தில்கூடி
மன்னவே யவரைத்தாழும் மகிழுள சுபரேபார்க்க
உன்னியப் புவியிற்றானு முதையமாய் பிறந்தபாலன்
வின்னிய யெழுபானென்பான் வருடத்தி லிறப்பான்சாற்[றே.

(இ-ள்.) வித்தியாக்காரகனாகிய வியாழபகவானும், மாதுர்க்காரகனாகிய சந்திரனும் கேந்திரத்தில் கூடியிருக்க அவரைச் சுபக்கிரகங்கள் பார்க்கப் பிறந்தப்பாலன் எழுபத்தொன்பதாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (125)

எண்பத்தாராவது வருடத்தில் மரணமாவதறிய.

சாற்றவே சுபர்கள்தானுஞ் சார்ந்துகேந் திரத்தில்மேவ
போற்றவே யெட்டாம்வீட்டில் பாபர்க ளிலாதிருக்க
ஏற்றவே யிந்துயாறில் யிருந்திடப் பிறந்தபாலன்
தோற்றவேயெண்பத்தாறுமாண்டினிலிறப்பானென்னே.

(இ-ள்.) சுபக்கிரகங்கள் கேந்திரத்திலிருக்க இலக்கினத்திற்கு 8-ம் இராசியில் பாபர்கள் இல்லாமலிருக்க, இலக்கினத்திற்கு 6-ம் இராசியில் மாதுர்க்காரகனாகிய சந்திரனிருக்கப்பிறந்தபாலன் எண்பத்தாறாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (126)

எண்பத்தெட்டாவது வருடத்தில் மரணமாவதறிய.

என்னவே யெட்டாமாதி யெட்டெனு மிராசிமேவ
பன்னவே புகரும்பாபர் பனிரண்டு யெட்டில்வாழ
உன்னவே யுலகுதன்னில் உதையமாப் பிறந்தபாலன்
மன்னிய யெண்பத்தெட்டாம் வருடத்தில்மரணமாவான்

(இ-ள்.) இலக்கினத்திற்கு எட்டாம் இராசியாதிபன் 8-ம் இராசியிலிருக்க, களத்திரக்காரகனாகியச் சுக்கிரனும், பாபக்கிரகங்களும் கூடி இலக்கினத்திற்கு 12-ம் இராசியிலும், 8-ம் இராசியிலும் இருக்க பிறந்தபாலன் எண்பத்தெட்டாவது வருடத்தில் மரணமாகுவான், எ-று.

தொண்ணூறாவது வருடத்தில் மரணமாவதறிய.

மாகவே மதியும்லக்கினேன் மரிவிட யாரும்வீட்டில்
பாகமாய்க் கனகன்றனும் பதினொன்று மூன்றில்மேவ
தோகமாய்ப் பாபர்தானும் துடர்ந்திடப் பிறந்தபாலன்
தாகமாய்த்தொண் ணூறுவதாண்டினிலிறப்பான்காணே.

(இ-ள்.) மாதுர்க்காரகனாகிய சந்திரனும், இலக்கினாதிபதியும், இலக்கினத்திற்கு 6-ம் இராசியிலிருக்க, வித்தியாக்காரகனாகிய வியாழ பகவான், 11-ம் இராசியிலும் 3-ம் இராசியிலும், இருக்க அவர்களைப் பாபக்கிரகங்கள் துடர்ந்திடப் பிறந்தபாலன் தொண்ணூறுவது வருடத்தில் மரணமாகுவான், எ-று. (128)

நூறுவதுவருடத்தில் மரணமாவதறிய.

காணவே லக்கினாதிக் கனமுறச் சுபர்கள்பார்க்க
பூணவே கேந்திரத்தில் புகழ்சுப ரமர்ந்துநிற்க
தோணவே புவியிற்றனும் தோன்றியே வந்தபாலன்
நாணவே நூறுமாண்டில் நமன்பதி தனையேசேர்வன்.

(இ-ள்.) இலக்கினாதிபதி வலுவாகயிருக்க அவரை சுபக்கிரகங்கள்பார்க்க, கேந்திரத்தில் சுபக்கிரகங்களிருக்கப் பிறந்தபாலன் நூறு வயதுவரையு மிருந்து மரணமாகுவான், எ-று. (129)

சேரவே பொன்னேன்கேந்திரம்சிறப்புடனிருக்கப்பாபர்
தேரவே பாபர்கேந்திரம் திரிகோண மதிலிருமல்
நேரவே யிருக்கத்தானும் நிலையுடன் பிறந்தபாலன்
கோரவே நூறுமாண்டில் கூற்றநூர் சேர்வான்மாதே.

(இ-ள்.) புத்திரக்காரகனாகிய வியாழபகவான் கேந்திரத்திலிருக்க பாபர் கேந்திரம் அல்லது திரிகோணத்தில் இல்லாமலிருக்கப் பிறந்த பாலன் நூறுவயதுவரையும் இருந்து மரணமாகுவான். எ-று. (130)

வேறு-விருத்தம்.

மாதென வெட்டெனு மிடத்தினாதி
மருவியப் பதினொரு மிடத்தில்மேவ
போதென வெட்டாதிப் பாபர்கூடி
பொரிந்திட யலதுயுச் சத்தில்மேவ
ஏதென யலதுமே பரிவாய்பார்க்க
எழிலாக யிப்புவியிற் பிறந்தபாலன்
ஓதென நூறுண்டு யுலகில்வாழ்ந்து
உத்தமனு மரிப்பனென வோதுவாயே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு எட்டாமிடத் ததிபன் 11-ம் இராசியிலிருக்க, அல்லது 8-ம் மிடத் ததிபனும் பாபருமாக இருக்க அல்லது உச்சத்திலிருக்க, அல்லது அவரைப்பார்க்கப் பிறந்தபாலன் நூறு வருடம்வரையில் பூமியின்மேல் இருந்து பின்பு மரணமாகுவான், எ-று.

வேறு-விருத்தம்.

ஓதவே சிங்கந்தானு முறியலக் கினமதாக
ஏதவே கிரகம்நான்கு யிருக்கதிரி கோணந்தன்னில்
போதவே புவியிற்றானும் புகழுடன் பிறந்தபாலன்
சேதவே நூறுமாண்டில் சேர்வனே யெமநூர்தானே.

(இ-ள்.) சிங்க விராசி இலக்கினமாகவிருக்க நாலுகிரகங்கள் திரிகோண யிராசிலிருக்கப் பிறந்தபாலன் நூறு வயதுவரைக்கும் பூமியில் வாழ்ந்து பின்பு நமன்பதிச் சேர்குவான், எ-று. (132)

தானெனயெட்டாம்வீட்டில் தானுறச் செவ்வாய்தானும், ஏனெனப் பொன்னேனேழில் யிருந்திடக் கதிரோன்கேந்திரம், ஊனென யுலகுதன்னில் யுதையமாய்ப்பிறந்தபாலன், மானென நூறுமாண்டில் மரணமு மாவான் விள்ளே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசியில் சகோதரக் காரகனாகியச் செவ்வாயிருக்க, புத்திரக்காரகனாகிய குரு 7-ம் இராசியிலிருக்க, சூரியன் கேந்திரத்திலிருக்கப் பிறந்தபாலன் நூறுவருடம் பூமியின்மேல் வாழ்ந்து மரிப்பான், எ-று. (133)

வில்ளவே லக்கினந்தானும் விடையுடன் கடகமாக
கொள்ளவே யதனிற்பொன்னும் குலவிடமூன்றுக்கோட்
தள்ளவே யுச்சந்தன்னில் தானுறப் பிறந்தபாலன் [கள்
தெள்ளவே நூருமாண்டில் திகைத்துயிர் மரிப்பன்கூரே.

(இ-ள்.) இலக்கினம் ரிஷபவிராசி, கடகவிராசியாக விருக்க, அதில் புத்திரக்காரனுகிய வியாழபகவானிருக்க, மூன்று கிரகங்கள் உச்சம் பெற்றிருக்கப் பிறந்தபாலன் நூறுவருடம் வரையில் பூமியின்மீது இருந்து பின்பு மரணமாகுவான், எ-று. (134)

கூறவே மதியும்புந்தி குருடனும் பொன்னேன்றுனும்
ஏறவே லக்கினத்திற்கு யெழில்நாலா மிடத்தில்நிற்க
தேறவே புவியிற்ருனும் திகழுடன் பிறந்தபாலன்
மீறவே நூருமாண்டில் மரணமு மாவான்பாரே.

(இ-ள்.) மாதுர்க்காரகனுகியச் சந்திரபகவானும், வித்தியாக் காரகனுகிய புதபகவானும், களத்திரக்காரகனுகிய சுக்கிரபகவானும், புத்திரக்காரகனுகிய வியாழபகவானும், இலக்கினத்திற்கு 4-ம் இராசி யிலிருக்கப் பிறந்தபாலன், நூருவதுவருடத்தில் மரணமாகுவான், எ-று.

பார்க்கவே பாபன்ருனும் பரிவுடன் சொல்லக்கேளாய்
ஏர்க்கவே கடகலக்கின மதனிலே யிருக்கத்தானும்
தீர்க்கவே புவியிற்ருனும் திகழுடன் பிறந்தபாலன்
கோர்க்கவே நூருமாண்டில் கூற்றநூர் சேர்குவானே.

(இ-ள்.) புத்திரக் காரகனுகியக் குரு பகவான், கடகவிராசி லக் கினமாக அதிலிருக்கப் பிறந்தபாலன் நூறுவருடம் வரையிலும் பூமி யின்மீது இருந்து பின்பு மரணமாகுவான், எ-று. (136)

வானென சுபரேதானும் வரைதிரு கேந்திரமேற
ஏனென லக்கினுதி யெட்டாதி யிவர்கள்தாமும்
நானென நாலாம்வீட்டில் நின்றிடப் பிறந்தபாலன்
தானென நூருமாண்டில் தன்னுயிர் விடுவான்காணே.

(இ-ள்.) சுபக்கிரகங்கள் கேந்திரம், திரிகோணம் அதனிலிருக்க இலக்கினுதிபதியும் இலக்கினத்திற்கு 8-ம் இராசியாதி பதியும், 4-ம் இராசியிலிருக்கப் பிறந்தப்பாலன் நூறுவருடம் வரையில் பூமியின்மீது இருந்து மரணமாகுவான், எ-று. (137)

காணவே கனகன்ருனும் கருதும்லக் கினத்தில்மேவ
பூணவே புகர்நாலேற பிறைசனி பத்தில்வாழ
தோணவே புவியிற்ருனும் தோன்றியப் பாலகன்ருன்
நாணவே நூருமாண்டில் நமன்பதி சேர்வான்மாதே.

(இ-ள்.) புத்திரக்காரகனுகிய வியாழபகவாண் இலக்கினத்தி லிருக்க, களத்திரக்காரகனுகியச் சுக்கிரபகவான் இலக்கினத்திற்கு 4-ம் இராசியிலிருக்க, மாதுர்க்காரகனுகிய சந்திரபகவானும், ஆயுட்காரகனுகிய சனி பகவான், இவர்கள், 10-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் நூறுவருடம் வரையில் பூமியின்மீது இருந்து பின்பு மரணமாகுவான், எ-று. (138)

தீர்க்காயுசு வுள்ளவனென வறிய.

**வேறு-விருத்தம்.**

மாதெனக் கடகமுத லாறுவீட்டில்
  மகிழ்வாகக் குருவிருக்க யின்னங்கேளாய்
மூதென மகரமுத லாறுவீட்டில்
  முனைந்துமே முடவனு றேறிநிற்க
ஏதெனக் கடகமதுக் கேந்திரமாக
  இப்புவியிற் பிறந்திட்டப் பிள்ளைதானும்
ஓதென தீர்க்காயு சோடுதானும்
  உலகாசை விட்டுமே மரிப்பான்காணே.

(இ-ள்.) கடகம் முதல் 6 இராசிவரையிலும், புத்திரக்காரகனுகிய வியாழ பகவானிருக்க, மகரமுதல் 6 இராசியிலும், ஆயுட்காரகனுகிய சனிபகவானிருக்க, கடகவிராசிக் கேந்திரமாக விருக்கப் பிறந்தபிள்ளை தீர்க்காயுசோடுப் பூமியில்வாழ்ந்து பின்பு மரணமாகுவான்.

வேறு விருத்தம்.

காணவே மகரமுத லாறினில் முடவனிற்க
பூணவே மற்றவீட்டில் பிறைநிற்க கேந்திரத்தை
ஊணவே வியாழன்பார்க்க உதையமாய் பிறந்தபாலன்
தோணவே தீர்க்கவாயுள் துலங்கிட யிருந்துமாள்வான்

(இ-ள்.) மகர விராசிமுதல் ஆறுராசியிலும் ஆயுட்காரகனாகியச் சனிபகவானிருக்க, மற்ற இராசிகளில் மாதுர்க்காரகனாகிய சந்திரபக வானிருக்க, கேந்திரத்தை புத்திரக்காரகனாகிய வியாழபகவான் பார்க்கப் பிறந்தபாலன் தீர்க்காயுளோடுப் பூமியில் வாழ்ந்து பின்பு மரண மாகுவான், எ-று. (140)

வாளென யிந்துதானும் வாழ்ந்திடச் சுபர்கள்வீட்டில்
நாளென யவரைத்தானும் நண்ணியே முடவன்பார்க்க
ஆளெனப் புவியிற்றானு மன்புடன் பிறந்தபாலன்
வாளென தீர்க்காயோடு வாழ்ந்துபின் மரிப்பன்கூறே.

(இ-ள்.) மாதுர்க்காரகனாகியச் சந்திரன், சுபர்கள் வீட்டிலிருக்க, அவரைச் சனிபகவான் பார்க்கப் பிறந்தபாலன் தீர்க்காயுளோடு வாழ்ந்து பின்பு மரணமடைகுவான், எ-று. (141)

வேறு-விருத்தம்.

கூறவே மிதுனமுத லாறுவீட்டில்
குலவியே வியாழபக வானிருக்க
றேறவே மற்றதோ ருறுவீடும்
திரிகோண கேந்திரத்தி லியம்பக்கேளாய்
பேறவே புதன்புக னிருக்கத்தானும்
புவிதனிலே வந்துமே பிறந்தபாலன்
நேறவே தீர்க்காயு ளோடுவாழ்ந்து
நீடிய நமன்பதியை சேர்வானென்னே.

(இ-ள்.) மிதுனவிராசிமுதல் ஆறுராசியிலும், புத்திரக்காரகனாகிய வியாழபகவானிருக்க, மற்ற ஆறு ராசியிலும், திரிகோணத்திலும், கேந்திரத்திலும், வித்தியாக்காரகனாகிய புதபகவானும், களத்திரக்காரனாகிய சுக்கிரபகவானு மிருக்கப் பிறந்தபாலன் தீர்க்காயுளோடு வாழ்ந்து மறிப்பன், எ-று. (142)

வேறு-விருத்தம்.

என்னவே சுபர்கள்தாமு மேழெட்டு யாறில்மேவ
பன்னிய மூன்றுலாபம் பரிவுள ராசிதன்னை
கன்னியச் சுபரேபார்க்க களிப்புடன் பிறந்தபாலன்
உன்னியத் தீர்க்காயோடு யுலகினில் வாழ்ந்திரப்பான்.

(இ-ள்.) சுபக்கிரகங்கள் இலக்கினத்திற்கு, 7-ம் இராசியிலும், 8-ம் இராசியிலும், 6-ம் இராசியிலும் இருக்க, 3-ம் இராசியையும், லாபஸ்தானமாகிய 11-ம் இராசியையும் சுபக்கிரகங்கள் பார்க்கப்பிறந்த பாலன் தீர்க்காயுளோடு வாழ்ந்து மரிப்பான், எ-று. (143)

பானென யாறுயெட்டுப் பனிரண்டா மிடத்தைதானும்
நானெனச் சுபரேதாமும் நண்ணியே கண்ணால்பார்க்க
ஊனென யுலகிற்றானும் யுதையமாய்ப் பிறந்தபாலன்
வானென தீர்க்காயோடு வாழ்ந்துமே மரிப்பான்காணே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 6-ம் இராசியிலும், 12-ம் இராசியிலும் சுபக்கிரகங்கள் கண்ணோக்கம் வைத்துப்பார்க்கப்8-ம் இராசியிலும், பிறந்தபாலன் தீர்க்காயுசோடு வாழ்ந்து மரிப்பான், எ-று. (144)

வேறு-விருத்தம்.

காணவே யுச்சமொடு லக்கினந்தன்னை
கருதியே முப்பதுபங் காக்கிக் கேளாய்
பூணவே பத்துகதி றிந்துமூன்று
புகழ்சேய் யிருபத்தெட் டோடு நாலாய்
வேணபுந்தி பதினைந்துப் பதினேழாக
விளங்கிய குருபுகற்கு யிருபத்தேழே
தோணவே வந்திடிலோ பிறந்தபாலன்
தீர்க்காயோ டிருந்துமே பின்மரிப்பன்.

(இ-ள்.) உச்சத்தையும் லக்கினத்தையும் முப்பது பங்காக்கி 10-சூரியன், சந்திரன் மூன்று, செவ்வாய், 28–4–புதன்-15-17-குரு - சுக்கிரன் 27-ஆகவரில் பிறந்தபாலன் தீர்க்காயுளோடுவாழ்ந்து மரிப்பான்.

வெகுவயதேன வறிய.

வேறு விருத்தம்.

பார்க்கவே திரிகோணம் பாபர்பற்றிட சுபர்கேந்திரிக்க
ஏர்க்கவே பாபரெட்டி லில்லாம லிருக்கத்தானும்
கோர்க்கவே குவலயத்தில் குணமுடன் பிறந்தபாலன்
சேர்க்கவே வெகுவயதுச் சிறப்புட னிருப்பான்மாதே.

(இ-ள்.) பாபர் திரிகோணத்திலிருக்க, சுப்ர் கேந்திரத்திலிருக்க பாபர் இலக்கினத்திற்கு 8-ம் இராசியில் இல்லாமலிருக்கப் பிறந்தபாலன் வெருவய திருப்பான், எ-று. (146)

வேறு விருத்தம்.

மாதென லக்கினமே கடகமாக
மதிகுருவு மதிலிருக்க மறையக்கேளாய்
போதென புகர்புந்தி கேந்திரமேற
புகழ்செவ்வாய்க் கதிர்சனியும் லக்கினத்திற்கு
ஏதென மூன்றாறு லாபந்தன்னில்
இருந்திட யிப்புவியிற் பிறந்தபாலன்
ஓதென வெகுவய தோடிருந்து
உலகினில் வாழ்வனென வுரைசெய்வாயே.

(இ-ள்.) இலக்கினம் கடகவிராசியாக விருக்க அதில் மாதுர்க்காரகனாகிய சந்திரபகவானும், புத்திரக்காரகனாகிய வியாழபகவானுமிருக்க, களத்திரக்காரகனாகிய சுக்கிரபகவானும் வித்தியாக் காரகனாகிய புதபகவானும், கேந்திரத்திலிருக்க, சகோதரக்காரகனாகிய செவ்வாயும், பிதுர்க்காரகனாகியச் சூரியனும், ஆயுட்காரகனாகியச் சனிபகவானும் இலக்கினத்திற்கு 3-ம் இராசியிலும், 6-ம் இராசியிலும், 11-ம் இராசியிலும் இருக்கப் பிறந்தபாலன், வெகுவயதிருப்பான். ()

வேறு விருத்தம்.

வாயென லக்கினந்தானும் வாகுளக் கடகமாக [ம்
தோயென சனியுங்கோலாய்த் துலங்கிட விடையிலிந்து
மாயென மகரம்பொன்னு மரிவிடப் பிறந்தபாலன்
நேயென வெகுவயது நீடியே யிருப்பானென்னே.

(இ-ள்.) இலக்கினம் கடகவிராசியாக விருக்க, ஆயுட்காரகனுகிய சனிபகவான், துலாவிராசியிலிருக்க, மாதுர்க்காரகனுகியச் சந்திர பகவான் இரஷபவிராசியி லிருக்க, புத்திரக்காரகனுகிய குருபகவான் மகரவிராசியிலிருக்கபிறந்தபாலன் வெகுவயதோடிருந்து வாழ்குவான்.

என்னவே யெட்டாமிட மெழிலுறு முச்சமாக
பன்னவே லக்கினதி பகருமெட் டாதிகேந்திரம்
துன்னவே தாமிருக்கச் சுபர்பார்க்கப் பிறந்தபாலன்
மன்னவே வெகுவயது மகிழ்வுட னிருந்துவாழ்வான்.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசி உச்சமாகவிருக்க, இலக்கினதிபதியும், 8-ம் இராசியாதிபனும், கேந்திரத்திலிருக்க அவரைச் சுபர்கள்பார்க்கப் பிறந்தபாலன் வெகுவயதோடிருந்து வாழ்குவன்.

அற்பாயுசனென வறிய.

வேறு விருத்தம்.

வாழவே சூரிய னுதையமாகி
வருவதற்கு முந்திரண் டரைநாழித்தான்
தாழவலது யஸ்தமித்த பிந்தி
தானுகு மிரண்டரைநா ழிகையிலுந்தான்
ஆழவே குழந்தையதுப் பிறந்தால்கேளு
அற்பாயு சாயுலகி லேயிருந்து
சூழவே நமன்பதியைச் சேர்வானென்று
சுத்தமுடன் மகாரிஷிக ளோதினுறே.

(இ-ள்.) சூரியபகவான் உதையமாகிறதற்கு முந்தி இரண்டரை நாழிகையும், அல்லது சூரியபகவான் அஸ்தமித்தபிந்தி இரண்டரை நாழிகையிலும், குழந்தைப்பிறந்தால் அற்பாயுசுளன், எ-று. (150)

வேறு விருத்தம்.

நாறென யிந்துகேந்திரம் நண்ணியே யிருக்கத்தானும்
பாறென யவரினேடுப் பாபர்கூ டிடவேகேளாய்
நேறெனப் புவியிற்றனும் நிலமையாய் பிறந்தபாலன்
ஆறென யற்பாயுசோடு யவனிருந் திரப்பான்சொல்லே.

(இ-ள்.) மாதுர்க்காரகனுகியச் சந்திரபகவான் கேந்திரத்திலிரு க்க அவருடன் பாபர்கூடிடப் பிறந்தபாலன் அற்பாயுசுயாக விருந்து இறப்பான், எ-று. (151)

சொல்லவே யாறுயெட்டுப் பனிரண்டா மிடத்திற்றனும்
புல்லவே பாபர்தாமும் புகழுட னேறிநிற்க
வல்லவே புவியிற்றனும் வாகுடன் பிறந்தபாலன்
அல்லவே யற்பாயோடு யவனிருந் திரப்பானென்னே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 6-ம் இராசியிலும் 8-ம் இராசியிலும் 12-ஆம் இராசியிலும் பாபர்களிருக்கப் பிறந்த பாலன் அற்பாயுசோடு யிருந்து மரணமாகுவான். எ-று. (152)

என்னவே கதிரேனிந்துயெழில்சனிசெவ்வாய்தானும்
பன்னவே நாலாமிராசி பகருங்கேந் திரத்திலேற
உன்னவே புவியிற்றனு முலகினிற் பிறந்தபாலன்
மன்னவே யற்பாயோடு வாழ்ந்துமே மரிப்பான்கூரே.

(இ-ள்.) பிதுர்க்காரகனுகியச் சூரியனும் மாதுர்க்காரகனுகியச் சந்திரனும் ஆயுட்காரகனுகிய சனிபகவானும் சகோதரக்காரகனுகிய அங்காரகனும் இலக்கினத்திற்கு4-ம் இராசியிலும்,கேந்திரத்திலுமிருக் கப் பிறந்தபாலன் அற்பாயுசுவுளன், எ-று. (153)

கூறவே யிந்தும்வெய்யோன் குலவிட யீரார்தன்னில்
சேறவே பனிரண்டாதி சிறந்தலக் கினத்தில்வாழ
பேறவே புவியிற்றனும் பெட்புடன் பிறந்தபாலன்
ஆறவே யற்பாயோடு யவனிருந் திரப்பான்காணே.

(இ-ள்.) மாதுர்க்காரகனுகியச் சந்திரனும், பிதுர்க்காரகனுகியச் சூரியனும், இலக்கினத்திற்கு 12-ம் இராசியிலிருக்க, 12-ம் இராசியாதிபன் இலக்கினத்திலிருக்கப் பிறந்த பாலன் அற்பாயுசோடு வாழ்ந்து மறிப்பான், எ-று. (154)

வேறு விருத்தம்.

காணவே ஜெனனமதுக் கடகமாக
  கயரவே யலதுதே ளாயிருக்க
பூணவே பாபரும் ஒன்றிரண்டு
  பொருந்திய பத்துபதி னொன்றீருறில்
ஊணவே தானிருக்கச் சுபர்கள்தாமும்
  ஓதுநா லைந்தாறு யேழுயெட்டு
தோணவே யொன்பதிலே யிருக்கத்தானும்
  தோன்றியப் பாலனற்பா யுள்ளான்பாரே.

(இ-ள்.) ஜெனனவிராசி கடகம், அல்லது விருட்சிகமாகவிருக்க, பாபர்கள் 1-2-10-11-12-இந்த ராசிகளிலிருக்க, சுபர்கள், 4-5-6-7-8 9-இந்த ராசிகளிலிருக்கப் பிறந்தபாலன் அற்பாயுசுளன். எ-று. (155)

வேறு விருத்தம்.

பார்க்கவே யிந்துதானும் பனிரண்டி லிருக்கப்பாபர்
கோர்க்கவே யொன்றுயெட்டில் குலவிடச் சுபரேகேளாய்
ஏர்க்கவே மூன்றும்வீட்டி லிலாதுறப் பிறந்தபாலன்
ஆர்க்கவே யற்பாயோடு யவனிருந் திரப்பான்மெய்யே.

(இ-ள்.) மாதுர்க்காரகனுகிய சந்திரன் இலக்கினத்திற்கு 12-ம் இராசியிலிருக்க, பாபர்கள் இலக்கினத்தினும், 8-ம் இராசியினுமிருக்க சுபர்கள் 3-ம் இராசியில் இல்லாமலிருக்கப் பிறந்தபாலன் அற்பாயுசு உடையவனுகும், எ-று. (156)

கொஞ்சம் வயதேன வறிய.

மெய்யெனப் பாபர்தாமு மருவியா றெட்டுமீறுர்
பையவே லக்கினுதி பலன்குன்ற சுபர் பாருறேல்
துய்யவே புவியிற்ரு னும் தோன்றியப் பாலனுக்கு
குய்யவே வயதுதானுங் கொஞ்சமாம் புகலுவாயே.

(இ-ள்.) பாபக்கிரகங்கள் இலக்கினத்திற்கு 6-ம் இராசியிலும், 8-ம் இராசியிலும், 12-ம் இராசியிலும் இருக்க இலக்கினதிபதி பெலன் குறைய அவரை சுபக்கிரகங்கள் பார்க்காதிருக்கப் பிறந்தபாலன் கொஞ்சம் வயதுடையவனாகும், எ—று. (157)

புகலவே பாபர்தானும் பொருந்தி கேந்திரமேயேற
தகலவே சுபர்நோக்காமல் தானிற்க லக்கினாதி
இகலவே பெலமேகுன்ற யெழிலுடன் பிறந்தபாலன்
அகலவே யற்பாயோடு யவனிருந் திறப்பான்சாற்றே.

(இ—ள்.) பாபக்கிரகங்கள் கேந்திரத்திலிருக்க, அவரைச் சுபர்கள் பாராதிருக்க, இலக்கினாதிபதி பெலன் குறையப் பிறந்தபாலன் கொஞ்சம் வயதுளன், எ-று. (158)

சாற்றவே பாபர்தாமும் சார்ந்துறெண் டீரூர்மேவ
பேற்றவே யவரைத்தாமும் புகழ்சுபர் பாற்காநிற்க
தேற்றவே புவியிற்றானும் திகழுடன் பிறந்தபாலன்
ஏற்றவே யற்பவாயு ளானெனை வுரைசெய்வாயே.

(இ—ள்.) பாபர்கள் இலக்கினத்திற்கு 2—ம் இராசியிலும், 12-ம் இராசியிலும் இருக்க அவரைச் சுபர்கள் பார்க்காதிருக்கப் பிறந்த பாலன் கொஞ்சம் வயதுடையவனாகும், எ-று. (159)

கலி விருத்தம்.

செய்யவே பிதுர்க் காரகனாகிய
வெய்யவன் பெலமே குன்றிவீற்றிட
துய்யவே புவிமீதுப் பிறந்தவன்
மெய்யவேயற்ப வாயுள னாகுமே.

(இ-ள்.) பிதுர்க்காரகனாகியச் சூரியன், பெலன் குறைந்திருக்கப் பிறந்த பாலன் கொஞ்சம் வயதுளன், எ-று. (160)

அற்ப பலனுளனென வறிய.

வேறு-விருத்தம்.

ஆகவே மேடந்தன்னில் ஆயுளான் சனியினோடு
பாகவே புகரும்புந்தி பாபரும் சுபர்பொன்வெய்யோன்
ஏகமாய்க் கூடிநிற்க வெழிலுடன் பிறந்தபாலன்
தாகமா யற்பபலன் தானுளா னென்றுசாற்றே.

(இ-ள்.) மேஷ விராசியில் ஆயுட்காரகனாகிய சனிபகவானும், களத்திரக்காரகனாகிய சுக்கிரபகவானும் வித்தியாக்காரகனாகிய புதபகவானும், பாபரும் சுபரும் புத்திரக்காரகனாகிய குருபகவானும், பிதுர்க்காரகனாகிய சூரிய பகவானும் ஒன்றாகக் கூட்டிடப் பிறந்தபாலன் அற்பபலனுளன், எ-று. (161)

மூன்கால வயதறிய.

சாற்றவே யெட்டாமாதி சார்ந்துகேந் திரத்தில்மேவ
போற்றவே லக்கினாதிப் பாபரு மலதுகேளாய்
ஏற்றவே வலுவதாக யிருந்திடப் பிறந்தபாலன்
தோற்றவே வெகுவயதுத் துலங்கிட யிருப்பான்றானே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு, 8-ம் இராசி யாதிபன் கேந்திரத்திலிருக்க, இலக்கினாதிபதி பாபர் அல்லது வலுவாக யிருக்கப்பிறந்த பாலன் வெகுவயது உள்ளவனாகும், எ-று. (162)

தானென லக்கினம்பத்தில் தங்கியெட் டாதிபன்றான்
நானென வலுவதாக நண்ணியே யிருக்கக்கேளாய்
மானெனப் புவியிற்றானு மகிழுடன் பிறந்தானுக்கு
வேனென வெகுவயததுதான் விளங்குமென் றுரைசெய்
[வாயே.

(இ-ள்.) இலக்கினத்தினும், 10-ம் இராசியினும் 8-ம் இராசியாதிபன் வலுவாக இருக்கப்பிறந்த பாலனுக்கு, வெகுவயதுடன் வாழ்ந்து பின்பு மரிப்பானென் றறிவாய், எ-று. (163)

வாயெனப் புகரலது புந்தியு மலதுபொன்னோன்
ஏயென கேந்திரத்தில் யிருந்திடப் பாபர்கேளாய்
தேயென யிருக்கப்பாற்க தொல்புவி பிறந்தபாலன்
நேயென வெகுவயதுதான் நீடியே யிருந்துவாழ்வான்.

(இ-ள்.) களத்திரக்காரகனாகிய சுக்கிரபகவான், அல்லது வித்தியாக்காரகனாகியப் புதபகவான், அல்லது புத்திரக்காரகனாகிய வியாழ பகவான், கேந்திரத்திலிருக்க, பாபர்கள் அதில் இருக்க அல்லது பார்க்கப் பிறந்தபாலன் வெகு வயதோடிருந்து வாழ்குவன், எ-று. ()

மாரகதிசை அறிய.

வேறு விருத்தம்.

வாழவே மேஷமதில் வரையக்கேளாய்
வாகுளப் புந்திபுகர் பாபர்வெய்யோன்
சூழவே பொன்சுபரு மொன்றாய்கூடில்
சூழ்புவியிற் பிறந்திட்ட பாலனுக்கு
தாழவே புகருடைய திசையாமாகிற்
தான்வருகு மாரகந்தான் காண்பாயென்று
மீழவே வுலகோற்கு வேணுமென்றே
மேன்மையுள யகத்தியமுனி யோதினாறே.

(இ-ள்.) மேஷவிராசியில் ஆயுட்காரகனாகியச் சனிபகவான், களத்திரக்காரகனாகியச் சுக்கிரபகவான், வித்தியாக்காரகனாகிய புதபகவான், பாபர், பிதுர்க்காரகனாகியச் சூரியன், புத்திரக்காரகனாகியகுரு பகவான், சுபர்கள் இவர்கள் ஒன்றாகக்கூடினால் சுக்கிரன் மகாதிசையில் மாரகம் வருமென அகத்திய மகாமுனிவர் திருவாய்மலர்ந்தருளினார், எ-று. (165)

நாமெறன விடைதனிலே நவிலக்கேளாய்
நலமான குருசெவ்வாய்ச் சூரியனோடு
பேறெனத் தாமிருக்கப் பாபர்வெய்யோன்
பேசரிய யிந்துவொடு சுபரும்வெள்ளி
தேறவே லக்கினமா மதற்குக்கேளாய்
தானிரண்டா மிடமதிலே தங்கிநிற்க
மீறவே யிப்புவியிற் பிறந்தோனுக்கு
மிக்கமா ரகம்வருமென் றுறைசெய்வாயே

(இ-ள்.) இரிஷப விராசியில் புத்திரக்காரகனுகிய குருபகவான், சகோதரக்காரகனுகிய அங்காரபகவான், பிதுர்க்காரகனுகிய சூரிய பகவானும், கூடியிருக்க, பாபரும் சூரியபகவானும், சந்திரபகவானும் சுபக்கிரகங்களும், சுக்கிரபகவானும், இரண்டாமிடத்தி லிருக்கப்பிறந்த பாலகனுக்கு அங்காரதிசையில் மாரகம், எ-று. (166)

செய்யவே மிதுனமதிற் சொல்லக்கேளாய்
சீருன குருசெவ்வாய்க் கதிரும்பாபர்
முப்பவே புகர்சுபர் இந்திரனேடு
முடவனர் தானிருக்க யற்பமாகும்
துய்யவே பாபருடத் திசையிற்ருனும்
தோஷமா மாரகமுண் டலதுகேளாய்
பையவே செவ்வாயின் றிசையிலேதான்
பகருவாய் மாரகமுண் டென்றுதானே.

(இ-ள்.) மிதுனவிராசியில் குருபகவான் அங்காரகபகவான், சூரியபகவான், பாபர், சுக்கிரபகவான், சுபர், சந்திரபகவான், சனிபகவான், இவர்கள் கூடியிருக்க அற்பமாய்ப், பாபர் திசையில் மாரகம், அல்லது அங்காரகன் திசையில் மாரகம், எ-று. (167)

**வேறு விருத்தம்.**

தானேகடக மாமதிலே ததிசேர்புந்தி பாபர்குரு
கானேசேயும் சுபருறவே கதிரேன்யோக மாமதிலே
மானேமா ரகமெனவே வறியப்புவியிற் றெளிவாக
சேனேசித்தர் முனிவர்களும் செப்பினர்கள் தப்பாதே.

(இ-ள்.) கடகவிராசியில் புதபகவானும், பாபரும், குருபகவானும், அங்காரகபகவானும், சுபரும் கூடியிருக்க, சூரியபகவானுடைய யோகத்தில் மாரகம் வருமென்று, சித்தர்களும், முனிவர்களும் சொல்லிய வாக்குதப்பாது, எ-று. (168)

தப்பாசிங்க மாமதிலே தயவாயசுரர் குருவோடு
ஒப்பாய்புந்தி பாபர்சேய் வோங்கும்சுபரே கூடவே
மெப்பாய்பொன்னே டுபுகர்தன் மேவுயோக மாமதனிற்
கப்பாய்க்காளே யோன்றனக்கே காட்டுமாரகமெனசாற்றே

(இ-ள்.) சிங்கவிராசியில் சுக்கிரபகவானும், புதபகவானும், பாப ரும், அங்காரகபகவானும், சுபரும், கூடியிருக்க, குரு-சுக்கிரன் யோ கத்தில் மாரகமுண்டாம், எ-று. (169)

சாற்றக்கன்னி யாமதனிற் சார்பாய்வெய்யோ னிந் துடனே, தேற்றபொன்னோன் பாபர்புந்தி தக்கசுபருங் கூடிடிலோ, ஏற்றபுந்திப் புகர்யோகமாகநடக்க யியம்பக் கேள், போற்றப்புக ரோன்றானும் புகலுமாரகனெனச் சாற்றே.

(இ-ள்.) கன்னியாவிராசியில் சூரியபகவான், சந்திரபகவான், வியாழபகவான், பாபர் புதபகவான், சுபர்கூடியிருக்க, புதன் சுக்கிரன் யோகத்தில், சுக்கிரபகவானால் மாரகனாகும், எ-று. (170)

என்றேகோலா மாமதிலே யெழில்சேய்வெய்யோன் பாபருடன், நின்றேமூடவன் புதன்சுபரும் நேயமாகத் தான்கூட, நன்றேயிந்துப் புதன்யோகம் நலமாய்நடக்க நவிலக்கேள், சென்றேசெவ்வாய் தானலவோ செப்பு வாய் மாரகனாகும்.

(இ-ள்.) துலாம் இராசியில் செவ்வாய், சூரியன், பாபர், சனி, புதன், சுபர் இவர்கள் கூடியிருக்க சந்திரன், புதன் யோகத்தில், அங் காரகனால் மாரகனாகும், எ-று. (171)

ஆகுந்தேளா மாமதிலே யறியப்புந்திப் புகருடனே [ள் ஏகும்செவ்வாய்ப் பாபருமே யெழிலாய்க்கூடயியம்பக்கே போகுமிந்து யோகமதுப் புகழதாகவேநடக்க [ரையே. தாகும்பொன்னோன் மாரகனென்றே தக்ககணிதந் தானு

(இ-ள்.) விருட்சிக இராசியில், புதபகவானும், அங்காரக பகவா னும், சுக்கிரபகவானும், பாபரும் கூடியிருக்க, சந்திரபகவானுடைய யோகத்தில் குருபகவானால் மாரகனாகும், எ-று. (172)

உறையச் சிலையாமாமதனில் யுற்றப்புக ரோடுபாபர் நிறையக் கதிரோனுஞ்சுபரும் நெரிங்கிகூடி யேவாழ அறையப்புந்தி யோகமதாய் யன்பாய்நடக்க யறையக்கேள் புறையயிந்து மாரகனும் புவியின்மீதுப் புகல்வாயே.

(இ-ள்.) தனுசு விராசியில் சுக்கிரபகவானும் பாபரும், சூரியபகவானும், சுபரும், கூடியிருக்க புதனுடைய யோகத்தில், சந்திரனல் மாரகம், எ-று. (173)

புகலமர மாமதனில் பொன்னேன்செவ்வா யிந்துடனே
தகலபாபர் புகர்புந்தி தாமேகூடி யேவாழ
இகலசுபர்கள் யோகமது யெழிலதாக தானடக்க [ல்லே.
அகலும்புகரேன் மாரகனென் றலனியோற்கு தான்சொ

(இ-ள்.) மகர விராசியில், குருபகவான், அங்காரகபகவான், சந்திரபகவான், பாபர், சுக்கிரபகவான், புதபகவான், இவர்கள் கூடியிருக்க, சுபர் யோகத்தில், சுக்கிரபகவான் மாரகன் என புவியோற்கு ஓதுவாய், எ-று. (174)

சொல்லக்கும்ப மாமதிலே சுரகுருசே யிந்துபாபர்
புல்லப்புகரோன் சுபர்புந்தி புகலுமிவர்கள் யோகமதில்
வல்லக்குருவே மாரகனுய் வருவானென்றே புவியோற்கு
நல்லகணித மாருய்ந்து நாட்டிற்சொல்லிக் கீர்த்தியுறே.

(இ-ள்.) கும்ப விராசியில் குருபகவான், சந்திரபகவான், அங்காரகபகவான், பாபர் கூடியிருக்க, சுக்கிரன், சுபர், புதன் இவர்கள் யோகத்தில் குருமாரகனுகும் இவ்வகையாக கணித நூற்களை ஆருய்ந்துச்சொல்லிக் கீர்த்திப் பெருகுவாய், எ-று. (175)

யுறவேமீன மாமதனில் யுற்றசனிபுந்தி கதிர்பாபர் [லே
பெறவேசெவ்வா யிந்துசுபர் பொன்னேன்யோக மாமதி
அறவேயங்கா ரகந்தானு யவனேகமாரக னேயாகும்
திறவேயில்லா ருருய்ந்து திகழாய்பலனை சாற்றிடுமே.

(இ-ள்.) மீனவிராசியில், சனிபகவான், புதபகவான், சூரியபகவான், பாபர், அங்காரகபகவான், சந்திரபகவான், சுபர், குருபகவான், இவர்கள் யோகத்தில் அங்காரகன் மாரகனுக வருவானென்று ஆராய்ந்துச் சொல்கவும், எ-று. (176)

துஷ்டரால் மரணமாவ தறிய.

வேறு விருத்தம்.

சாற்றவே லக்கினமா மதற்குக்கேளாய்
சார்பான பத்தினிலே செவ்வாய்நிற்க
ஏற்றவே யெட்டினிலே யிந்துநிற்க
யெழிலான சனிபகவான் லக்கினமேற
தேற்றவே நான்காமிடத்திற் கதிரோன்நிற்க
திகழாக யிப்புவியிற் பிறந்தபாலன்
தூற்றவே துஷ்டர்களால் துன்பப்பட்டு
துஞ்சியே மரணமாவா னென்றுசொல்லே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு, 10-ம் இராசியில் சகோதரக்காரகனாகிய அங்காரக பகவானிருக்க, 8-ம் இராசியில் மாதுர்க்காரகனாகிய சந்திரபகவானிருக்க, இல்க்கினத்தில் சனிபகவானிருக்க, 4-ம் இராசியில் பிதுர்க்காரகனாகியச் சூரிய பகவானிருக்கப் பிறந்தபாலன், துஷ்டர்களால் துன்பப்பட்டு மரணமடைகுவான், எ-று. (177)

வேறு-விருத்தம்.

சொல்லவே யெட்டாமதிச் செவ்வாயுங் கூடித்தானும்
வல்லதோ ருசிஞெடு விரையமே யேறிநிற்கப்
புல்லவே புவியின்மீதுப் புகழுடன் பிறந்தபாலன்
தொல்லையாந் துஷ்டருலே தோஷமாய் மரணமாவான்.

(இ-ள்.) இல்க்கினத்திற்கு 8-ம் இராசியாதிபனும் சகோதரக்காரகனாகிய அங்காரகனும், கூடி இலக்கினத்திற்கு 6-ம் இராசியிலும், விரையஸ்தானமாகிய 12-ம் இராசியிலும் இருக்கப் பிறந்தபாலன் துஷ்டர்களால் தோஷமாக மரணமாகுவான், எ-று. (178)

வாலிபத்தில் மரணமாவ தறிய.

மாவென லக்கினத்திற்கு மரிவிய யெட்டாமாதி
தாவென லக்கினுதி தான்கூடி யாறில்மேவ
பாவெனச் சனியேபார்க்க பாரினிற் பிறந்தபாலன்
வாவென வாலிபத்தில் வரியவே மரணமாவான்.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசியாதிபனும், லக்கினாதிபதியும் கூடி இலக்கினத்திற்கு, 6-ம் இராசியிலிருக்க, அவரைச் சனிபார்க்கப் பிறந்தபாலன் வாலிபத்தில் மரணமாகுவான், எ-று. (179)

அறிட்டம் அறிய.

வானென லக்கினத்தும் வரியயெட் டாமிடத்தும்
தானென செவ்வாயிந்து தங்கியே யிருக்கக்கேளாய்
நானென சனியேபார்க்க நாட்டினிற் பிறந்தபாலன்
ஊனென யறிட்டம்நேர்ந்து வுயிரது விடுவானென்னே.

(இ-ள்.) இலக்கினத்தினும் அதற்கு 8-ம் இராசியினும், அங்காரகபகவானும், சந்திரபகவானு மிருக்க, அவரைச் சனிபகவான் பார்க்கப் பிறந்த பாலனுக்கு அரிட்டம் நேரும், எ-று. (180)

உயரத்திலிருந்து விழுவானென வறிய.

என்னவே புகரோனுக்கு யிரண்டுமே வலிவதாகி
பன்னவே பாபருக்குப் பார்க்கமத் தியினில்வாழ
கன்னிய மாகத்தானும் களிப்புடன் பிறந்தபாலன்
உன்னிய வுயரமேறி விழுவனென் றுறைசெய்வாயே.

(இ-ள்.) சுக்கிரனுக்கு இரண்டாமிடம் வலுவாகவும், பாபர் மத்தியில் சுக்கிரனிருக்கப் பிறந்தபாலன் உயரத்திலிருந்துவிழுவான்,எ-று.

கள்ளரால் மரணமாவதறிய.

செய்யவே யெட்டாமாதி சீரியராகுங்கூடி
பையவே யெட்டினோடுப் பனிரண்டா மிடத்தில்மேவ
உய்யவே யிருக்கத்தானு முலகினிற் பிறந்தபாலன்
துய்யவே கள்ளராலும் தோஷமாய் மரணம்நேரும்.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசியாதிபனும்,இராகுவுங்கூடி இலக்கினத்திற்கு 8-ம் இராசியிலும், 12-ம் இராசியிலும் இருக்கப் பிறந்தபாலன் கள்ளர்களால் மரணமடைகுவான், எ-று. (182)

நேரவே கதிரோன்றானும் நீடியநாலில்மேவ
சேரவே செவ்வாய்பத்தில் சேர்ந்திடற் சனியேபார்க்க
தேரவே புவியிற்றானும் திகழுடன் பிறந்தபாலன்
கோரவே கள்ளராலும் குற்றமாய் மரணமாவான்.

(இ-ள்.) சூரியபகவான் இலக்கினத்திற்கு 4-ம் இராசியிலிருக்க, அங்காரகபகவான் 10-ம் இராசியிலிருக்க அவரைச் சனிபகவான் பார்க்கப் பிறந்தபாலன் கள்ளர்களால் மரணமடைகுவான், எ-று. ()

தண்ணீர்க் கரையில் மரணமாவ தறிய.

மாகவே லக்கினாதி மருவும்நா லாதிக்கூடி
பாகவே நாலில்மேவ பத்தாதி யவரைப்பாற்க
ஏகவே புவியின்மீது யெழிலுடன் பிறந்தபாலன் [னே.
வேகவே தண்ணீர்க்கரையில் தன்னுயிற் போகுமென்

(இ-ள்.) இலக்கினாதிபதியும் இலக்கினத்திற்கு 4-ம் ராசியாதிபதியும் கூடி, நாலாம் இராசியிலிருக்க அவரைப் பத்தாம் இராசியாதிபன் பார்க்கப் பிறந்தபாலன் தண்ணீர்க்கரையில் மரணமாகுவான், எ-று.

ஜலகண்டம் வருவதறிய.

என்னவே யெட்டாமாதி யோடுமே லக்கினாதி
கன்னிய மாகக்கூடிக் காணவோர் மனையில்வாழ
பன்னியே புவியின்மீதுப் பரிவுடன் பிறந்தானுக்கு
வின்னமாய் ஜலத்திற்கண்டம் வருமென சாற்றுவாயே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசி யாதிபனும், இலக்கினாதிபதியும் ஒன்றாய்க்கூடி ஒருராசியிலிருக்கப் பிறந்தபாலனுக்கு ஜலகண்டம் வரும், எ-று. (185)

ஆயுதத்தால் மரணமாவதறிய.

வேறு விருத்தம்.

வாயெனக் கதிரலது யிந்துதானும்
வாகாக லக்கினமே யேறிநிற்க
ஆயென சுபரோடுப் பாபர்தானும்
ஐந்துயெட் டோடுநவ மேறிநிற்க

தோயென யிப்புவியிற் பிறந்தபாலன்
தாயோடுப் பிள்ளைகளு மாகவேதான்
சாயென யாயுதங் கள்தன்னாலே
சண்டனூர் போவறெனச் சாற்றுவாயே.

(இ-ள்.) பிதுர்க்காரகனாகிய சூரியபகவான், அல்லது சந்திரபக வான் இலக்கினத்திலிருக்க, சுபரும், பாபரும், இலக்கினத்திற்கு 5-ம் இராசியிலும், 8-ம் இராசியிலும் 9-ம் இராசியிலும் இருக்கப் பிறந்த பாலன் தாயுடன் பிள்ளைகளும் ஆயுதத்தால் மரணமடைகுவர், எ-று.

சாற்றவே சனிகதி ரவதுகேளாய்
சார்பாக புதன்ராகு யிவர்கள்கூடி
ஏற்றவே லக்கினமா மதிலிருக்க
எழிலான செவ்வாயு மியம்பக்கேளாய்
தோற்றவே லக்கினத்திற் கெட்டாம்வீட்டில்
துலங்கவே யிருந்திடப் பிறந்தபாலன்
ஆற்றவே தாயோடுப் புதல்வர்தாமும்
ஆயுதத்தால் மரணமுமே யாகுவாரே.

(இ-ள்.) பிதுர்க்காரகனாகிய சூரியபகவான், ஆயுட்காரகனாகியச் சனிபகவான், அல்லது, வித்தியாக்காரகனாகிய புதபகவான், இராகு இலக்கினத்திலிருக்க, சகோதரக்காரகனாகிய அங்காரகபகவான் இலக் கினத்திற்கு 8-ம் இராசியிலிருக்கப் பிறந்தவன் தாயும் பிள்ளையுமாக ஆயுதத்தால் மரணமாகுவர், எ-று. (187)

பாம்பு கடிப்பதென வறிய.

வேறு-விருத்தம்.

வாறென ராகுவோடு வாகுள சனியும்வெய்யோன்
ஏறெனக் கூடிதானும் ஏழதாம் வீட்டில்நிற்க
சீறென யிப்புவியில் சிறப்புடன் பிறந்தபாலன்
பாறென யவனைத்தாமும் பாம்புமே கடிக்குமென்னே.

(இ-ள்.) இராகு சனிபகவான், சூரியபகவான், இவர்கள் மூவருங்கூடி இலக்கினத்திற்கு 7-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலனை பாம்பு கடிக்குமென மேலோர் கூறுகின்றனர், எ-று. (188)

பாம்பினுல் மரணமாவ தறிய.

என்னவே புகருேன் நாலில் யேறிடப் பாபர்கேளாய்
மன்னிய வெட்டில்மேவ மாசுபர் பாரா நிற்க
கன்னிய மாகத்தானும் களிப்புடன் பிறந்தபாலன்
பன்னியப் பாம்பினுலும் பார்க்கவே மரணமாவான்.

(இ-ள்.) சுக்கிரபகவான் இலக்கினத்திற்கு 4-ம் இராசியிலிருக்க, பாபர் 8-ம் ராசியிலிருக்க, அவரைச் சுபர்கள் பாரு திருக்கப் பிறந்த பாலன் பாம்பினுல் மரணமாகுவான், எ-று. (189)

வாகனங்களால் மரணமாவ தறிய.

வானென லக்கினத்திற்கு வரையுமெட் டாதியோடு
ஆனென நாலாமாதி யாறெட்டுப் பன்னிரண்டில்
தானென யிருக்கத்தானுந் தரணியில் பிறந்தபாலன்
நானென வாகனங்களாலே நாடிடும் மரணமென்னே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசியாதிபனும், 4-ம் இராசியாதிபனும், இலக்கினத்திற்கு, 6-ம் இராசியிலும், 8-ம் இராசியிலும், 12-ம் இராசியிலும், இருக்கப் பிறந்தபாலன் வாகனங்களால் மரணமாகுவான், எ-று. (190)

தண்ணீரில் பயமுண்டாவ தறிய.

என்னவே பாபர்தானு மிருந்திட நாலாம்வீட்டில்
கன்னிய யாறுமிராசி காண்ஜல ராசியாக
மன்னியப் புவிபிற்ரு னும் மகிழுடன் பிறந்தபாலன்
தன்னிய யவன்தனக்கு தண்ணீரூர் பயமுண்டாமே.

(இ-ள்.) பாபர்கள் இலக்கினத்திற்கு 4-ம் இராசியிலிருக்க, 6-ம் இராசி ஜலராசியாகப் பிறந்த பாலனுக்குத் தண்ணீர் பயமுண்டாம். ()

குதிரைமேல் யேறிவீழ்ந்து யிறப்பதறிய.

ஆமெனக் கதிரோன்றானு யறையும்பத் தேரிநிற்க
போமெனச் செவ்வாய்தானும் புகலும்நா லினிலேவாழ
நாமெனப் புவியின்மீது நலமுடன் பிறந்தபாலன்
கோமெனக் குதிரையேறி கீழ்விழுந் திரப்பான்காணே.

(இ-ள்.) பிதுர்க்காரகனாகியச் சூரியன் இலக்கினத்திற்குப் பத்தாம் இராசியில் இருக்க, சகோதரக்காரகனாகிய அங்காரகன் 4-ம் இராசியிலிருக்கப் பிறந்தவன் குதிரைமேலேறிக் கீழேவிழுந்து யிறப்பான்.

தண்ணீர் கல்லறையில் யிறப்பதறிய.

காணவே லக்கினாதிக் கனபலங் குன்றநாலில்
பூணவே கதிரலதுப் பாபர்கள் கூடிவாழ
வேணவே நாலாமாதி வலுவரப் பிறந்தபாலன்
தோணநீர் கல்லரையில் தோஷமாய் மறிப்பன்கூறே.

(இ-ள்.) இலக்கினாதிபதி பெலயீனமாக விருக்க 4-ம் இராசியில் சூரியன் அல்லது பாபர்கள் கூடியிருக்க, 4-ம் இராசியாதிபனும் பெலன் குறைந்திருக்கப் பிறந்தபாலன் தண்ணீர் கல்லரையில் மரணமாகுவான், எ-று. (193)

மரத்திலேறி வீழ்ந்து யிரப்பானென வறிய.

கூறவே லக்கினத்திற்கு குலவிய யெட்டாமாதி
ஆறவே சனியனார்தன் அங்கிச மதிலிருக்க
பேறவே புவியிற்றானும் மெய்ப்புடன் பிறந்தபாலன்
மீறவே மரத்திலேறி விழுந்துமே யிறப்பான்வில்ளே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசியாதிபன், சனி அங்கிசத்திலிருக்கப் பிறந்தபாலன் மரத்தின்மேலேறி விழுந்து இறப்பான் என மேலோர் கூறுகின்றனர், எ-று. (193)

புகையினால் மரணமாவதறிய.

வில்ளவே யிந்துதானும் விளங்கிடப் பத்தாம்வீட்டில்
தெள்ளிய சேலொன்பானில் தானுற முடவன்லக்கினம்
உள்ளிய கதிரோனேந்தி லுற்றிடப் பிறந்தபாலன்
மள்ளிய படிகையினாலே மரணமு மாவான்காணே.

(இ-ள்.) மாதுர்க்காரகனுகியச் சந்திரன் இலக்கினத்திற்கு 10-ம் இராசியிலிருக்க, சகோதரக்காரகனுகிய அங்காரகன் 9-ம் இராசியிலிருக்க, சனிபகவான் லக்கினத்திலும், சூரியன் 5-ம் இராசியிலும் இருக்கப் பிறந்தபாலன் புகையினுல் மரணமாவானெனக்கூறுகின்றனர்.

காணவே யெட்டாம்வீட்டில் கதிரவ னிருக்கத்தானும்
நாணவே பிறந்தபாலன் நெருப்பினு லலதுகேளாய்
பூணவே யெட்டைப்பார்க்க புகையினுல் மரணமாவான்
தோணவேகணிதமாய்ந்து யுலகினிலுறைப்பாய்முன்னே

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசியில் பிதுர்க்காரகனுகியச் சூரியனிருக்கப் பிறந்தபாலன், நெருப்பினுல் மரணமாவான், அல்லது சூரியன் 8-ம் இராசியைப்பார்க்க புகையினுல் மரணமாவான், எ-று. ()

ஜன்னி வாதசுரத்தால் மரணம் வருவதறிய.

முன்னிய லக்கினத்திற்கு மூற்றிடு மெட்டாமாதி
இன்னிய நீச்சந்தன்னில் யேறியே யிருக்கக்கேளாய்
பன்னியப் பாரிற்ருனும் பரிவுடன் பிறந்தபாலன்
ஜன்னிவா தச்சுரத்தால் சாகுவா னென்றுபேசே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசியாதிபன் நீச்சஸ்தானமேறி நிற்கப் பிறந்தபாலன் ஜன்னிவாத சுரத்தினுல் மரணமாகுவான், எ-று.

வயற்றுநோயால் மரணமறிய.

பேசவே கதிரேன்ருனும் புகலுரு மெட்டில்மேவ
நேசமாய்ப் பிறந்தபாலன் நெருப்பினு லலதுகேளாய்
தோஷமா யெட்டாம்வீட்டை துலங்கிடக் கதிரேபார்க்க
வாசமாய்ப் பிறந்தபாலன் வயறுநோ யாலிறப்பான்.

(இ-ள்.) பிதுர்க்காரகனுகியச் சூரியன் இலக்கினத்திற்கு 8-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் நெருப்பினுல் மரணமாகுவான், அல்லது 8-ம் இராசியைச் சூரியபகவான் பார்க்கப் பிறந்தபாலன் வயறுநோயால் மரணமாகுவான், எ-று. (198)

காற்றினல் மரணமறிய.

பன்னவே சந்திரன்றானும் பகருமெட் டதிலேவாழ
தன்னவே பிறந்தபாலன் தண்ணீரா லலதுகேளாய்
உன்னிய யெட்டாம்வீட்டை யுகந்துமே யிந்துபாற்க
கன்னிய பிறந்தபாலன் காற்றினல் மரணமாவான்.

(இ-ள்.) மாதுர்க்காரகனுகியச் சந்திரன் இலக்கினத்திற்கு 8-ம் இராசியில் இருக்கப் பிறந்தவன் தண்ணீறினல் மரணமாகுவன் அல்லது 8-ம் இராசியைச் சந்திரன் பார்க்கப்பிறந்தவன் காற்றில் மரணமாகுவான், எ-று. (199)

வானென சுக்கிரன்தானு வரையுமெட் டதிலேநிற்க
தானெனப் பிறந்தபாலன் தாகத்தா லலதுகேளாய்
ஏனெனப் பகரோன்றானு மெட்டதாம் வீட்டைபாற்க
கானெனப் பிறந்தபாலன் காற்றினல் மரணமென்னே.

(இ-ள்.) களத்திரக்காரகனுகியச் சுக்கிரபகவான் இலக்கினத்திற்கு 8-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் தாகத்தால் மரணமாவன், அல்லது 8-ம் இராசியைச் சுக்கிரபகவான் பார்க்கப்பிறந்தவன் காற்றினல் மரணமடைகுவான், எ-று. (200)

ஆயுதத்தாலும் அதிக சூட்டினலும் மரணமாவதறிய.

என்னவே செவ்வாய்தானு மெட்டதி லேறிநிற்க
அன்னவே பிறந்தபாலன் யாயுத மலதுகேளாய்
பன்னிய யெட்டாம்வீட்டை பார்த்திட பிறந்தபாலன்
உன்னிய யதிகசூடு முற்றநோ யதனல்சாவான்.

(இ-ள்.) சகோதரக் காரகனுகியச் செவ்வாய் இலக்கினத்திற்கு 8-ம் இராசியிலிருக்கப் பிறந்த பாலன் ஆயுதத்தால் மரணம், அல்லது 8-ம் இராசியை செவ்வாய்ப்பார்க்க அதிகச் சூட்டினல் மரணம், எ-று.

சுரம் சகலவித நோயால் மரணமறிய.

சாகவே புந்திதானுஞ் சார்ந்துமெட் டதிலேநிற்க
பாகமாய்ப் பிறந்தபாலன் பகர்சுற மலதுகேளாய்
ஏகவே புந்திதானு மெட்டெனும் வீட்டைப்பாற்க
நேகவே சகலவித நோயினல் மரணம்நேரும்.

(இ-ள்.) வித்தியாக்காரகனுகிய புதபகவான் இலக்கினத்திற்கு, 8-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் சுறத்தினுலும் அல்லது 8-ம் இராசியை புதபகவான் பார்க்க சகலவிதமான நோய்களினுல் மரண மடைகுவான், எ-று. (202)

கிராணி சகலவிதநோயால் மரணமறிய.

நேறவே வியாழந்தானும் நெரிங்கியெட் டேறிநிற்க
கூறவே பிறந்தபாலன் கிராணியா லலதுகேளாய்
பேறவே யெட்டைத்தானும் பொன்னவன் பாற்பனுகில்
சேறவே சகலவித சிந்தைநோ யதனுல்சாவான்.

(இ-ள்.) புத்திரக்காரகனுகியக் குருபகவான் இலக்கினத்திற்கு, 8-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன், கிராணியால், அல்லது 8-ம் இராசியை குருபகவான் பார்க்க சகலவித நோயால் மரணம். (203)

பசி யல்லது காற்றினுல் மரணமறிய.

வானென முடவன்றானும் வாகுளயெட்டில்மேவ
பானெனப் பிறந்தபாலன் பசியினு லலதுகேளாய்
ஊனென யெட்டைத்தானு முற்றுமே சனியேபாற்க
கானென காற்றினுலும் கலங்கியே மரணமாவான்.

(இ-ள்.) ஆயுட்காரகனுகியச் சனிபகவான் இலக்கினத்திற்கு 8-ம் இராசியிலிருக்கப் பிறந்தவன் பசியினுலும் அல்லது 8-ம் இராசியை சனிபகவான் பார்க்க காற்றினுலும் மரணமாகுவான், எ-று. (204)

எந்திரத்திலே மரணமாவ தறிய.

மாகவே செவ்வாயேழில் மரிவிடச் சொல்லக்கேளாய்
பாகமாய் முடவனிந்து பானுவும் லக்கினமேவில்
தாகமாய்த் தரணிதன்னில் தானுமே பிறந்தபாலன்
ஏகவே யெந்திரத்தாலே யெமன்பதி சேர்வனென்னே.

(இ-ள்.) சகோதரக் காரகனுகிபச் செவ்வாய் இலக்கினத்திற்கு 7-ம் இராசியிலிருக்க, ஆயுட்காரகனுகிய சனிபகவான், மாதுர்க்காரக னுகிய சந்திரபகவான் பிதுர்க்காரகனுகியச் சூரியபகவான் இவர்கள் இலக்கினத்திலிருக்க பிறந்தபாலன் எந்திரத்தாலேமரணமடைகுவான்,

பட்சிகளுக்கு யிறையாவானென வறிய.

என்னவே கதிரோனேழி லிருந்திட முடவறெட்டில்
மன்னவே தேய்வுயிந்து மறிவிட நாலாம்வீட்டில்
கன்னிய மாகத்தானுங் காணவே பிறந்தபாலன்
பன்னிய பட்சிகட்குப் பதைத்திட யிறையாவானே.

(இ-ள்.) சூரிய பகவான் இலக்கினத்திற்கு 7-ம் இராசியிலிருக்க சனிபகவான் 8-ம் இராசியிலிருக்க,தேய்பிறைச்சந்திரன் 4-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் பட்சிகளுக்கு மரணமாகுவான் யென வறியவும், எ-று. (206)

இடி அல்லது வீடு விழுந்து சாவானென வறிய.

வானெனக் கதிரோன்றானும் வாழ்ந்திட வெட்டாம்வீட் [டுச்
சேனெனசெவ்வாயைந்தில்சனியனுயெட்டில்மேவ
ஊனென யிந்துவொன்பா னுற்றிடப் பிறந்தபாலன்
மானென யிடியினாலு மலதுவீ டிடிந்துசாவான்.

(இ-ள்.) சூரியபகவான் இலக்கினத்திலிருக்க அங்காரகபகவான் இலக்கினத்திற்கு, 5-ம் இராசியிலிருக்க, சனிபகவான் 8-ம் இராசியிலிருக்க, சந்திரபகவான் 9-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன், இடி அல்லது வீடு விழுந்து சாகுவான், எ-று. (207)

புலியால் கொல்லப்படுவானென வறிய.

வானென புந்திதானு வாழ்ந்திட யலதுமீனம்
மானென பொன்னோன்றானு மேடந்தே ளதனில்வாழ
கானெனப் புலியிற்றானுங் களிப்புடன் பிறந்தபாலன்
கோனெனப் புலியினாலே கொல்லவே படுவான்பாரே.

(இ-ள்.) புதபகவான் தனுசு விராசி அல்லது மீனவிராசியிலிருக்க குருபகவான், மேஷவிராசியிலும், விருச்சிகவிராசியிலும் இருக்க பிறந்தபாலன் புலியால் கொல்லப்படுவான், எ-று. (208)

சுறமேன வறிய.

வரையவே யிந்திரனோடு வாற்குறி புடமுங்காட்டி
மரையவே யதனிற்கேளாய் மதியவ னிருக்கத்தானும்
நிரையவே புவியின்மீது நேர்மையாய்ப் பிறந்தபாலன்
அரையவேசுறத்தினாலே யவஸ்தையும்படுவானென்னே.

(இ-ள்.) சந்திரபகவானுடையப் புடத்துடன் குளிகன் புடங்கூட்டி அதில் சந்திரனிருக்க பிறந்தபாலன் சுரபாதை படுவான் எ-று.

நாலுகால் ஜீவனால் பயமேன வறிய.

பாறெண லக்கினத்தில் பரிவுடன் பகரக்கேளாய்
மூறெனப் பொன்னினோடு மூன்றதிக் கூடி நிற்க
தேறெனப் புவியிற்றானுந் திகழுடன் பிறந்தபாலன்
நேறென நாற்கால்ஜீவன் நாலுமே பயமுண்டென்னே.

(இ-ள்.) இலக்கினத்தில் வியாழனும், இலக்கினத்திற்கு 3-ம் இராசியாதிபனுங் கூடியிருக்கப் பிறந்த பாலனுக்கு நாலுகால் ஜீவனால் பயமுண்டாமென மேலோர் கூறுகின்றனர் எ-று. (210)

தூரதேசத்தில் மரணமேன வறிய.

உண்டென லக்கினத்திற்கு வோதிடும் பனிரண்டிற்றான்
பண்டென வியாழந்தானும் பண்புட னதிலே நிற்க
வண்டெனப் புவியிற்றானும் வாகுடன் பிறந்தபாலன்
துண்டெனத் தூரதேசந் தன்னிலே மரணமாவான்.

(இ-ள்.) புத்திரக்காரகனாகிய வியாழன் இலக்கினத்திற்கு 12-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் தூரதேசத்தில் மரணமாகுவான். ()

தகப்பன்வீட்டில் மரணமாவதறிய.

மாவென யெட்டாமாதி மருவிய நாலாமாதி
ஏவென யவர்கள்கூடி யிருந்திட ரெண்டாம் வீட்டில்
பாவென பாறிற்றானும் பரிவுடன் பிறந்தபாலன்
கூவென தகப்பன்வீட்டில் கூவியே மரணமாவான்.

(இ-ள்.) இலக்கிணத்திற்கு 8-ம் இராசியாதிபனும் 4-ம் இராசியாதிபனுங்கூடி 2-ம் இராசியிலிருக்கபிறந்த பாலன் தகப்பன் வீட்டிலேயே மரணமாகுவான் எ-று. (212)

ஈலியேன வறிய.

என்னவே கதிரோனோடு யெழில்குளி புடமுங்கூட்டி
மன்னவே கதிரோன்றானு மரிவியே யதிலிருக்க

உன்னவே யுலகிற்றானும் உருவெனப் பிறந்தபாலன்
நன்னவே நலியதாக நாட்டினி லிருப்பான்காணே.

(இ-ள்.) சூரியனுடைய புடத்துடன் குளிகன் புடத்தைக்கூட்டி அதில் சூரியனிருக்கப் பிறந்தபாலன் நலியாக விருப்பான், எ-று. ()

மரணமாவ தறிய.

காணவே லக்கினத்தில் காரியுங் குளிகன்கூடி
நாணவே யதிலிருக்க யலதுயீ ரறெட்டேற
தோணவே புவியிற்றானும் துலங்கிடப் பிறந்தபாலன்
பூணவே மரணமாவான் புகழுடன் கணிதஞ்சாற்றே.

(இ-ள்.) இலக்கினத்தில் சனியுங் குளிகனுங் கூடியிருக்க, அல்லது இலக்கினத்திற்கு, 12-ம் இராசியிலும், 6-ம் இராசியிலும், 8-ம் இராசியிலும் சனியிருக்கப் பிறந்தவுடனே மரணம், எ-று. (214)

கல்லினால் அல்லது இடியினால் மரணமாவதறிய.

சாற்றவே லக்கினத்திற்குச் சார்ந்ததோ றெட்டாமாதி
போற்றவே லக்கினாதிப் புகழுடன் கூடிநின்று
தோற்றவே புவியிற்றானுந் துலங்கிடப் பிறந்தபாலன்
ஆற்றவே கல்லினாலு மலதிடி யாலுஞ்சாவான்.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசியாதிபனும் லக்கினாதிபதியுங்கூடியிருக்கப் பிறந்தபாலன் கல்லினால், அல்லது இடியினால் மரணமடைகுவான், எ-று. (215)

குன்மவியாதியால் மரணமாவதறிய.

சாகவே யெட்டாமாதி சார்ந்துநீச் சத்திலேனும்
பாகமாய் பன்னிரண்டு பகருமா றெட்டில்மேவ
தோகமாய்ப் புவியின்மீது தோற்றியப் பாலன்றானும்
ஏகவே குன்மவியாதி யாலுமே மரணமாவான்.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசியாதிபன் நீச்சவிராசியினும், அல்லது 12-ம் இராசியினும், 6-ம் அல்லது இராசியினும், 8-ம்

இராசியிலும், இருக்கப்பிறந்தபாலன் குன்மவியாதியினால் மரணமடைகுவான், எ-று. (216)

கத்தியால் கொல்லப்படுவோனென வறிய.

வரையவே யிந்திரனோடு வாகுள முடவன்றானும்
அரையவே விடையலது ஆனதோர் துலையில்நிற்க
பிரியமாய்ப் புவியிற்றானும் பெட்புடன் பிறந்தபாலன்
வுறையவே கத்தியாலுங் கொல்லவே படுவானென்னே.

(இ-ள்.) சந்திரனும், சனியும், இரிஷபவிராசியில் அல்லது துலாவிராசியிலிருக்கப் பிறந்தபாலன் கத்தியால் கொல்லப்படுவான், எ-று.

வெண்குஷ்ட மறிய.

என்னவே புகருங்காரி யிரண்டுபன் னிரண்டில்நிற்க
மன்னிய மதியும்லக்கின மருவிட கதிரேழேற
உன்னிய யுலகிற்றானு முதையமாய்ப் பிறந்தபாலன்[யே.
வின்னவெண்குஷ்டரோகம் வாய்க்குமென் றுறைசெய்வா

(இ-ள்.) சுக்கிரனும், சனியும் இலக்கினத்திற்கு, 2-ம் இராசியிலும், 12-ம் இராசியிலுமிருக்க சந்திரன் இலக்கினத்திலிருக்க சூரியன் 7-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் வெண்குஷ்டரோக முடையவனாகுவான், எ-று. (218)

குஷ்டரோக மறிய.

வேறு விருத்தம்.

காணவே லக்கினத்திற் கைந்தாம்வீடும்
கருதிய வொன்பதாம் வீடுகேளாய்
வேணவே மிதுனம் விருச்சிகத்தி னோடு
மகரரிஷப மாகவே தானிருக்க
பூணவே பாபருமே யதனைப்பார்க்க
புகலக்கே ளல்லதுவே கூடிவாழ
தோணவே யிப்புவியில் பிறந்தபாலன்
தோஷமாங் குஷ்டரோக முள்ளோனவன்.

(இ—ள்.) இலக்கினத்திற்கு 5-ம் இராசியும், 9-ம் இராசியும், மிதுனம், விருட்சிகம், மகரம், ரிஷபம் இவைகளாகில் அவர்களைப் பாபர்கள் பார்க்க, அல்லது கூடியிருக்கப் பிறந்தபாலன், குஷ்டரோகமுடையவ னகுவான், எ-று. (219)

மண்டைநோ யுள்ளவனென வறிய.

**வேறு விருத்தம்.**

நாவெனச் சனியிேனாடு நண்ணிய முடவன்றானும்
தாவெனப் பன்னிரண்டிற் றங்களு மேறிநிற்க
பாவெனப் புவியின்மீதுப் பண்புடன் பிறந்தபாலன்
மாவென மண்டைநோயால் மாதுய ரடைவனென்னே.

(இ-ள்.) மாதுர்க்காரகனுகியச் சந்திரனும், ஆயுட்காரகனுகியச் சனியும், இலக்கினத்திற்கு, 12-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் மண்டைநோயினல் பாதைப் படுவான், எ-று. (220)

என்னவே முடவன்றானு மிருந்திட லக்கினத்தில் [வ
அன்னிய செவ்வாய்தானு மைந்தொன்பான் யேழில்மே
பன்னியே புவியிற்றானும் பரிவுடன் பிறந்தபாலன்
மன்னிய மண்டைநோயால் மாதுயர் படுவன்பாரே.

(இ—ள்) ஆயுட்காரகனுகிய சனியும் லக்கினத்திலிருக்க, சகோதரக்காரகனுகிய அங்காரகன் இலக்கினத்திற்கு, 5-ம் இராசியிலும், 9-ம் இராசியிலுமிருக்கப் பிறந்தபாலன், மண்டைநோயால் பாதை படுகுவன், எ-று. (221)

பாறென செவ்வாய்நின்ற பகருமோர் ராசிக்கேதான்
ஏறென யேழில்தானு மிறைவனும் லக்கினதி
தேறென யதிலிருக்கத் திகழுடன் பிறந்தபாலன்
பேறென மண்டைநோயால் படுகுவன் பாதையென்னே.

(இ—ள்) சகோதரக்காரகனுகிய அங்காரகன் நின்ற இராசிக்கு 7-ம் இராசியில் வியாழனும், இலக்கினதிபதியுமாக விருக்கப் பிறந்தபாலன் மண்டைநோயினல் பாதைப்படுகுவான், எ-று. (222)

கால் கரம் பின்னம் நோயினுல் மடிவானென வறிய.

என்னவே யெட்டாமதி யலதுகேள் லக்கினுதி
குன்னவே குளிகனோடுக் கூடியே வாழ்கத்தானும்
கன்னலே பிறந்தபாலன் கால்கரம் பின்னமோடு
மன்னலே நோயினுலும் மடிவனென் றுறைசெய்வாயே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 8-ம் இராசி யாதிபன் அல்லது இலக்கினுதிபதி இவர்கள் குளிகனோடு கூடியிருக்கப் பிறந்தபாலன் கால், கரம், பின்னமாகியும் நோயினுல் மரணமடைகுவான், எ-று. (223)

கலகத்தில் யிறப்பானென வறிய.

வாயென முடவன்சேயும் வாகுள யெட்டில்மேவ
காயென லக்கினத்தில் கதிர்னிற்க யிந்தெட்டாக
நேயெனப் புவியிற்றுனும் நிலமையாய் பிறந்தபாலன்
தோயெனக் கலகத்தாலும் தொல்லையா யிறப்பான்சொல்
[லே.

(இ-ள்.) ஆயுட்காரகனுகியச் சனியும், சகோதரக் காரகனுகிய அங்காரகனும் இலக்கினத்திற்கு, 8-ம் இராசியிலிருக்க, இலக்கினத்தில், சூரியனிருக்க, மாதுர்க்காரகனுகிய சந்திரன், 8-ம் இராசியிலிருக்கப் பிறந்தபால்ன் கலகத்தினுல் மரணமடைகுவான், எ-று. (224)

பாஷாணத்தாற் பயமெனவறிய.

சொல்லவே மூன்றினோடு சுகமிலா நீச்சமாறில்
புல்லவே பாபர்தாமும் பொருந்தியே யதிலிருக்க
வல்லவே புவியிற்றுனும் வாகுடன் பிறந்தபாலன்
தொல்லவே பாஷாணத்தால் தொடுபயம்நேருஞ்சாற்றே

(இ-ள்.) இலக்கினத்திற்கு 3-ம் இராசியிலும், நீச்சஸ்தானத்திலும், 6-ம் இராசியிலும், பாபர்களிருக்கப்பிறந்த பாலனுக்குப் பாஷாணத்தால் பயம் உண்டு, எ-று. (225)

தண்ணீரில் முழுகிவிடுவோனென வறிய.

சாற்றவே நாலாமாதிச் சார்ந்துலக் கினத்தில்மேவ
ஏற்றவே யலது நாலோன் யெழிலுடன் பாற்கக்கூட
போற்றவே பிறந்தபாலன் புகலவே தண்ணீர்தன்னில்
தோற்றவே யுள்ளேதானும் தான்முழி கிடுவனென்னே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு நாலாமிடத்ததிபன் இலக்கினத்திலிருக்க, அல்லது நாலாமிடத்ததிபன் பார்க்க, அல்லது கூடியிருக்கப் பிறந்தபாலன், தண்ணீறினில் முழுகிவிடுவானெனச் சொல்வாய், எ-று.

கல்லினால் மரணமாவ தறிய.

என்னவே கதிரேன்சேயு மிருந்திட நாலிற்றானும்
பன்னவே நாலாமாதி யலதுப்பத் தாதிப்பார்க்க
புன்னவே யலதுகூடப் புவிதனிற் பிறந்தபாலன்
கன்னவே கல்லினாலும் காணவே மரணமாவான்.

(இ-ள்.) சூரியனும், அங்காரகனும், இலக்கினத்திற்கு 4-ம் ராசியிலிருக்க, 4-ம் ராசியாதிபன் அல்லது 10-ம் ராசியாதிபன் அவரைப் பார்க்க அல்லதுகூடப் பிறந்தபாலன் கல்லினால்மரணமாகுவான், எ-று.

வானென நாலாம்வீட்டில் வளர்சனி ராகுகூட
சூனென செவ்வாய்ப்பாற்கச் சுபர்கள்பா ரூதிருக்க
தானெனப் புவியிற்றானுந் தழைத்திடப் பிறந்தபாலன்
மானெனக் கல்லினாலும் மரணமு மாவான்பாரே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு 4-ம் ராசியில், சனியும், இராகுவும், கூடியிருக்க, அவரை அங்காரகன் பார்க்க, சுபர்கள் பாராதிருக்கப் பிறந்தபாலன், கல்லினால் மரணமாகுவான், எ-று. (228)

பலயீன்முள்ள குடலுள்ளவனென வறிய.

பார்க்கவே முடவன்றானும் பண்புள வேறில்மேவ
ஏர்க்கவே வியாழந்தாலு மிருந்திட லக்கினத்தில்

தீர்க்கவே யுலகிற்றானுந் திகழுடன் பிறந்தபாலன்
கூர்க்கவே பலயீனமுள்ள குடலுளா னென்றுவிள்ளே.

(இ-ள்.) சனியும், இலக்கினத்திற்கு 7-ம் இராசியிலிருக்க, வியாழன் இலக்கினத்திலிருக்க பிறந்தபாலன் பலயீனமுள்ளக் குடலனாகும்.

ஆயுத விரணமேன வறிய.

விள்ளவே நாலாம்வீட்டில் விளங்கிடக்கதிரோன்றானும்
கொள்ளவே செவ்வாய்பத்தில் குலவிடத் தேய்வுயிந்து
தெள்ளவே யவரைப்பாற்க திகழுடன் பிறந்தபாலன்
தள்ளவே யாயுதத்தால் தானுமே மரணமாவான்

(இ-ள்.) சூரியன், இலக்கினத்திற்கு 4-ம் இராசியிலிருக்க, அங்காரகபகவான் 10-ம் இராசியிலிருக்க, தேய்பிறைச் சந்திரன், அவரைப் பார்க்கப் பிறந்தபாலன் ஆயுத மரணமாகுவான், எ-று. (230)

மாகவே முடவன்வெய்யோன் மறையுந்தேய்பிறையாமிந்
ஏகவே லக்கினத்திற்கு யெட்டினி லிருக்கக்கேளாய்[தும்
தாகமாய்ப் புவியிற்றானும் தானுமே பிறந்தபாலன்
பாகமா யாயுதத்தால் பதரிட மரணமாவான்.

(இ-ள்.) சனியும், சூரியனும்,தேய்பிறைச் சந்திரனும், இலக்கினத்திற்கு, 8-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் ஆயுதத்தால் மரணமடைகுவான், எ-று. (231)

அஜீரணம் கஷ்டசுவாசமேன வறிய.

ஆறெனச் செவ்வாய்ச்சுன்னு மமர்ந்திடயவர்க்குபத்தில்
சேறென யிந்திருக்க செங்கதிர் மகத்தில்மேவ
தேறெனப் புவியிற்றானுந் திகழுடன் பிறந்தபாலன்
காறென யஜீர்னமோடு கஷ்டசு வாசமென்னே.

(இ-ள்.) அங்காரகனும், சனியும், நின்ற இராசிக்கு மத்தியில், சந்திரனிருக்க, மகரவிராசியில் சூரியனிருக்கப் பிறந்தபாலன், அஜீரணத்தாலும், கஷ்ட சுவாசத்தாலும் பாதை படுகுவானென மேலோர் உலகோருக்கு உபகாரமாகக் கூறுகின்றனர், எ-று. (232)

மகோதரவியாதி யறிய.

என்னவே முடவனோடு மெழில்கதி ரோனேதானும்
பன்னவே லக்கினத்திற்கு பகருமெட் டாமிடத்திற்
கன்னிய மாகவாழக் களிப்புடன் பிறந்தபாலன்
குன்னிய மெய்யிற்றானு மகோதர வியாதியோனும்.

(இ-ள்.) சனியும், சூரியனும், இலக்கினத்திற்கு, 8-ம் ராசியிலிருக்கப் பிறந்தபாலன் மகோதரவியாதி யுடையோனாகும், எ-று. ()

ஈட்டியால் கொல்லப்படுவானென வறிய.

நாமெனக் கதிரலது நன்னுஞ்சேய் நாலில்மேவ
தாமென முடவன்றானும் தானுறப் பத்தாம்வீட்டில்
போமெனப் புவியிற்றானும் புகழுடன் பிறந்தபாலன்
ஏமென யீட்டியாலும் யவன்கொல்லப் படுவானென்னே.

(இ-ள்.) சூரியன், அல்லது அங்காரகன் இலக்கினத்திற்கு 4-ம் இராசியிலிருக்க, சனி, 10-ம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் ஈட்டியால் கொல்லப்படுவான், எ-று. (234)

சுரோணித மறிவானென வறிய.

என்றெனமுடவன்வெய்யோ னெழிலுடன் நலத்திற்கூட
சென்றென யவரைத்தாமுஞ் செவ்வாயு முற்றுப்பார்க்க
நன்றெனப் புவியின்மீது நலமுடன் பிறந்தபாலன்
குன்றெனச்சுரோணிதங்கள் குறிப்புடனறிவான்காணே.

(இ-ள்.) சனியும், சூரியனும், இவர்கள் இலக்கினத்திற்கு 9-ம் ராசியிலிருக்க அவரைச் செவ்வாய்பார்க்க பிறந்தபாலன் சுரோணித மறிகுவான், எ-று. (235)

அம்பினல் சாகுவானென வறிய.

காணவே செவ்வாயொன்பான் கருதியேயிருக்கக்கேளாய்
மூணவே கதிரோன்ராகு முடவனு றிவர்கள்தாமும்
தோணவே பந்தமாக தோன்றியப் பாலகன்றான்
நாணவே யம்பினாலே நமன்பதிக் கேகுவானே.

(இ-ள்.) அங்காரகன், இலக்கினத்திற்கு 9-ம் ராசியிலிருக்க அவருடன் சூரியனும், ராகுவும், சனியும், சம்பந்தப்பட்டிருக்கப் பிறந்த பாலன், அம்பினால் அடிப்பட்டு சாகுவான், எ-று. (236)

பேய்பிடிக்குமென வறிய.

வானென யிராகுதானும் வாகுள லக்கினமேவ
தேனென முடவன்சேயும் திரிகோண மதிலேநிற்க
நானெனப் புவியிற்றானும் நலமுடன் பிறந்தபாலன்
ஊனெனப் பேய்பிடித்து வுலகினி லுழலுவானே.

(இ-ள்.) ராகு, லக்கினத்திலிருக்க, சனியும், அங்காரகனும் திரிகோண ராசியிலிருக்கப் பிறந்தபாலன் பேய்பிடித் துழல்வன், எ-று.

தன்னையே தான் கொலைசெய்துக்கொள்பவ னெனவறிய.

வாங்கவே முடவனிந்து வாகுள செவ்வாய்மூவர்
பாங்குடன் கூடிதானும் பகருமோர் வீட்டில்நிற்க
ஓங்கிட யுலகிற்றானும் யுற்றிடப் பிறந்தபாலன்
தாங்கவே தன்னைதானே தான்கொலை செய்துகொள்வான்

(இ-ள்.) சனியும், சந்திரனும், அங்காரகனும் இவர்கள் மூவருங் கூடி ஒரு மனையிலிருக்கப் பிறந்தவன் தன்னையே தான் கொலைசெய் துக்கொள்வான், எ-று. (238)

கிணற்றில் வீழ்ந்திறப்பனேன வறிய.

கொள்ளவே முடவன்நாலில் குலவிட யிந்துயேழில்
விள்ளவே செவ்வாய்தானும் விளங்கிடப் பத்தில்மேவ
தள்ளவே புவியிற்றானுந் தானென பிறந்தபாலன் [னே.
துள்ளவே கிணற்றில்வீழ்ந்து கிட்டுயிற் பிறிப்பனென்

(இ-ள்.) சனி-லக்கினத்திற்கு 4-ம் ராசியிலும், சந்திரன் 7-ம் ராசியிலிருக்க அங்காரகன், 10-ம் ராசியிலிருக்கப் பிறந்தபாலன் கிணற்றில் வீழ்ந்திறப்பான், எ-று. (239)

மெய் புழுத்து மடிவானென வறிய.

என்னவே கதிரோன்சுன்னு மெழிலுள சேயுங்கூடி
இன்னவே யெட்டில்மேவ யிலக்கின மதனிற்கேளாய்
பன்னவே புந்திராகு சசியுறப் பிறந்தபாலன்
மன்னவே மெய்புழுத்து மடிகுவ னென்றுசாற்றே.

(இ-ள்.) சனியும், சூரியனும், அங்காரகனும் இவர்கள்கூடி இலக்கினத்திற்கு 8-ம் ராசியிலிருக்க லக்கினத்தில் புதன், ராகு, சந்திரன், இவர்களிருக்கப் பிறந்தபாலன் மெய்ப்புழுத்து மடிவான், எ-று. (240)

திரேகத்தில் புழுபுழுத்து சாவானெனவறிய,

சாற்றவே சனியன்றனும் சார்ந்துமே யிரண்டில்மேவ
தோற்றவே யிந்துநாலில் துலங்கிடச் செவ்வாய்பத்தில்
தேற்றவே பிறந்தபாலன் தேகத்திற் புழுபுழுத்து
தூற்றவே தொல்லைபட்டு துஞ்சியே சாவான்சொல்லே.

(இ-ள்.) சனி, லக்கினத்திற்கு 2-ம் ராசியிலிருக்க, சந்திரன் 4-ம் ராசியிலிருக்கப் பிறந்த பாலகன் திரேகத்தில் புழு புழுத்து தொல்லைப் பட்டு துஞ்சிச்சாகுவான், எ-று. (241)

கிணற்றில் விழ்வானென வறிய.

சொல்லவே சனியுமிந்தும் சேர்ந்திரு றெட்டில்மேவ
வல்லதோர் சனியுமிந்தும் வாழுமெட் டாதிகூட
புல்லவே யலதுபார்க்க புவிதனிற் பிறந்தபாலன்
தொல்லையாங் கிணறுதன்னில் தானுமே விழுகுவானே.

(இ-ள்.) சனியும்—சந்திரனும், லக்கினத்திற்கு 12—ம் ராசியிலும், 8-ம் ராசியிலுங்கூட அல்லது இவர்களை 8-ம் ராசிக் கதிபதிகூட அல்லது அவர்களைப்பார்க்க கிணற்றில்விழ்வான்.

வெற்பிலேறி விழுந்திறப்பதறிய.

**வேறு விருத்தம்.**

வாமெனன லக்கினத்திற் கெட்டாமாதி
வெந்தகனுஞ் சேர்கூட வலதுகேளாய்
ஆமெனனச் சேய்கதிரேன் யெட்டில்வாழ
யல்லதுயெட் டாமிடத்தை யவறேபார்க்க

வேறென காசினியில் பிறந்தபாலன்
வெற்பிலே யேறியே விழுந்தேதானும்
ஏறென யவனுமே யிறப்பானென்றே
யெழிலாகக் கணிதமதை யியம்புவாயே.

(இ-ள்.) லக்கினத்திற்கு 8-ம் ராசியாதிபனும், சனியும், அங்காரகனும் ஒன்றாகக்கூட அல்லது அங்காரகன், சூரியன் 8-ம் ராசியிலிருக்க, அல்லது 8-ம் ராசியைப் பார்க்கப் பிறந்தபாலன் வெற்பிலேறி விழுந் திறப்பானென்றுச் சொல்லவும், எ-று. (242)

விலங்கு பூணுவானென வறிய.

வேறு விருத்தம்.

புகலவே செவ்வாய்வெய்யோன் புகலுமேகூடிக் கேளாய்
இகலவே யோர்மனையில் லெழிலுடன் கூடிவாழ
தகலவே புவியிற்றானுந் தானுமே பிறந்தபாலன்
விகலவே வேதையோடு விலங்கது பூண்பான்காணே.

(இ-ள்.) அங்காரகனும், சூரியனும், சுக்கிரனும் ஒருராசில் கூடிவாழப் பிறந்தபாலன் விலங்கு பூணுவான், எ-று. (243)

வேறு-விருத்தம்.

காணவே பாபருமே யொன்பான்மேவ
கருதியே திரேகாணப் பதியொன்றானு
மூணவே யெட்டிலுற மொழியக்கேளாய்
முனிவாக முன்மூன்று வீடுதன்னை
தோணவே சுபர்களுமே நோக்கிடாமல்
துலங்கவே யிருந்திடவே பிறந்தபாலன்
வீணென விலங்குடனே யிருந்துதானும்
வேதனையாய் தன்கையால் மரணமாவான்.

(இ-ள்.) பாபர்கள் லக்கினத்திற்கு 9-ம் ராசியிலிருக்க, திரேகாணாதிபதி 8-ம் ராசியிலிருக்க, முன் மூன்றுவீட்டையும், சுபக்கிரகங்கள் பார்க்கா திருக்கப் பிறந்தபாலன் விலங்குடனிருந்து தன்கையினாலேயே உயிர் விடுவான், எ-று. (244)

எல்லாக் கெடுதியும் நிவர்த்தியென வறிய.

மாகவே சுரர்குருவாம் மன்னனவன் வியாழந்தானும்
ஏகவே லக்கினத்தில் யெழிலுட னிருந்துவாழ
பாகமாய்ப் புவியிற்றானும் பரிவுடன் பிறந்தானுக்கு
நீகவே கெடிதியாவும் நிவர்த்தியா மென்றுசொல்லே.

(இ-ள்) தேவர்களின் குருவாகிய வியாழன் லக்கினத்தி லிருக்கப்பிறந்த பாலகனுக்கு எல்லாக்கெடிதியும் நிவர்த்தியாகும், எ-று. ()

பயமில்லையென வறிய.

சொல்லவே சந்திரனின்ற யிராசிக்கு யிரண்டுபக்கம்
வல்லவே வலுமையதாய் வாகுள்ள கிரகம்நிற்க
புல்லவே புவியிற்றானும் புகழுடன் பிறந்தபாலன்
தொல்லையாம் பயமில்லாமல் தானுமேவாழ்வனென்னே.

(இ-ள்.) சந்திரனின்ற விராசிக்கு இரண்டுபக்கத்திலும், வலுவாகிய கிரகங்களிருக்கப் பிறந்தபாலன் பயமில்லாமல் வாழ்குவன், எ-று.

என்னவே யிந்துதானு மிலக்கின மதனைப்பார்க்க
பன்னவேபொன்னோன்றானும்பகருங்கேந்திரத்தில்வாழ
உன்னவே புலகிற்றானு முற்றிடப் பிறந்தபாலன் [யே.
வின்னமாம் பயமில்லாமல் வாழ்வனென் றுறைசெய்வா

(இ-ள்.) சந்திரன் லக்கினத்தைப்பார்க்க குருவு கேந்திரத்திலிருக்கப் பிறந்தபாலன் பயமில்லாமல் வாழ்குவான், எ-று. (247)

செப்பவே வியாழந்தானும் சிறந்ததோர் லக்கினத்திற்கு
எய்பவே யைந்தில்மேவ யெல்லவ ரையுமேபாற்க
துய்யவே புவியிற்றானும் துலங்கிடப் பிறந்தானுக்கு
ஐயமே யில்லாமற்றான் அவனியிற் பிழைப்பான்மாதே.

(இ-ள்.) வியாழன் லக்கினத்திற்கு 5-ம் ராசியிலிருக்க, எல்லாக் கோட்களையும் பார்க்கப்பிறந்தவன் பயமின்றிவாழ்வான், எ-று. (248)

மாதென யிந்துநின்ற யிராசிக்கு யிருபுறத்தும்
தோதென வலுவதாகத் துலங்கிட யிருக்கக்கேளாய்
ஏதெனப் புவியிற்றனு மெழிலுடன் பிறந்தபாலன்
போதெனப் பயமில்லாமல் புவிதனில் வாழ்குவானே.

(இ-ள்.) சந்திரன் நின்ற ராசிக்கு இரண்டுபக்கமும் கிரகங்கள் வலுவாகயிருக்கப் பிறந்தபாலன் பயமில்லாமல் வாழ்குவான், எ-று. ()

## அ்ஷ்டவர்கு

| | சூரியன் 48. | | சந்திரன் 49. | |
|---|---|---|---|---|
| லக்கினம் | 3-4-6-10-11-12 | (6) | 3-6-10-11 | (4) |
| சூரியன் | 1-2-4-7-8-9-10-11 | (8) | 3-6-7-8-10-11 | (6) |
| சந்திரன் | 3-6-10-11 | (4) | 1-3-6-7-10-11 | (6) |
| செவ்வா | 1-2-4-7-8-9-10-11 | (8) | 2-3-5-6-9-10-11 | (7) |
| புதன் | 3-5-6-9-10-11-12 | (7) | 1-3-4-5-7-8-10-11 | (8) |
| குரு | 5-6-9-11 | (4) | 1-4-7-8-10-11-12 | (7) |
| சுக்கிரன் | 6-7-12 | (3) | 3-4-5-7-9-10-11 | (7) |
| சனி | 1-2-4-7-8-9-10-11 | (8) | 3-5-6-11 | (4) |

| | செவ்வாய் 39. | | புதன் 54. | |
|---|---|---|---|---|
| லக்கினம் | 1-3-6-10-11 | (5) | 1-2-4-6-8-10-11 | (7) |
| சூரியன் | 3-5-6-10-11 | (5) | 5-6-9-11-12 | (5) |
| சந்திரன் | 3-6-11- | (3) | 2-4-6-8-10-11 | (6) |
| செவ்வாய் | 1-2-4-7-8-10-11 | (7) | 1-2-4-7-8-9-10-11 | (8) |
| புதன் | 3-5-6-11 | (4) | 1-3-5-6-9-10-11-12 | (8) |
| குரு | 6–10–11–12 | (4) | 6–8–11–12 | (4) |
| சுக்கிரன் | 6–8–11–12 | (4) | 1–2–3–4–5–8–9-11 | (8) |
| சனி | 1-4-7-8-9-10-11 | (7) | 1-2-4-7-8-9-10-11 | (8) |

| குரு 56 | | சுக்கிரன் 52 | |
|---|---|---|---|
| லக்கினம் 1-2-4-5-6-7-9-10-11 | (9) | 1-2-3-4-5-8-9-11 | (8) |
| சூரியன் 1-2-3-4-7-8-9-10-11 | (9) | 8-11-12 | (3) |
| சந்திரன் 2-5-7-9-11 | (5) | 1-2-3-4-5-8-9-11-12 | (9) |
| செவ்வாய் 1-2-4-7-8-10-11 | (7) | 3-5-6-9-11-12 | (6) |
| புதன் 1-2-4-5-6-9-10-11 | (8) | 3-5-6-9-11 | (5) |
| குரு 1-2-3-4-7-8-10-11 | (8) | 5-8-9-10-11 | (5) |
| சுக்கிரன் 2-5-6-9-10-11 | (6) | 1-2-3-4-5-8-9-10-11 | (9) |
| சனி 3-5-6-12 | (4) | 3-4-5-8-9-10-11 | (7) |

சனி 39

| | |
|---|---|
| லக்கினம் 1-3-4-6-10-11 | (6) |
| சூரியன் 1-2-4-7-8-10-11 | (7) |
| சந்திரன் 3-6-11 | (3) |
| செவ்வாய் 3-5-6-10-11-12 | (6) |
| புதன் 6-8-9-10-11-12 | (6) |
| குரு 5-6-11-12 | (4) |
| சுக்கிரன் 6-11-12 | (3) |
| சனி 3-5-6-11 | (4) |

மேற்சொன்ன அந்தந்த காரகாளின் பாலே, ஒவ்வொரு காரகாளின் பிரகாரம் லக்கினம் முதலாகவும், நவக்கிரகாள் இராகு கேது தவிர மற்றவர்களுக்கு அவரவர்கள் ஸ்தான முதலாகக்கொண்டு ஒவ்வொன்றையும், போட்டு அந்தந்த ராசியில் கடைசியிலென்ன இருக்கிறதோ அதுகளை எல்லாம் ஒன்றாகச்சேர்த்து எண்களை ஒருசக்கரத்தில் போட அது ஆதியந்தமாம், இதை மறுபடியும் திரிகோண ராசியில் சமமாகயிருக்க எடுத்துப்போடவும், வித்தியாசகமாயிருக்கில் குறைந்த எண்களுக்கு சரிவர செய்யவும், ஒரு ராசியில் எண்ணிருந்து மற்ற ராசியில் எண்ணில்லாமற்போனால் அப்படியே வைத்துக்கொள்கவும், இதை ஒரு சக்கரத்திற்போட வந்தது திரிகோணசோதனையென்பதாம்.

மேற்சொன்ன பிறகாரம் ஆணபிறகு நேர் நேர் ராசிகளாகிய

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | மேஷம் | ரிஷபம் | மிதுனம் | தனுசு | மகரம் |
| 2 | விருக்ஷிகம் | துலாம் | கன்னி | மீனம் | கும்பம் |

இதுகளில் சோதனை அடியிற்கண்டபிரகாரஞ் செய்து ஒரு சக்கரத்தில் போட்டால் ஏகாதிபத்திய சோதனை என்றுபெயர் கடகத்திற்கும், சிங்கத்திற்கும், சோதனையில்லை.

| இராசி 1. | | இராசி 2. | | |
|---|---|---|---|---|
| கிரகம் | எண் | கிரகம் | எண் | சோதனை |
| ஆம் | குறைவு அல்லது அதிகம் | ஆம் | குறைவு அல்லது அதிகம் | இல்லை |
| ஆம் | குறைவு | ஆம் | அதிகம் | இல்லை |
| ஆம் | ஆம் | இல்லை | இல்லை | இல்லை |
| ஆம் | இல்லை | இல்லை | ஆம் | சமம் செய்யவும் |
| ஆம் | குறைவு | இல்லை | அதிகம் | சமம் செய்யவும் |
| இல்லை | குறைவு | இல்லை | அதிகம் | கிரகம் இல்லாததை எடுத்துப் போடவும் |
| ஆம் | ஆம் | இல்லை | குறைவு அல்லது சமம் | |
| ஆம் | சமம் | இல்லை | சமம் | |
| இல்லை | சமம் | இல்லை | சமம் | |

மேற்சொன்னவைகளுக்கு சக்கரம்.

## சூரியன் அஷ்ட வற்கு.

| | | | |
|---|---|---|---|
| 5 | 4 | 4 | 2 |
| 3 | ஆதி 48 | | 5 |
| 5 | | | 3 |
| 6 | 3 | 3 | 5 |

| | | | |
|---|---|---|---|
| 3 | 3 | 4 | 2 |
| 2 | திரி 36 | | 3 |
| 4 | | | 3 |
| 3 | 3 | 2 | 4 |

| | | | |
|---|---|---|---|
| 0 | 3 | 4 | 2 |
| 2 | ஏகாதி 27 | | 3 |
| 2 | | | 3 |
| 3 | 3 | 0 | 2 |

இதன்பிறகு இராசி குணகாரம் கிரககுணகாரம் ஏகசமுகம் சுத்த பிண்டம் குணசமுகமும் கண்டு பிடிப்பதென்றறிக,

## இராசி குணகரம்.

ஆதியில் அந்தந்த இராசிகளி லிருக்கப்பட்ட எண்களை அடியில் வருபனவற்றால் அதற்குறியதால் பெருக்கி ஒரு சக்கரத்தில்போட அது இராசி குணகரமென்றறிக.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மேஷம் | 7 | கடகம் | 4 | துலாம் | 7 | மகரம் | 5 |
| ரிஷபம் | 10 | சிங்கம் | 10 | விருச்சிகம் | 8 | கும்பம் | 11 |
| மிதுனம் | 8 | கன்னி | 5 | தனுசு | 9 | மீனம் | 12 |

## கிரககுணகர மறிய.

ஆதியில் அந்தந்தக் காரகாள் ஏறியிருக்கும்படியான ஸ்தானங்களில் இருக்கிற எண்களை அடியில் வருபனவற்றால் அதற்குறியதால் பெருக்கி ஒரு சக்கிரத்தில் அதற்குறிய ஸ்தானத்திற்போட வந்தது கிரக குணகரமென்றறிக. சூரியன்-5 சந்திரன்-5 செவ்வாய்-8 புதன்-5 வியாழம்-10 சுக்கிரன்-7 சனி-5.

## ஏக சமூக மறிய.

ஆதியந்தம், இராசிகுணகரம், கிரககுணகரம் மொத்தத் தொகையுடன் திரிகோண சோதனை செய்யும்போது ஆதியிலிருந்து நீக்கின தொகையையும், ஏகாதிபத்திய சோதனை செய்யும்போது திரிகோணத்திலிருந்து நீக்கின தொகையையும் ஒன்றாகச் சேர்க்கவந்தது ஏகசமூகம்.

## சுத்தபிண்ட மறிய.

இராசி குணகரம், கிரககுணகரங் கூடிவந்த தொகை சுத்தபிண்டம்.

## குணசமூக மறிய.

திரிகோணம் ஏகாதிபத்திய சோதனை செய்யும்போது கழிக்கப்பட்டதுகளை ஒன்றாகக் கூட்டிவந்தது குணசமூகம்.

| | | | |
|---|---|---|---|
| 60 | 28 | 40 | 16 |
| 33 | இராசி குணகரம் 376 | | 20 |
| 25 | | | 30 |
| 54 | 24 | 21 | 25 |

| | | | |
|---|---|---|---|
| 0 | 32 | 20 20 | 14 |
| 0 | கிரக குணகரம் 171 | | 25 |
| 0 | | | 0 |
| 30 | 30 | 0 | 0 |

இதில் ஏகசமூம் 616 சுத்தபிண்டம் 547 குணசமூகம் 21.

இம்மாதிரியாக சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழம், சுக்கிரன், சனி, இவர்களின் ராசிகளுக்கு இப்படியே பார்த்துக் கடைசியில் இந்த 7-கிரகங்களின் அஷ்டவர்க்குகளில் ஆதியிலிருந்த எண்களை அந்தந்த ராசிக்கிரமமாய் எடுத்து ஒன்றாகக்கூட்டி ஒரு சக்கரத்தில் எழுதியது சர்வாங்க அஷ்டவற்கு, இதில் எல்லாப் பாலேயும் ஒன்றாகக், கூட்டினால் 337-ஆகும். ஏதாகிலும் ஒரு ராசியில் 30-க்கு மேலிருந்தால் பூரணம், 25-க்கு கீழிருந்தால் மத்தியம், 20-க்கு கீழிருந்தால் அற்பம்.

பலன்கள்.

திரிகோண சோதனை முன்கிரகம் 1-க்கு ராசியில் 3-க்குக் குறைவுபட்டால் அற்பபலன், 4-க்கு சமபலன், 5-முதல் 8-வரையிலும் அதிகபலன்.

இதன் பலனுவது.

| | |
|---|---|
| 1-க்கு திரவியநாசம் | 5-க்கு தனவருத்து |
| 2-க்கு அவமானம், பீடை | 6-க்கு வித்தைலாபம் |
| 3-க்கு சஞ்சலம், வித்தைநாசம் | 7-க்கு ஐஸ்வரியம் |
| 4-க்கு லட்சிமிகரம் | 8-க்கு ராஜயோகம் |

சர்வாங்க அஷ்டவர்க்கில்.

மேஷமுதல் நாலுராசி ஒரு தொகை, பிரதமகண்டம்.
சிங்கமுதல் நாலுராசி ஒரு தொகை, துதிகைகண்டம்.
தனுசுமுதல் நாலுராசி ஒரு தொகை, திரிதிகைகண்டம்.

யோகங்களி னமைப்பு.

| முன். | நடு. | பின். | யோகப் பெயர். |
|---|---|---|---|
| அதிகம் | குறைவு | அதிகம் | டமரகம்-உடுக்கை |
| குறைவு | அதிகம் | குறைவு | மத்தளம் |
| குறைவு | அதிகம் | மிகவுமதிகம் | எக்காளம் |
| அதிகம் | சிறிது | கொஞ்சம் அதிகம் | வீணை |
| மிகவு மதிகம் | குறைவு | மிகவுங்குறைவு | பருவதம் |
| குறைவு | சமம் | சமம் | வாசி |
| சமம் | சமம் | சமம் | சர்வாங்கம் |

சூரியன் அஷ்டவர்க்கில் 9-ம் ராசி பரல் எண் பிதாவின் சகோதரர்.

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் | ... | 4-ம் | மாதா |
| செவ்வாய் | ... | 3-ம் | ஜாதகன் |
| புதன் | ... | 5-ம் | அம்மான் |
| குரு | ... | 5-ம் | ஜாதகன் புத்திரர் |
| சுக்கிரன் | ... | 7-ம் | களத்திரம் |

ஷை ராசிபரல்கள் பெண்கிரகம் கொடுத்ததானால் பெண்.
ஷை ராசிபரல்கள் ஆண்கிரகம் கொடுத்ததானால் ஆண்.
ஷை ராசிபரல்கள் அலிகிரகங் கொடுத்ததானால் ஒன்றுமில்லை.

## கெண்ட மறிவது.

அந்தந்த லக்கினமுதல் நான்கு ராசியை ஒன்றாகக் கூட்டிவைத்ததில் எது அதிக துகையாகயிருக்கிறதோ அந்தத்திசையில் கெண்டமாம், அதாவது பாலியம், யௌவனம், வயோகம் என்று மூன்று திசைகளென் றறியவும்.

ஜன்ம லக்கினத்திலும், சந்திரலக்கினத்திலும் எண்குறைந்தாலும் சூரியன் நீச்சனாக யிருந்தாலும் பிதாவிற் கரிட்டம்.

புதன் கேந்திரம் திரிகோணங்களில் 6-ம் 6-க்கு மேற்பட்ட எண்ணேயிருந்து குருவும் பார்த்தால் நல்லவித்தை யுண்டாம்.

புதனிருந்த ராசிக் கதிபதி சுபனாய் கேந்திர திரிகோணங்களிலிருந்தாலும் 5-பரலுக்கு மேலிருந்தாலும், சிறந்த வித்வான்.

இலக்கினத்திற்கு 2-ம் ராசிக் கதிபதி சுபத்திலிருந்தால் கணிதத்திலும், சிற்பத்திலும் விசேஷவான்

குரு லக்கினத்திற்கு 5-ல் 3-எண்ணிருந்தால் அற்பபுத்திரர்.

சுக்கிரன்.
... 7-ல் சுக்கிரனிருந்தால் நல்ல களத்திரம்.
... 7-ல் சனியிருந்தால் ரோககளத்திரம்.
... 7-ல் புதனிருந்தால் களத்திரமில்லை.

சனி ... 8-ம் சமுதாயம் அல்லது சோத்தியப் பரலையும் சனினின்ற ராசியின் சோத்தியப்பரலையும் பெருக்க வந்தது ஜாதகனுக்கு தத்து யெனவும்.

அந்தந்த காரகாளின் முன்சொன்ன ஸ்தானப்பிறகாரம் ஏகாதிபத்திய சோதனையில் லக்கினமுதல் எண்ணி, யிருக்கப்பட்ட எண்களை

யும் அந்தந்த காரகாள் தற்காலம் ஏறியிருக்கின்ற ஸ்தானத்தின் எண்களையும் ஒன்றோடொன்று பெருக்கி 27-ல் வகுத்து வந்த மிச்சத்தை பூர்வபட்சமாகில் அசுவனி முதலாகவும், அமரபட்சமாகில் சித்திரை முதலாக எண்ணிவர குருமுதல் சுபர் வருங்கால் நன்மை, சுபம், சவுக்கியம், தேகவிர்த்தி, பொன்பூஷணம் வரவுண்டாகும். சனி முதல் பாபர்வரில், அதிக கெட்டபலன் அந்தந்த காரகாளுக்கு உண்டாகும்.

## சர்வாங்கத்தில்.

10-ம் இடம், 12-ம் இடம் எண் குறைந்து 11-ம் இடம் எண் அதிகமாக யிருந்தால் ராஜயோகம்.

11-ம் இடம் எண்குறைந்து 12-ம் இடம் எண் அதிகமானால் வரவுக்குமிஞ்சின சிலவு.

10-மிடம் எண்குறைந்து 12-மிடம் எண் அதிகமானால் செய்தொழிலில் லாபமில்லை.

## ஆயுசுபலன் கணிதம்.

குண சமூகத்தை 7-ல் பெருக்கி 27-ல் வகுக்க வந்தயீவு வருஷம், அதின் மிச்சத்தை 12-ல் பெருக்கி 27-ல் வகுக்க வந்த ஈவு நாள், 60-ல் பெருக்கி 27-ல் வகுக்க வந்த ஈவு நாழிகை.

இப்படிவந்த துகையில் ஒருவருஷத்திற்கு நாள் 36-ம், மாதம், ஒண்ணுக்கு நாள் மூன்றும்,நாள் ஒண்ணுக்கு நாழிகை 6-ம், நாழிகை ஒண்ணுக்கு விநாடி 9-ம் கழிக்க வந்தது ஆயுசு.

## இன்னொரு விதம்.

ஏக சமூகத்தை முதலாகவைத்து ஏகாதிபத்தியம் ராசிகுணகரம், கிரகதுணகரம், இவைகளையெல்லாம் ஒன்றின்பின் னொன்றாய் பெருக்கி வந்த கடைசி தொகையை 124,லை 80,000-ல் வகுக்க வந்தது மத்திப ஆயிசு. இப்படி சப்தகிரகங்கள் கொடுத்த மத்திம ஆயுசுகளை ஒன்றாகக்கூட்டி 324-ல் பெருக்கி 365-ல் வகுக்க வந்தது சுத்தாயுசு.

1 கிரகம் உச்சமானால் துன்பநிவர்த்தி.

2 கிரகம் உச்சமானால் ரதகெஜதுரக பதாதிவிர்த்தி.

3-4 கிரகம் உச்சமானால் மேன்மையாகிய சுபங்களுண்டு.

5-6 கிரகம் உச்சமானால் தெய்வப்பிறப்பு.

## கால சக்கரம்.

### காலசக்கரம் கொள்ளும்வகை.

ஒரு வட்டத்தையிட்டு அதநடுவே கீழ்மேல் இரண்டுரேகையும், தென்வடல் இரண்டுரேகையும், மூலைகளிலொவ்வொரு ரேகையுமாகக் கீறிற் பன்னிரண்டுவீடுகொண்ட சக்கரமாம். இதிலே நேர் கிழக்கு, நேர் தெற்கு, நேர் மேற்கு, நேர் வடக்கு இவற்றிலே நிற்கும் இராசியாவன இடபம், சிங்கம், விருச்சிகம், கும்பம். இதற்கு வலத்தின் ராசியாவன, மேடம், கடகம், துலாம், மகரம், என்கிற நான்கி ராசியாம், இதற்கு நாற்கோண ராசியாவன;—மிதுனம், கன்னி, தனுசு, மீனம், இப்படிக்கீறி நிருத்தினது காலசக்கிரமாம்.

### வலநாளறிய.

அசுபதி, புனர்பூசம், அத்தம், மூலம், பூரட்டாதி, முதலாக மும்மூன்றுநாள் வலநாள், இவைமேடாதி மீனாந்தமாக எண்ணப்படும், முந்தினபாதம் உடல், முடிந்தபாதம் உயிர்.

### இடநாளறிய.

உரோகணி, மகம், விசாகம், திருவோணம், முதலாக மும்மூன்று நாளிடநாள், இவை விருச்சிகமுதல் தனுசு அந்தமாக எண்ணப்படும், முந்தினபாதம் உயிர், முடிந்தபாதம் உடல்.

### காலசக்கிரதிசை வருஷங்களாவன.

மேடச்செவ்வாய்-7, இடபச்சந்திரன்-17, மிதுனபுதன்-9, கடகச் சந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-9, துலாசுக்கிரன்-16, விருச்சிகச்செவ்வாய்-7, தனுர்வியாழம்-10, மகரச்சனி-4, கும்பச்சனி-4, மீனவியாழன்-10.

### கதிகளறிய.

கன்னியினின்று கடகத்திற்பாய்வது, கடகத்தினின்று கன்னியிற் பாய்வது, சிங்கத்தினின்று மிதுனத்திற்பாய்வது, மிதுனத்தினின்று சிங்கத்திற்பாய்வதும் மண்டுக கதி.

மேடத்தினின்று, தனுசிற்பாய்வது, மீனத்தினின்று விருச்சிகத்திற் பாய்வதும் மிருகாந்திராவலோகனம்.

தனுசுனின்று மேடத்திற்பாய்வது, விருச்சிகத்தினின்று மீனத்திற் பாய்வதும் சூரக கதி.

## சவ்விய சக்கரம்.

அசுவனி, கார்த்திகை, புனர்பூசம், ஆயிலியம், அத்தம், சோதி, மூலம், உத்திராடம், பூரட்டாதி, ரேவதி.

| நக்ஷத்திரக்கால் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1-ம் கால் | 10 | 11 | 12 | 8 | 7 | 6 | 4 | 5 | 3 |
| 2-ம் கால் | 2 | 1 | 12 | 11 | 10 | 9 | 1 | 2 | 3 |
| 3-ம் கால் | 2 | 1 | 12 | 11 | 10 | 9 | 1 | 2 | 3 |
| 4-ம் கால் | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |

பரணி, பூசம், சித்திரை, பூராடம், உத்திரட்டாதி.

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1-ம் கால் | 8 | 7 | 6 | 4 | 5 | 3 | 2 | 1 | 12 |
| 2-ம் கால் | 11 | 10 | 9 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 3-ம் கால் | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 8 | 7 | 6 |
| 4-ம் கால் | 4 | 5 | 3 | 2 | 1 | 12 | 11 | 10 | 9 |

## அபசவ்விய சக்கரம்.

உரோகணி, மகம், விசாகம், திருவோணம்.

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1-ம் கால் | 12 | 11 | 10 | 9 | 8 | 7 | 6 | 5 | 4 |
| 2-ம் கால் | 3 | 2 | 1 | 9 | 10 | 11 | 12 | 1 | 2 |
| 3-ம் கால் | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 12 | 11 | 10 |
| 4-ம் கால் | 9 | 10 | 11 | 12 | 1 | 2 | 3 | 5 | 4 |

மிருகசீரிடம், பூரம், அனுடம், அவிட்டம்.

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1-ம் கால் | 9 | 8 | 7 | 6 | 4 | 5 | 3 | 2 | 1 |
| 2-ம் கால் | 6 | 7 | 8 | 12 | 11 | 10 | 9 | 8 | 7 |
| 3-ம் கால் | 6 | 4 | 5 | 3 | 2 | 1 | 9 | 10 | 11 |
| 4-ம் கால் | 12 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |

திருவாதிரை, உத்திரம்,
கேட்டை, சதயம்.

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1-ம் கால் | 9 | 10 | 11 | 12 | 8 | 7 | 3 | 4 | 5 |
| 2-ம் கால் | 6 | 7 | 8 | 12 | 11 | 10 | 9 | 8 | 7 |
| 3-ம் கால் | 6 | 4 | 5 | 3 | 2 | 1 | 9 | 10 | 11 |
| 4-ம் கால் | 12 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 1 |

## சவ்வியம்.

### அசுவனி முதற்பாதத்திற்கு.

மேடச்செவ்வாய் காலசக்கர வருடத்திற் கபகாரம்-100, நாள் 25, நாழிகை-12.

மேடச்செவ்வாய், இடபச்சுக்கிரன், மிதுனபுதன், கடகச்சந்திரன், சிங்கச்சூரியன், கன்னிபுதன், துலாச்சுக்கிரன், விருச்சிகச்செவ்வாய், தனுர்வியாழன்.

### அசுவனி யிரண்டாம்பாதத்திற்கு.

இடபவெள்ளி காலச்சக்கிர வருடத்திற் கபகாரம்-85, மாதம்-2, நாள்-7, நாழிகை-45, விநாடி-53.

மகரச்சனி, கும்பச்சனி, மீன வியாழம், விருக்ஷிகச் செவ்வாய், துலா வெள்ளி, கன்னி புதன், கடகச் சந்திரன், சிங்கச் சூரியன், மிதுன புதன்.

### அசுவனி மூன்றும்பாதத்திற்கு.

மிதுன புதன் காலசக்கர வருடத்திற் கபகாரம்-83, மாதம்-1, நாள்-9, நாழிகை-2, விநாடி-10⅛.

இடபவெள்ளி, மேடச்செவ்வாய், மீனகுரு, கும்பச்சனி, மகரச்சனி, தனுர் வியாழன், மேடச் செவ்வாய், இடப சுக்கிரன், மிதுன புதன்.

### அசுவனி நான்காம்பாதத்திற்கு.

கடகச்சந்திரன் கால்சக்கர வருடத்திற் கபகாரம்-86, மாதம்-2, நாள்-27, நாழிகை-54, விநாடி-25.

கடகச்சந்திரன், சிங்கச் சூரியன், கன்னிபுதன், துலாச்சுக்கிரன், விருக்ஷிகச் செவ்வாய், தனுர் குரு, மகரச்சனி, கும்பச்சனி, மீனகுரு.

பரணி முதற்பாதத்திற்கு.

சிங்கச்சூரியன், காலசக்கரவருடத்திற் கபகாரம்-100, நாள்-18.

விருக்ஷிகச் செவ்வாய், துலாச் சுக்கிரன், கன்னி புதன், கடகச் சந்திரன், சிங்காதித்தன், மிதுனபுதன், இடப சுக்கிரன், மேடச் செவ்வாய், மீனவியாழன்.

பரணி இரண்டாம்பாதத்திற்கு.

கன்னி புதன் காலச்சக்கர வருடத்திற் கபகாரம்-85, மாதம்-1, நாள்-7, விநாடி மூணரையே மூணுவீசம்.

கும்பச்சனி, மகரச்சனி, தனுர்வியாழன், மேடச் செவ்வாய், இடபவெள்ளி, மிதுனபுதன், கடகச்சந்திரன், சிங்கச்சூரியன், கன்னிபுதன்.

பரணி மூன்றும்பாதத்திற்கு.

விருச்சிகச்செவ்வாய் காலசக்கரவருடத்திற் கபகாரம்-83, மாதம் 2, நாள்-½, நாழிகை-23 விநாடி-51¼.

துலாவெள்ளி, விருச்சிகச்செவ்வாய், தனுர்வியாழன், மகரச்சனி, கும்பச்சனி, மீனவியாழன், விருச்சிகச்செவ்வாய், துலாச்சுக்கிரன், கன்னிபுதன்.

பரணி நான்காம்பாதத்திற்கு.

விருக்ஷிகச்செவ்வாய் காலசக்கரவருடத்திற் கபகாரம்-86, நாள் 29, நாழிகை-18, விநாடி-8$\frac{3}{8}$

கடகச்சந்திரன், சிங்கச்சூரியன், மிதுனபுதன், இடபவெள்ளி மேடச்செவ்வாய், மீனவியாழன், கும்பச்சனி, மகரச் சனி, தனுர்வியாழன்.

கார்த்திகை முதற்பாதத்திற்கு.

தனுர்வியாழன் காலச்சக்கரவருடத்திற் கபகாரம்-100, மாதம் 1, நாள்-6.

மேடச்செவ்வாய், இடபவெள்ளி, மிதுனபுதன், கடகச் சந்திரன், சிங்கச் சூரியன், கன்னிபுதன், துலாச்சுக்கிரன், விருக்ஷிகச் செவ்வாய், தனுர் வியாழன்.

கார்த்திகை இரண்டாம்பாதத்திற்கு.

மகரச்சனி காலசக்கர வருடத்திற் கபகாரம்-86, நாள்-16, நாழிகை-56, விநாடி-28¼.

மகரச்சனி, கும்பச்சனி, மீனவியாழன், விருச்சிகச் செவ்வாய், துலாவெள்ளி, கன்னிபுதன், கடகச்சந்திரன், சிங்கச்சூரியன், மிதுனபுதன்.

கார்த்திகை மூன்றும்பாதத்திற்கு.

கும்பச்சனி கால்சக்கர வருடத்திற் கபகாரம்-83, நாள்-17, நாழிகை-20, விநாடி-57 $\frac{13}{16}$

இடபவெள்ளி, மேடச்செவ்வாய், மீனவியாழன், கும்பச்சனி, மகரச்சனி, தனுர்வியாழன், மேடச்செவ்வாய், இடபவெள்ளி, மிதுனபுதன்.

கார்த்திகை நான்காம்பாதத்திற்கு.

மீனவியாழன் காலசக்கர வருடத்திற் கபகாரம்-86, மாதம்-1, நாள்-11, நாழிகை-51, விநாடி-37$\frac{5}{8}$

கடகச்சந்திரன், சிங்கச்சூரியன், கன்னிபுதன், துலாவெள்ளி, விருச்சிகச் செவ்வாய், தனுர்வியாழன், மகரச் சனி, கும்பச் சனி, மீனவியாழன்.

## அபசவ்வியம்.

உரோகணி முதற்பாதத்திற்கு.

விருச்சிகச் செவ்வாய் காலசக்கர வருடத்திற் கபகாரம்-86, நாள்-9, நாழிகை-18, விநாடி-8$\frac{3}{8}$

தனுர்வியாழன், மகரச்சனி, கும்பச்சனி, மீனவியாழன், மேடச் செவ்வாய், இடபவெள்ளி, மிதுனபுதன், சிங்கச்சூரியன், கடகச் சந்திரன்.

உரோகணி இரண்டாம்பாதத்திற்கு.

துலாவெள்ளி காலசக்கர வருடத்திற் கபகாரம்-83, மாதம்-2, நாள்-6, நாழிகை-23, விநாடி-51 $\frac{5}{16}$

கன்னிபுதன், துலாவெள்ளி, விருச்சிகச்செவ்வாய், மீனவியாழம், கும்பச்சனி, மகரச்சனி, தனுர்வியாழன், விருச்சிகச்செவ்வாய், துலாவெள்ளி.

உரோகணி மூன்றும்பாதத்திற்கு.

கன்னிபுதன் காலசக்கர வருடத்திற் கபகாரம்-85, மாதம்-1 நாள்-8, நாழிகை-7, விநாடி-மூன்றரைமே மூணுவீசம்.

உரோகணி நான்காம்பாதத்திற்கு.

சிங்காதித்தன் கால்சக்கர வருடத்திற் கபகாரம்-100, நாள்-18.

மீனவியாழன், மேடச்செவ்வாய், இடபவெள்ளி, மிதுனபுதன், சிங்கச்சூரியன், கடகச்சந்திரன், கன்னிபுதன், துலாவெள்ளி, விருக்ஷிகச்செவ்வாய்.

௩நாள் மிருகசீரிடம் முதற்பாதத்திற்கு.

கடகச்சந்திரன் காலசக்கர வருடத்திற் கபகாரம்—86, மாதம்-2, நாள்-27, நாழிகை-54, விநாடி-25¼.

மீனவியாழன், கும்பச்சனி, மகரச்சனி, தனுர் வியாழன், விருச்சிகச்செவ்வாய், துலாவெள்ளி, கன்னிபுதன், சிங்கச்சூரியன், கடகச்சந்திரன்.

மிருகசீரிடம் இரண்டாம்பாதத்திற்கு.

மிதுனபுதன், கால்ச்சக்கர வருடத்திற் கபகாரம்—83, மாதம்-1, நாள்-9, நாழிகை-2, விநாடி-பத்தே அரைக்கால்.

மிதுனபுதன், இடபவெள்ளி, மேடச்செவ்வாய், தனுர்வியாழன், மகரச்சனி, கும்பச்சனி, மீனவியாழன், மேடச்செவ்வாய், இடபவெள்ளி.

மிருகசீரிடம் மூன்றும்பாதத்திற்கு.

இடபவெள்ளி காலச்சக்கரவருடத்திற் கபகாரம்—85, மாதம்-2, நாள்-7, நாழிகை-45, விநாடி- அன்பத்திரெண்டே முக்காலே மூணுவீசம்.

மிதுனபுதன், சிங்காதித்தன், கடகச்சந்திரன், கன்னிப்புதன், துலாவெள்ளி, விருச்சிகச்செவ்வாய், மீனவியாழன், கும்பச்சனி, மகரச்சனி.

## மிருகசீரிடம் நான்காம்பாதத்திற்கு.

மேடச்செவ்வாய், காலசக்கர வருடத்திற்கபகாரம்-100, நாள்25 நாழிகை-12.

தனுர்வியாழன், விருச்சிகச்செவ்வாய், துலாவெள்ளி, கன்னிப் புதன், சிங்காதித்தன், கடகச்சந்திரன், மிதுனப்புதன், இடபவெள்ளி, மேடச்செவ்வாய்.

## திருவாதிரை முதற்பாதத்திற்கு.

மீனவியாழன், காலசக்கர வருடத்திற் கபகாரம்--86, மாதம்-1, நாள்-11, நாழிகை-51, விநாடி-37.

தனுர்வியாழன், மகரச்சனி, கும்பச்சனி, மீனவியாழன். மேடச் செவ்வாய், இடபவெள்ளி, மிதுனப்புதன், சிங்காதித்தன், கடகச் சந்திரன்.

## திருவாதிரை இரண்டாம்பாதத்திற்கு.

கும்பச்சனி, காலச்சக்கரவருடத்திற் கபகாரம்-83, நாள்-17, நாழிகை-20, விநாடி-57.

கன்னிப்புதன், துலாவெள்ளி, விருச்சிகச்செவ்வாய், மீனவியா ழன், கும்பச்சனி, மகரச்சனி, தனுர்வியாழன், விருச்சிகச்செவ்வாய், துலாவெள்ளி.

## திருவாதிரை மூன்றும்பாதத்திற்கு.

மகரச்சனி, காலசக்கர வருடத்திற் கபகாரம்-85 நாள்-16 நாழி கை-56, விநாடி-28.

கன்னிப்புதன், சிங்காதித்தன், கடகச்சந்திரன், மிதுனப்புதன், இடபவெள்ளி, மேடச்செவ்வாய், தனுர்வியாழன், மகரச்சனி, கும்பச் சனி.

## திருவாதிரை நான்காம்பாதத்திற்கு.

தனுர் வியாழன், காலச்சக்கரவருடத்திற்கபகாரம்-100, மாதம்-1 நாள்-6.

மீனவியாழன், மேடச்செவ்வாய், இடபவெள்ளி, மிதுனப்புதன், சிங்காதித்தன், கடகச்சந்திரன், கன்னிப்புதன், துலாவெள்ளி, விருச் சிகச்செவ்வாய்.

## ஐவகைப் பலன்களறிய.

### விருத்தம்.

ஓதுந்திசையை யுடையவன் முன்னோன் பதுமடைவூண்
பேதம்பெறுநட்பி னுச்சத்தினுட்சியிற் பேறுமிருந்
தீதொன்றிடும்பகை நீசத்துநல்ல கோடீக்கிரக
மேதம்பகைபெறி னிவ்வகையேயறி யேந்திழையே.

(இ-ள்.) உண்கின்ற கோளினுடைய ராசிக்கால் ஒன்பதாய்வந்த கோட்க ளூட்டுமிடத்து, ஐந்துவிதமாக வூட்டப்படும். நட்பினும், உச்சத்தினும், ஆட்சியினும், பாபக்கோளே யாயினும், சுபக்கோளே யாயினும், நன்மையே செய்வர், பகை நீச்சத்தினும் இவர்கள் தீங்கு, சத்துருபயம், தனச்சேதம், உண்டாக்குவர், எ-று. (1)

உச்சத்தினின்றபலன் நான்மடங்காமோது நட்பின்வந்தால், மெச்சப்படுத்து மிரட்டியென்றே வேறுமாட்சியினி, னச்சப்படுமொன்று நற்கோள்பகை நீசநண்ணிற்றீங்கோ, டெச்சத்திளவரி பீடை தனச்சேதஞ் சாவிடரே.

(இ-ள்.) சுபக்கோ ளுச்சத்து நின்றபொழுது பலன் நான் மடங்காம், நட்பிநின்றபொழுது இரட்டியாம், ஆட்சியின் நின்றபொழுது, சொல்லும் நன்மையேயாம், பகை நீசத்தி னின்றபொழுது, மனப்பீடை, புத்திரநாசம், சத்துருபயம், தனச்சேதம், மரணம், வியாதி இவற்றைச் செய்வார், எ-று. (2)

பகையிலிரட்டி தமக்குறைக்கும் பல நீசத்தினில்
வகைபெறுநான் மடங்காநட்பின்மா தனம்வாகனங்கள்
மிகவுடைந் துச்சத்துவேந்த ரருண்மிக்கபோகமுண்டா
தகைபெறுமாட்சியிற் றீக்கோடமக்கெனச் சாற்றினரே.

(இ-ள்.) பாபக்கிரகங்கள், பகையினி னின்றபொழுது தமக்குச் சொன்னப் பலன்களை இரட்டிக்கக் கொடுப்பர், நீசத்து நின்றபோது, நான் மடங்காகக் கொடுப்பர், நட்பி நின்றால் தனலாபம், வாகனம் மிகவுமுண்டாம், உச்சத்தி நின்றால் இராஜப்பிரசாதமுண்டாம், ஆட்சியினின்றால், தத்தமக்குச்சொன்ன, உத்தமபலன்களை கொடுப்பர், எ-று.

திசாபலன் அறிய.

அருக்கன்றிசையி லருவினைதாப மரசர்பயம்
வருத்துதர நோயிரத்தபித்தஞ் சந்திரதிசையில்
ருப்பநற்பெண்பேறு கன்னியர்கூட்டங் கலன்களிங்கந்
திருப்பொலியின்பஞ் செயந்தனப்பேறு திருந்திழையே.

(இ-ள்.) ஆதித்தன் றிசையில் வியாதி, தாபம், ராஜபயம், உதர நோய், இரத்த பித்தரோகம், பயித்தியம் இவையுண்டாம், சந்திரன் றிசையில், கெற்போற்பத்தி, 'புத்திரியிலாபம், வஸ்திராபரணம், அழகு தேகசவுக்கியம்,விஜயம், தனதானிய சம்பத்து இவை யுண்டாம்,எ-று.

கொடுங்குஜனூற் குருவெழல்வெப்புக் கொடுமைபித்த
மிடும்பைநிலை கேடறுத்தல் கடும்பிணி யென்பமேதைக்
கிடம்பெறுமில்லெழி லின்பம்புதல்வர்பே ளெண்ணறிது
றிடம்பெறுகல்வி திருவோகுறைத றிடங்குயிலே.

(இ-ள்) செவ்வாய் திசையில், வைசூரி, சுரம், பாபம், பித்தரோகம், சத்துருபயம், விரோதம், தானசலனம், அறுத்தல், சூடு, வியாதி, இவையுண்டாம், புதன்றிசையில், நிலைபேறு, கிரகப்பிரவேசம், அழகு, தேகசவுக்கியம், புத்திரலாபம், கணிதமுதலிய வித்தியாப்பியாசம், மனைவி முதலியோருடன், வசித்தல் இவையுண்டாம், எ-று. (5)

பீதகனூற் பெறும்புகழ் பிள்ளை யணிவியன்போர்
மாதரைச்சேர்தல் வலிஜெயம்வண்மை வனப்புவெள்ளி
காதலர்பேறு தனலாபம்நூல்கலை கற்றலணி
நீதியிற்பூண நிலம்பெறநிச்சயம் நேரிழையே.

(இ-ள்.) வியாழன் றிசையில் சத்கீர்த்தி, புத்திரலாபம், ஆபரணம் பூணல், தனலாபம், வித்தியாலாபம், யுத்தஜெயம் திரிசேர்வை, விஜயம், பிரபலம், தருமம், அழகு, ஒழுக்கம், இவையுண்டாம், சுக்கிரன்றிசையில் விவாகம், புத்திரலாபம், அர்த்தலாபம், வித்தியாலாபம், ஆபரணம், நீதியாய்நடத்தல், பூமிப்பேறு, வாகனம்,இவையுண்டாம், எ-று.

கோம்பிவருந் திசையிற் சுற்றமீட்டல் குடிபரித்தல்
சோம்பியிருத்தற் றுயரிற்கிடத்தரன் சுற்றம்வீத

லாம்பரிசாமிவை நட்பாட்சியை வகையாலறிக
தேம்பியிடை நுடங் கத்திரண்டோங்குஞ் செழுமுலையே.

(இ-ள்.) சனிதிசையில், பாபார்ச்சிதம், தேசம் விட்டுப்போதல், சோம்பலாயிருத்தல், சுற்றத்தார் பகையாதல், வியாதி, தரித்திரம், வித்துநாசம் இவையுண்டாம். இப்படிச்சொல்லிய பலாபலன்கள் நட்பு, ஆட்சி, யுச்சம், பகை, நீசம் பார்த்துச் சொல்லவும், எ-று. (7)

கிரகபலித மறிய.

ஆதியிற்சேய்கதி ரம்புவிசுன்னந்தத் தாசன்வெள்ளி
யோதுநடுவினி லொண்புந்திபாம்பெப்பொழுதுநன்மை
சேதந்தரும்பரி சிப்படிமாதிசை காலதிசை
கோதிலாக்கோசரக் கோட்டிறமுங்குறிக் கொண்மயிலே.

(இ-ள்.) மகாதிசை, காலச்சக்கரதிசை, கோசாரம், இவற்றில் சூரியனும், செவ்வாயும்,ஆதியிலும்,சந்திரனும், சனியும் அந்தியத்திலும், பிரகஸ்பதியும், சுக்கிரனும், மத்தியிலும், புதன், இராகு, கேது, எப்பொழுதும் பலாபலத்தைக் கொடுப்பர், எ-று. (8)

# சந்திரன் அடியிற்கண்ட ராசிகளிலிருக்க கிரகங்கள் தன்னைப் பார்த்தபலன்.

| கிரம். | மேஷம். | ரிஷபம். | மிதுனம். | கடகம். | சிங்கம். | கன்னி. |
|---|---|---|---|---|---|---|
| சூரிய | தனமில்லாமை | இட்டஸேவை செய்தல் | தரித்திரம் | கண்ணோய் | இராஜத்துவம் | ஸ்திரீ விஷயத்தில் ஜீவனம் |
| செவ் | அரசன் | இல்லாமை | இரும்பு வியாபாரம் மொண்டிக்கால் | வாய்விற்றுஜீவனன் | பாரியாள் விற்பன் | |
| புதன் | கல்வி | திருட்டு | இராஜத்துவம் | கல்வி | கணித சாஸ்திர | லோகசம்ரக்ஷகம் |
| குரு | அரசன் | கீர்த்தி | மேம்பாடு பாண்டித்தியம் | ஞானம் | தனம் | சேனாதிபத்தியம் |
| சுக்கி | குணசா | அரசு | தைரியம் | அரசு | அரசு | வித்துவம் |
| சனி | திருடன் | திரவியம் | பஞ்சு விற்பவன் | இருமலிளைப்பு | நாலாவித்தொழில் | ஸ்திரீ விஷயத்தில் ஜீவனம் |
| இரா | மிருக வழக்குநிலவழக்கு | வாகனம் பொருள் | பெருமை | வியாதி | விரோதம் | இடம் |
| கேது | | | ஞானம் | வாதம் | கலகம் | பொருள் |

| கிரம். | துலாம். | விருக்ஷிகம். | தனுசு. | மகரம். | கும்பம். | மீனம். |
|---|---|---|---|---|---|---|
| சூரிய | வஞ்சனை | அங்கவீன தரித்திரம் | தேகக்ஷீணம் | தரித்திரம் | பரதாரமிச்சை | பாவி |
| செவ் | | | | பூபதியாவான் | | |
| புதன் | பிரபுத்துவம் | தந்தையிருவர் | அறிவு | பண்டிதன் | பூபதி | பிரியவசனம் |
| குரு | பொன்தொழில் | பரிசுத்தம் | அரசு | | ராஜ அதிகாரன் | அரசு |
| சுக்கி | வியாபாரம் | வண்ணான் | பலர்களனுசரித்தல் | குருபீடம் பிரபுத்துவம் | பரதாரமிச்சை | பண்டிதன் |
| சனி | வஞ்சனை | அங்கவீனம்தரித்திரம் | தேகக்ஷீணம் | திரவியம் | | பாவி |
| இரா | பிரீதி | விஷ பரிக்ஷை | அரசு | மேற்பாடு | தீபாந்திரம் | விரோதம் |
| கேது | மேன்மை | மயக்கம் | வித்துவம் | யாத்திரை | சலபதார்த்தம் | கோபம் |

## ஜனிக்கும்போது ராசிகளில் சந்திரன் நிற்கும் பலன்.

### சந்திரன் மேஷத்தில் நிற்கும்பலன்.

விருத்தம்.

சீர்பெறுகும் மேடாமெனும் ராசிதன்னில்
சிறந்ததோ ரிந்திருக்கச் ஜெனித்தோனுக்கு
கார்பெறுகுங் கண்ணுருளை சிகப்பன்கொஞ்சம்
காமியா மதிகநடை யுடையோனுகும்
ஏர்பெற சீக்கிரத்தில் சந்தோஷிப்பான்
எழிலான தனந்தேடி சிலவுசெய்வன்
சார்பான புத்தியுமே சபலனுகும்
ஜலபயம் முழங்காலில் நோயுண்டென்னே.

(இ-ள்.) மேஷயிராசியில் சந்திரபகவா னிருக்கப் பிறந்தானுக்கு, கண் உருளையாகவும் சிகப்பு கொஞ்சமாகவு மிருக்கும்; காமியாகவும், அதிகநடையு முடையவன், சீக்கிரத்தில் சந்தோஷிப்பன், தனத்தை அதிகமாகத்தேடி சிலவுசெய்வான், பலாக்கிரமசாலி, ஸ்திரீகளுடன் விளையாடுபவன், தலையில் மருவு அல்லது வடிவு, புத்திரபலன், ஜலபய மும் முழங்காலில் நோயை யுடையவனுகும், எ-று.

### சந்திரன் ரிஷபத்தில் நிற்கும் பலன்.

என்னவே ரிஷபமதில் யிந்துநிற்க
ஏற்கவே புவிதனிலே பிறந்தோனுக்கு
மன்னவே மூக்குமுகம் பக்கந்தன்னில்
மருவுண்டு வெருயிறக்க னழகுளோனும்
இன்னவே துடைமுகம் பாரியாகும்
இருமல்பிறப் பதுமுந்தி யானும்பிந்தி
அன்னவே பிந்திபெண்ணும் சாந்தமாகும்
அதிகபசி யிரண்டுசொல்லிப் பின்புகேளே.

(இ-ள்.) சந்திரபகவான் ரிஷபவிராசியிலிருக்கப் பிறந்தோனுக்கு மூக்கு, முகம், பக்கத்திலும், மருவுண்டு, வெருயிறக்கமுடையவன், அழகுடையவன், துடையும், முகமும் பாரியாக இருக்கும், இருமலு

டையவன், முந்தி பிறந்தது ஆணுகும், பிந்தி பிறப்பது பெண்ணுகும், சாந்தமாகவிருக்கும். அதிகப் பசியுடையோனுகும். இரண்டு சொல் சொல்லி பின்பு சந்தோஷ மடைகுவான், எ-று. (2)

வேறு விருத்தம்.

கேழ்க்கவே கள்ளமாதர்க் கினியனற் பிரியனுவன்
மீழ்க்கவே சிநேகருக்கு மிக்கநற் சினேகநாகும்
சூழ்கவே வயதும்த்தியம் சுத்தமும் சுகமுளோனும்
வாழ்கவே புவியின்மீது வதிகசம்பத் துண்டாமே.

(இ-ள்.) கள்ளமாதர்களுக்குப் பிறியன், சிநேகருக்குச் சிநேகன், வயது மத்திபமுடையவன், சுத்தமும் சுகமுமுடையவன், வாழும்படியானப் புவியின்மீது சம்பத்துண்டாம், எ-று. (3)

சந்திரன் மிதுனத்தில் நிற்கும் பலன்.

வேறு-விருத்தம்.

ஆமென மிதுனமதி லிந்துநிற்க
அடவாகப் புவிதனிலே பிறந்தோனுக்கு
மாமென ஸ்திரீகளுக்குப் பிரியப்பட்டோன்
மகிழ்தூதன் சிவந்தகண்ணன் சுருண்டரோமன்
தாமென சூதாடுபவனன் அழகன்
தான்சத்தியன் போஜனப் பிரியனுகும்
பேரமெனப் புத்திசாலி பட்டுவஸ்திரம்
புகழாக யணியுஞ்சந் தோஷியாவான்.

(இ-ள்.) மிதுனவிராசியில் சந்திரபகவா னிருக்கப் பிறந்தவன், ஸ்திரீகளால் பிரியப்பட்டவன், மகிழ்தூதன், சிவந்த கண்ணன், சுருண்ட மயிருடையவன், சூதாடுபவன், அழகுடையவன், சத்தியவான், போஜனப்பிரியன், புத்திசாலி, பட்டுவஸ்திரமணிகும், சந்தோஷி, எ-று.

வேறு விருத்தம்.

மாகவே முகத்திற்ருனும் மருவுளன் பிரியவாக்கன்
ஆகவே மிகுரசவான் அழகுஸ்திரீகளைப் புகழ்வன்
ஏகவே தீர்க்கவாயுள் யாகுமூக் கழகேயுள்ளோன்
பாகமாய்க் கணிதநூலைப் பார்த்துநீப் புகலுவாயே.

(இ-ள்.) முகத்தில் மருவுடையவன், பிரியமாகிய வாக்குடையவன், மிருரோஷவான், அழகிய ஸ்திரீகளைப் புகழ்பவன், தீர்க்காயுசுவுடையவன், மூக்கு அழகன், எ-று. (5)

சந்திரன் கடகத்தில் நிற்கும் பலன்.

புகலவே கடகமதி லிந்துநிற்கப்
புவிதனிலே வந்துதித்தப் பாலகன்றான்
இகலவே ஸ்திரீகளை வசியஞ்செய்வன்
இன்பருக்த யின்பமே யுடையோனவன்
அகலவே யனேகவீடு கட்டிவைப்பன்
அவன்குறிய தேகன் திருட்டு சிநேகியாவன்
தகலவே யளவற்ற தனமும்பெற்று
தானெவற்கும் பிரியனென வாழ்குவானே.

(இ-ள்.) கடகவிராசியில் சந்திரனிருக்கப் பிறந்தவன், ஸ்திரீகளை வசியம் செய்வன், அன்புடைய நண்பரையுடையவன், அனேக வீடுகளை கட்டுபவன், குறுகியதேகன், திருட்டு சிநேகி யோசனையுடையவன், அளவற்ற தனமும் தேடுவான், எவர்க்கும் பிரியமுடையவனாக யிருப்பான், பருத்த கழுத்தன், சமயோசனை யுள்ளவன், எ-று. (6)

சந்திரன் சிங்கத்தில் நிற்கும் பலன்.

வானென சிங்கமதி லிந்திருக்க
வாகாகப் புவிதனிலே பிறந்தபாலன்
தானென யதிகமாங் கொடுமையோடு
தாநீண்ட சிகையனவன் ஸ்திரீவிரோதன்
நானென காடுமலை களில் வசிப்பன்
நண்ணிய பசிதாகம் போஜனப்பிரியன்
ஆமென துக்கனதி வீரன்கெர்வி
அறியஸ்திர மனதுடையனற்ப கோபியாமே.

(இ-ள்.) சிங்கவிராசியில் சந்திரபகவானிருக்கப் பிறந்தவன், அதிக கொடுமையுடையவன், நீண்ட சிகையுடையவன் ஸ்திரீவிரோதன். காடுமலைகளில் வசிக்கப் பிரியன், சிநேகமில்லாதவன், பசி

தாகம் போஜனம் தாம்பூலப்பிரியன், துக்கன் வீரத்தண்மை யுடையவன், ஸ்திரமாகிய மனதுடையவன், கெர்வி, உரத்தநகை யுடையவன், விசாலமான முகத்தன், அற்பகோப முடையவன் எ-று (7)

சந்திரன் கன்னியில் நிற்கும் பலன்.

கோவெனவே கன்னிதனி லிந்துநிற்க
குவலயத்தி லேபிறந்த பாலகன்றான்
காவென சுகன்சத்தியன் லீலாவிநோதன்
கல்விசாஸ் திரவல்லன் மெலிந்ததேகி
நாவென நீண்டிருப்பான் வெட்கமுள்ளான்
நற்கா ரியன்வெற்றி பிரதாபந்தானும்
தாமென தர்மன்நல்லன் பறதேசவாசி
தானதிகம் பெண் ஆண் கொஞ்சந்தானே.

(இ-ள்.) கன்யாவிராசியில் சந்திரனிருக்கப் பிறந்தபாலன், சுகமுடைய சத்தியவான், லீலாவிநோதன், கல்விசாஸ்திர வெற்றிப்பிரதாபன், தர்மகுணன், பறதேசசஞ்சாரி, நல்ல வாக்குடையவன், நல்லவர்களால் மேன்மையுடையவன், அதிகப் பெண்பிள்ளைகளையும் கொஞ்சம் ஆண்பிள்ளைகளையும் பெற்று வாழ்குவன், எ-று. (8)

துலாத்திற் சந்திரன் நிற்கும் பலன்.

தானென துலாமதிலே சசியேநிற்க
தரணிதனி லேபிறந்த பாலகன்றான்
கானென கன்னியரைத் தான்ஜெயிப்பன்
கல்வியிற் பண்டிதன் கொஞ்சம் நோயன்
நானென சுகம்குரு தெய்வபக்தி
நற்சாந்தன் நீண்டனவன் மெலிவுளோனும்
வானென திடமான புத்தியற்பன்
வாங்கவும் விற்கவும் வல்லோனுமே.

(இ-ள்.) துலா விராசியில் சந்திரபகவானிருக்கப் பிறந்தபாலன், கன்னியரை ஜெயிப்பவன், கல்வியிற் பண்டிதன், கொஞ்சம் வியாதியுடையவன், சுகம், தனம், குரு, தெய்வபக்தியுடையவன் சாந்த

முடையவன், நீண்டமனுஷன், மெலிவுடையவன், திடமான புத்தி யற்றவன், வாங்கவும் விற்கவும், வல்லமையுடையவன், எ-று. (9)

வேறு விருத்தம்.

ஆமென மேன்மையர்னக் குடியினிற் பிறந்தமாதை
தாமென யடைதல்பந்து சத்துரு பங்கவீனன்
நாமென நாளுமேதான் சஞ்சல முடையோனாகும்
போமெனக் கணிதமாய்ந்துப் புவிதனிலுரைசெய்வாயே

(இ-ள்.) மேன்மையானக் குடியில் பிறந்தபெண்களை அடைத லும், பந்துக்களுடையவன், சத்துருவுடையவன், அங்கவீனன், சஞ் சல முடையவன், எ-று. (10)

சந்திரன் விருச்சிகத்தில் நிற்கும் பலன்.

செய்யதோர் விருச்சிகத்தில் சந்திரன் வாழ
செகமதனி லேபிறந்த பாலகன்றான்
தையலே திரண்டமுழங் காலுமுள்ளான்
தன்னையே புகழ்ந்திடுவன் வாலிபத்தில்
மெய்யென தந்தைதனை யிழந்துவாழ்வன்
மிகுந்த சேஷ்டைகளுள்ள பயமுளோனும்
வெய்யவே நோயுளன் பிறபுநேசன்
வேறொருவ றறியாமல்பாபஞ் செய்வன்தானே.

(இ--ள்.) விருட்சிக விராசியில் சந்திரபகவானிருக்கப் பிறந்தபா லன் திரண்ட முழங்காலினன், தன்னையே புகழ்பவன், பாலியத்தில் தந்தையை யிழந்துவிடுவன், மிகுந்த சேஷ்டையுடையவன், பயமுடை யவன், நோயுடையவன், பிரபுநேசன், வேறொருவறியாமல் பாபம் செய் புவன், பட்சி மிருகம் பிடிப்பதில் சாமார்த்தியன், கண், மார்பு, விசால முள்ளவன், எ-று. (11)

சந்திரன் தனுசில் நிற்கும் பலன்.

வன்னிய சிலைதலே யிந்துமேவ
வாகாப் புவிதனிலே பிறந்தபாலன்
குன்னிய கூனன் பலவான் கம்பீரன்
கொப்புன ஜெயிக்கும் சொல்பராக்கிரன்

தன்னிய தந்தைபொருள் தனையழிப்பன்
  தான்திரண்ட தோளன்கவிதை செல்வன்மெத்த
துன்னியமோசஞ்செய்வன் தன்னினத்தை
  தூஷிப்பன் ஆபரண முடையோன்பாறே.

(இ-ள்.) தனுசு விராசியில் சந்திரனிருக்கப்பிறந்தபாலன் கூனன் பலவான், கெம்பீரன், ஜெயிக்கும் சொல்லன், பராக்கிரமமுடையவன், தந்தையினுடைய ஆஸ்தியை தாராளமாய்ச் சிலவிடுபவன், திரண்ட தோளுடையவன் கவிதைபாடுவன், செலவு செய்குவன், மோஸஞ் செய்து தன் இனத்தை தூஷிப்பவன், வஞ்சகன், ஆபரணமணியுங் கழுத்தன், நீண்டமுகத்தன், எ-று. (12)

சந்திரன் மகரத்தில் நிற்கும் பலன்.

பாரென மகரமதில் பிறையேநிற்க
  பாரிநிலே தானுதித்தப் பாலகன்றான்
காரென தனமிலா தரிவன்காவியம்
  கருதிய பொருளுதவி செய்யாணுகும்
போரென சவுக்கியங் கெட்டவார்த்தை
  புகல்காமி புஜபல நிச்சைசோம்பன்
ஏறெனப் புருஷர்களை வெல்வோனாகும்
  இனியபெண்டு பிள்ளைகளை மெச்சுவானே.

(இ-ள்.) மகரவிராசியில் சந்திரனிருக்கப் பிறந்தபாலன், தனமில்லாதவன், காவியம் முழுதும் தெரிந்தவன், பொருளுதவி செய்யாதவன், சவுக்கியமுடையவன், கெட்டவார்த்தைப் புகலுங்காமி, புஜபலன், மிகவும் இச்சையுடையவன், சோம்பலன், இனிமை ஸ்திரீ புகழற்ற கிருபையில்லாதவன், புருஷரை வெல்பவன், பெண்டு பிள்ளைகளை மெச்சுவான், எ-று. (13)

சந்திரன் கும்பத்தில் நிற்கும் பலன்.

மெச்சவே கும்பமதில் யிந்துநிற்க
  மேதினியி லேபிறந்த பாலகன்றான்
மிச்சவே பிறப்பில்மறு சிலகாரியத்தை
  மதிக்கவும் மாக்கவும் வல்லோனாகும்.

குச்சையாய்ப் பெண்களிடப் பக்ஷம்பாவி
கொடுமையாம் நீண்டதோர் முதுகுளோனும்
யிச்சையாய் துலதூர மேநடப்பான்
இனியவா சனைமலரில் பிரியனென்னே.

(இ-ள்.) கும்பவிராசியில் சந்திரனிருக்கப் பிறந்தபாலன், இடுப்பில் மருவுடையவன், சிலகாரியம், அழிக்கவும் ஆக்கவும் வல்லவன், பெண்களிடத்துப் பட்சமாகியவன், கொடுமையாளன், நீண்டமனுஷன், பெருத்த முதுகுவுடையவன், தூலவாக நடப்பவன், வாசனைமலர்ப்பிறியன், நரம்புயெழும்பி இருப்பவன் சிக்குடையயாபிரன், எ-று. ()

சந்திரன் மீனத்தில் நிற்கும் பலன்.

வேறு விருத்தம்.

என்னவே மீனம்தன்னி லிந்துவு யிருக்கத்தானும்
பன்னவே பிறந்தபாலன் பட்சிப்பன் ஜலஜந்துக்கள்
பொன்னவே போகபாக்கியம் பொருளொடுவீடுவாசல்
நன்றிய பதார்த்தமுண்பன் நல்லபெண்சாதிநேசன்.

(இ-ள்.) மீனவிராசியில் சந்திரனிருக்கப் பிறந்தவன் ஜலஜெந்துகள் தின்பவன், போகபாக்கியம், பொருள் வீடு வாசல் உடையவன், பதார்த்தங்களின்மேல் பிரியமுடையவன், நல்ல பெண்சாதி நேசமுடையவன், எ-று. (15)

வருஷப் பலன்.

ஜென்ம நக்ஷத்திரமுதல் வருஷப்பிறவேலை நக்ஷத்திரம் வரை எண்ணி யதை ஒன்பதில் கழிக்க வந்த மிச்சம்.

| | |
|---|---|
| 1-க்கு சூரியன் | 6-க்கு சுக்கிரன் |
| 2-க்கு செவ்வாய் | 7-க்கு சனி |
| 3-க்கு வியாழன் | 8-க்கு சந்திரன் |
| 4-க்கு கேது | 9-க்கு இராகு |
| 5-க்கு புதன் | |

என்று அவரவருக்குரிய பொசிப்பு நாட்களை க்கிரகங்களின் இராசியைப்பார்த்துப் பலன் பெறுகவும்.

## மாதபலன்.

ஜென்மனட்சத்திரம் முதல் மாதப்பிறவேச நடந்திரம்வரை எண்ணி ஏழில்பெருக்கி 8-ல் வகுக்க வந்த மிச்சம்.

1-க்கு ரோகமுண்டாம்
2-க்கு லாபமுண்டாம்
3-க்கு அலச்சலுண்டாம்
4-க்கு பந்தனமுண்டாம்
5-க்கு தனவருத்துண்டாம்
6-க்கு ஐஸ்வரியமுண்டாம்
7-க்கு அதிகவிரையமுண்டாம்
8-க்கு அவகேடுண்டாம்

இவ்விதமாகக் கண்டுப் பலாபலன்களை யாவரும் திருப்தியடையச் சொல்லவேண்டும்.

## தினபல னறிய.

சூரியனிருக்கிற நட்சத்திரமுதல், சந்திரனிருக்கிறவரை எண்ணியத் தொகையை, இரட்டித்தும், ஜென்ம நக்ஷத்திரமுதல் அன்றைய நக்ஷத்திரம் வரையுள்ள எண்களையும் அன்றைய வாரத்திய தொகையும் ஒன்றுய்ச்சேர்த்து ஒன்பதில் வகுத்து நின்றதை திசாசக்ரப்படி வருஷம் ஒன்றுக்கு அறைநாழிகையாய்க்கொண்டு பலாபலன்கள் சொல்லப்படும்.

| | | | |
|---|---|---|---|
| மீனம் | மேஷம் | ரிஷபம் | மிதுனம் |
| கும்பம் | இராசி சக்கரம் | | கடகம் |
| மகரம் | | | சிங்கம் |
| தனுசு | விருச்சிகம் | துலாம் | கன்னி |

## இராசி பலன்கள்.

### லக்கினமாகிய--மேஷம்.

மேஷமாகிய அசுவனி 4-பாதமும். பரணி 4-பாதமும், கிருத்திகை முதற்பாதமும் யிதில் உதித்தவன் அரசர் மெச்சுதல், திடமானபுத்தி, நகை, பொருள்கள் விருத்தி, ஆளடிமை பெறல், அதிக அழகு, இளைத்தசரீரம், தனம், சாமார்த்தியம், தர்மம், சாஸ்திரங்கேட்குதல், நீண்டகழுத்து, சொல்வண்மை, முன்கோபி, சிறுமுழங்கால், மிருகங்களைக்கொல்வன், இவன் றனக்கு 5-ல் அக்கினிபயம், 7-ல் சுரம், 20-ல் புலவன்வாக்கால் வியாதி, 22-ல் சற்பபயம், 25-ல் ஜலகண்டம், 28-ல் பிளவைப்புண், இந்த லக்கினத்தைச் சுபர்பார்த்தால் 100 - வயது இருந்து மார்கழிமாதம், பூர்வபட்சம், வியாழக்கிழமை, ரோகணி நட்சத்திரங்கூடிய இரவு 10 - நாழிகையில் தலைநோயால் நிரியாணமென வறிக.

### ரிஷப லக்கினபலன்.

ரிஷபராசியாகிய கிருத்திகை பின் 3-பாதமும், ரோகணி 4-பாதமும், மிருகசீரிடம் முன் 2-பாதமும், யிதில் உதித்தவன், தெய்வபக்தி, வாக்கு நிலைமை, அற்பபோஜனம், பருத்ததேகம், ஆளடிமை பெறல், புளிப்புப் பிரியன், வேண்டியமட்டும் கணிதசாஸ்திரம் படித்தல், வஸ்திராபரணம் அணிதல், மிருதுவானக்காது, பிறர்பொருளைக் கைபற்றுவன், கடிந்து அபகரித்தல், அதிகயிருமல், பிள்ளைகளின் மதனச்சொல்லை ஆசையோடு கேட்பவன், 5-ல் சுரபயம், 16-ல் வியாதி, கண்டம், 19-ல் காயம், 20, 27-ல் காச்சல், இந்த லக்கினத்தைச் சுபர்கள் பார்க்கில் வயது 77-வருஷம் இருந்து ஆவணிமாதம், பூர்வபக்ஷம் திரையோதசி, உத்திராடம், திங்கள் மாலை சுரத்தால் நிரயாணமென் வறிக.

### மிதுன லக்கின பலன்.

மிதுனமாகிய, மிருகசீரிடம் பின் 2-பாதமும், திருவாதிரை, 4-பாதமும், புனர் பூசம் 3-பாதமும் யிதில் உதித்தவன், கீர்த்தி, வெட்கம், கபடன், ஆசாரம், சொல் நிர்ணயமில்லாதவன், நோன்பு, குளிர்ந்தவசனன், துன்பகாரியத்தையே பார்ப்பவன், பித்தரோகம், கருமை அல்லது பச்சைநிறம், 3-ல் அநீதகண்டம், 5-ல் நெருப்பு பயம், 8-ல் ஆயுதகண்டம், 10-ல் பகையாளி சங்கட்டம், 18-ல் அண்டவாதம், 20-ல் நேத்திரநோய், இந்த லக்கினத்தைச் சுபர்பார்க்கில்

65-வயது வரையு மிருந்து ஆவணிமாதம் வளர்பிறை, சதுர்த்தசி, திருவோணம் கூடிய இரவு 14-நாழிகையில் மாரடைப்பால் நிரயாண மெனவறிக.

கடக லக்கின பலன்.

கடகமாகிய புனர்பூசம் 4-ம் பாதமும், பூசம் 4-பாதமும், ஆயிலியம் 4-பாதமும் மிதில் உதித்தவன், சிகப்புள்ளவன், சமர்த்தன், பலாக்கிரமமாய் நடப்பவன், வேசியர்மேல் ஆசையுள்ளவன், தனவான், குரு விசுவாசன், தந்தைப் பிரியன், கீர்த்தி, இரகசியமான விடத்தில் மருவு, சிலகாலம் தரித்திரம், 5-16-20-25-ல் அகாலசாவு கண்டம், இந்த லக்கிணத்தைச் சுபர்பார்த்தால் 90-வயது வரையு மிருந்து, மாசிமாதம், பூர்வபக்ஷம், பஞ்சமி, புதன், மிருகசீரிடம் அந்தியில் நிரயாணமெனவறிக.

சிங்கலக்கின பலன்.

சிங்கமாகிய மகம் 4-பாதமும், பூசம் 4-பாதமும்,உத்திரம் முதல் பாதமும், மிதில் உதித்தவன், நன்ருய் புசிப்பவன், சிவார்ச்சனைசெய்பவன், அதிகப் பசியுடையவன், தர்மசிந்தனையில், என்னுளும் பிரியன், புத்திசாலி வியாதிவந்தால் உடனே நிவர்த்தி, வேலையின்மேல் அதிக விருப்பமுடையவன், 5-10-17-ல் சுரமாகயிருந்து 30-நாளில் நிவர்த்திபாகும், இந்த லக்கினத்தை சுபர்கள் பார்க்கில் 80-வயது வரைக்கு மிருந்து, பங்குனிமாதம், அமரபக்ஷம், பாட்டிமை, அஸ்தம் சனிவாரம், பகல் நிரயாணமெனவறிக.

கன்னியா லக்கின பலன்.

கன்னியாகிய உத்திரம் பின் 3-பாதமும், அஸ்தம் 4-பாதமும், சித்திரை முன் 2-பாதமும் மிதில் உதித்தவன் தர்மம் செய்பவன், தரித்திரம், வெகு ஆசாரமுள்ளவன், பின்வயதில் பலகர்ம மிரிந்திடுவான், அதிக தனத்தை தேடுபவன், 5-ல் திபயம், 10-ல் சுரபீடிதம், 18-ல் வைசூரியும், இந்த லக்கினத்தை சுபர்பார்க்கில் 71-வயது வரைக்கு மிருந்து, வைகாசிமாதம், அமரபக்ஷம், சதுர்த்தசி சித்திரை நக்ஷத்திரத்தில் குன்மநோயினுல் நிரயாணமெனவறிக.

துலாலக்கின பலன்.

துலாமாகிய சித்திரைபின் 2-பாதமும், சுவாதி 4-பாதமும், விசாகம் முன் 3-பாதமும், மிதில் உதித்தவன் இரண்டு மனைவிகள்,

குழந்தை கூட்டமுள்ளக் குலம், அபிமானி, அதிக அயிஸ்வரியம், திரவியம், பிரபுக்கள் முதலிய பெரியோர்கள் சிநேகம், நல்லசுகம், வாசனைப் புஷ்பங்களை அணிதல், நத்திய உறவினர்கள், தர்மகுணம், 7-ல் அக்கினிபயம், 12-ல் வைசூரி, 19-ல் சத்துருபகை, 28-ல் ஆயுதபயம் 42-ல் ஜலகண்டம், இந்த லக்கினத்தை சுபர்பார்க்கில் 85 - வயதுவரையு மிருந்து, கார்த்திகை மாதம் அமரபக்ஷம், சஷ்டி, ஆதிவாரம், விருத்தியோகம், காலையில் நிரயாணமென வறிக.

## விருக்ஷிக லக்கின பலன்.

விருக்ஷிகமாகிய விசாகம் பின் 1-பாதமும், அனுஷம் 4-பாதமும் கேட்டை 4-பாதமும் யிதில் உதித்தவன், தாய்தந்தை நேசன், பெண் சாதிப்பிரியன், நல்லவார்த்தைப் பேசுபவன், கிரமமாய் நினைத்த காரியத்தை முடிப்பவன்4-ல் நெருப்புபயம், 5-ல் சுரம், 12-18-ல் அக்கினி கண்டம், 40-ல் ஜன்னி,வாதசுரம், இந்த லக்கினத்தை சுபர்பார்க்கில், 99-வயதுவரையு மிருந்து, ஆனிமாதம் வளர்பிறை, துவாதசி, சனிவாரம், விசாகம் சாயரக்ஷை நிரயாணமென வறிக.

## தனுசு லக்கின பலன்.

தனுசாகிய மூலம் 4-பாதமும், பூராடம், 4-பாதமும், உத்திராடம் முன் 1-பாதமும் யிதில் பிறந்தவன், பெரியோர் சிறியோர்மரியாதை யுடையவன், நன்மையானக்கீர்த்தி, நல்லபோகம், சத்துருக்களை கண்டுபிடித்தல், இளமையில்,மேன்மையானக் கல்வியைக் கற்றுக்கொள்ளல், திரிச்சல், நடுவயதில் திரவியப் போக்கினால் அலச்சல்படல் 12-15-32-40-ல் கண்நோய், இந்த லக்கினத்தைச் சுபர்பார்க்கில், 77-வயதுவரையு மிருந்து பின்யு நிரயாணமென வறிக.

## மகர லக்கின பலன்.

மகரமாகிய உத்திராடம் பின் 3-பாதமும் திருவோணம், 4-பாதமும், அவிட்டம், முன் 2-பாதமு மிதில் உதித்தவன், இரகசியயிடத்தில் மச்சம் உடையவன், நேத்திரம் நீண்டு உருளையாக யிருக்கும், வாசனை மலர்கள்மேல்பிரியன், மிகுந்த புத்திரர் உடையவன், நேர்த்தியான தேகம், சிகப்பு நிறம், பெண்ஜாதிப்பிரியன், பக்ஷிகளைக் கொல்பவன், 10-ல் சுரம், 32-ல் யாத்திரை, 47-ல் பாம்புபயம், இந்தலக்கினத்தை, சுபர்பார்க்கில் 67-வயது வரைக்குமிருந்து அமரபக்ஷம்,பஞ்சமி உத்திரட்டாதி காலை நிரயாணமென வறிக.

### கும்ப லக்கின பலன்.

கும்பமாகிய அவிட்டம் 2-பாதமும், சதையம் 4-பாதமும், பூரட்டாதி முன் 3-பாதமுமிதில் உதித்தவன் தன்னைத்தானே புகழ்ந்துக் கொள்பவன், மற்றவர்களை இகழ்ந்து பேசுபுவன், குள்ளம், கொஞ்சம் கல்வி, பித்தசரீரம், ஒருவர்செய்த நன்றியை உடனே மறந்துவிடுபவன், சிகப்புக்கண், சவுக்கியம் ஸ்திரீகளுக்கு நன்பன், 11-ல் சுரம், 19-ல் ஜன்னி,வாதசுரம், இந்த லக்கினத்தை சுபர்பார்க்கில் 80-வயது வரையுமிருந்து சித்திரைமாதம், பஞ்சமி, திருவாதிரை, வியாழக்கிழமை மாலையில் நிரயாணமெனவறிக.

### மீன லக்கின பலன்.

மீனமாகிய பூரட்டாதி பின் 1-பாதமும்,உத்திரட்டாதி 4-பாதமும், ரேவதி 4-பாதமுமிதில உதித்தவன், தனவான், சூரத்தன்மை, பொருந்தியவான், ஞானம்,அகோரமுள்ள இரண்டுமனைவி, வாசனை புஷ்பமிஷ்டன், குளிர்மையான கண்கள், தயை, கர்னரோகம், அன்னியர் பொருள் அபகரித்தல், வெகு ஜாக்கரதையுள்ளவன், கண்டதை எல்லாந் தின்னும் மூர்க்கன், 12-20-ல் சுரம், 28-ல் இருமல், இந்தலக்கினத்தை சுபர்பார்க்கில் 100-வயதுவரையு மிருந்து பின் நிரயாணமெனவறிக.

### ☞ முக்கிய கவனிப்பு.

சாதாரணமாய்க் கிரகங்கள் எப்போதும் மாரிக்கொண்டு வருவதாலும், அந்தந்த ராசியில் சம்பந்தப் பட்டவர்களும், வித்தியாசமாய் வருவதாலும், மேற்சொல்லிய இராசிகளின், பலன்களை கண்டிதமாய்க் கொள்ளாமல் தோராயமாய்க் கொள்ளலாம்.

# இராசிகளில் கிரகங்கள் நின்றபலன்.

## சூரியன்.

லக்கினத்தில் நின்றபலன்.—நேத்திரபங்கம், சுருசுருப்பு, அதிகசூடுள்ள திரேகம், குரூரம், சுரபயம்.

லக்கினத்திற்கு 2-ல் ,, அசிங்கிதன், அபராதம் கொடுப்பவன், வைராக்கியன் கோபி, சுமார் 25-வருடத்தில் கெண்டம்.

லக்கினத்திற்கு 3-ல் நின்றபலன்—தைரியசாலி, சுருசுறுப்புள்ளவன், பேர்பெற்றவன், கொஞ்சஞ் சகோதரர், நல்ல சவுக்கியமுடையவன், சுமார், 25 வருடத்தில் 4-கால் ஜீவனூல் பயமுண்டாகும்.

,, 4-ல் ,, ஊனதேகி,பந்துக்களை வெறுப்பவன்,வெளிஊரில் லாபம்,தாயாருக்கு அற்பவயது, சூடுள்ளதேகி, சுமார் 22-வருடத்தில், அதிகலாபங் கிடைக்கும், சந்தோஷமில்லாதவன்.

,, 5-ல் ,, எளிமையானவன், பிள்ளை யில்லாதவன், இருதய நோயுடையவன், ஸ்தூலதேகி, தகப்பனுக்கு சுமார் 7 - வருடத்தில் கெண்டம்.

,, 6-ல் ,, சுருசுறுப் புள்ளவன், தைரியசாலி, சுமார் 20 - வருடத்தில் கண்ணுக்கு ஹீனம், பிள்ளைகள் அதிகம்.

,, 7-ல் ,, ஜாதியில் விவாகம் நடக்கும், பெண்சாதிக்கு கீழ்படிந்திருப்பான், பிறர் வீட்டில் தப்பு ஆசையுள்ளவன், அழகன், 2-பெண்சாதி யுடையவன், பிரயாணம் செய்வதில் பிரியன்.

,, 8-ல் ,, கொஞ்சம் பிள்ளைகளுடையவன், தீர்க்காயுசு, சுமார் 10 - வருடத்தில் தலையில் புண்,கண்ஹீனம், பலயீனன், தர்மிஷ்டி.

,, 9-ல் ,, தெய்வபக்தியுடையவன், கொஞ்சம்ஸ்திதியுடையவன், அற்பபுத்திரான், தன் சம்பாத்திபப் பொருளேயொழிய பிதுரார்ச்சிதம் கிடையாது, அனேக பூமியுடையவன்.

,, 10-ல் ,, பேர்பெற்றவன், சவுக்கியன், படிப்புள்ளவன், வாத்தியத்தில் பிரியன், நல்லபுத்திரான், எடுத்தகாரியம் முடிப்பவன்.

,, 11-ல் ,, வாகன முடையவன், ஸ்திதிவந்தன், எடுத்த காரியத்தை முடிப்பவன், நல்ல நடவடிக்கையும், முரட்டுத்தனமுடையவன்

லக்கினத்திற்கு 12-ல் நின்றபலன்.—தரித்திரன், திருடன், கைம்பெண் சாதியை விரும்புவோன், நெடுங்காலன், முரட்டுத்தன முடையவன்.

## ச ந் தி ர ன்.

லக்கினத்தில் நின்றபலன்.—ஸ்தூலதேகி, வியாதியஸ்த்தன், இரகசியக் குறியில் வியாதி, அநேக சகோதரர், வைராக்கிய முடையவன், தண்ணீரில் கெண்டம்.

லக்கினத்திற்கு 2-ல் நின்றபலன்.—நல்லபார்வை யுடையவன், சுருசுறுப்பும், ஸ்திதிவந்தனும், நல்ல குடும்பியும், நல்வார்த்தை யாடுபவனுமாக யிருப்பான்.

,, 3-ல் ,, சுருசுறுப்புள்ளவன், அழகன், மெலிந்த தேகி, அநேக சகோதரர், சகோதரிகளுள்ளவன், பௌத்திரர்களுள்ளவன். வாசித்தவன், தைரியசாலி, கொடியவனுவான்.

,, 4-ல் ,, நன்ருய் வாசித்தவன், நல்ல நடத்தையுடையவன், அனேக பந்துக்களுடையவன், நல்ல ஸ்திதி வந்தன், சந்தோஷ முடையவன், பந்துவைக் காப்பாற்றுபவன், நல்ல தாயாருடையவன்.

,, 5-ல் ,, ஆடு, மாடு, குதிரைகள், நல்ல பெண்சாதி அநேக குமாரத்திகளுடையவன்.

,, 6-ல் ,, சோம்பலுடையவன், பெண்களுக்கு அடக்க மானவன், பலயீனன், கைம் பெண்ணை விரும்புவன், குடியன், சுருசுறுப்பன்.

,, 7-ல் ,, ஸ்திரீகளை விரும்புவன், நல்ல பெண்சாதியுடையவன், வைருக்கிய முடையவன்.

,, 8-ல் ,, திடமில்லாதவன், அற்ப புத்திரர்ள், சில காலத்தில் தாயார் மறிப்பள், மெலிந்த தேகி.

,, 9-ல் ,, கதையில் பிரியன், சுருசுறுப்புடையவன், கோயில் முதலியதுகள் கட்டுபவன், அநேகபூமி யுடையவன், நல்ல புத்திரர்ள், பொன், பந்து, ஸ்திதியுடையவன்.

லக்கினத்திற்கு 10-ல் நின்றபலன்.—தர்மன், தைரியசாலி, கைம்பெண் சாதிப் பிரியன், தீர்க்காயுசு, பெரியவர்களுக்கு அடங்கினவன்.

,, 11-ல் ,, சாந்தம், ஸ்திதிவந்தன், தர்மிஷ்டி.

,, 12-ல் ,, கெட்ட நடத்தை யுடையவன், துஷ்ட சமாச்சாரங் கேட்பதில் பிரியன், அநேகபந்துக்க ளுடையவன், கொடிய துஷ்ட்டன்.

## செவ்வாய்.

லக்கினத்தில் நின்றபலன்.—அதிக சூடான திரேகம், திருட்டு நடத்தை, நல்ல அழகன், மரியாதை யுடையவன், சிறுவயதிலேயே தகப்பனுக்கு கெண்டம்.

,, 2-ல் ,, கோபமுடையவன், வித்தியாலாபம், பூமிகளுடையவன்.

,, 3-ல் ,, அற்ப சகோதர முடையவன், சுருசுறுப்புள்ளவன், தைரியசாலி, தேசசஞ்சாரியாவான்.

,, 4-ல் ,, தாய் தந்தைக்கு அபாயம், குடும்பக்கலாபனை, பெண்கொலை செய்பவன்.

,, 5-ல் ,, பிள்ளை யில்லாதவன், கெட்ட நடத்தையுடையவன்.

,, 6-ல் ,, ஸ்திதிவந்தன், பூமி வுடையவன், சத்துரு சங்காரி, சுருசுறுப் புள்ளவன்.

,, 7-ல் ,, நோயுள்ள பெண்சாதி, கையில்நோய், அநேகசகோதரர், மாமன்மார்களுண்டு.

,, 8-ல் ,, அற்பபுத்திரர், அற்பவயது, தந்தைக்கு கெண்டம், தாசிப் பிரியன்.

,, 9-ல் ,, நோயாளி தகப்பன், பயிரில் நஷ்டம், கப்பல் வர்த்தகன்.

,, 10-ல் ,, ஸ்திதியுடையவன், கீர்த்திவான், தான் சம்பாதித்த பொருள் லாபம்.

,, 11-ல் ,, அநேக பூமியுடையவன், மூத்தசகோதரர்களுண்டு, பிதுரார்ச்சித மில்லை.

,, 12-ல் ,, தரித்திரம். மோசக்காரன், பெண்சாதி சிறுவயதில் யிறந்திடுவள்.

## புதன்.

லக்கினத்தில் நின்றபலன்.—வித்தியாலாப முடையவன், ஜோசியன், கணிதப்பிரியன், தீர்க்காயுசு.

லக்கினத்திற்கு 2-ல் நின்றபலன்.—அநேகப் புத்திருண்டு, வேதாந்தி, நல்வசனம், ஸ்துதியுடையவன், சுயார்ச்சித முள்ளவன்.

" 3—ல் " சந்தோஷன், பெண் அதிஷ்டன், அநேக சகோதரர், துஷ்டன்.

" 4—ல் " வித்தியாலாபம், ஜாக்கிரதை யுள்ளவன், வணக்க முடையவன்.

" 5—ல் " மாமனுக்கு கெண்டம், தாய் தந்தைக்கு நஷி, நல்ல மரியாதை யுடையவன், சண்டைக்காரன்.

" 6—ல் " மரியாதை யுடையவன், தந்திரசாலி, தாய்க்கு நஷி, பொருளை அழிப்பன்.

" 7—ல் " வாகனம், குதிரை யுடையவன், நல்ல சவுக்கியன், தர்மிஷ்டி, தேசசஞ்சாரி, தாய்க்கு அதிக பிரியன்.

" 8—ல் " வெகுவய துடையவன், வணக்க முடையவன், அற்ப புத்திரர், அநேக பூமிகளுடையவன்.

" 9—ல் " வணக்கமுடையவன், வாத்தியப்பிரியன், அநேக புத்திராள்.

" 10—ல் " செல்வன், தருமநெறியி லிருப்பான், நல்ல பெயரெடுப்பவன், ஜாக்கிரதையுள்ளவன்

" 11—ல் " அநேக பூஸ்திதியுடையவன், சந்துஷ்டி, கணக்கில் நிபுணன்.

" 12—ல் " அதிக ஜாக்கிரதையுள்ளவன், தேசந் திரிபவன், வணக்கமுடையவன், தாய்க்கு நஷி, அற்ப புத்திராள்.

## குரு.

லக்கினத்தில் நின்றபலன்.—வித்தவான், இலக்கணங் கற்றவன், அநேக புத்திருடையவன், தீர்க்காயுசு, மரியாதை யுள்ளவன், ஸ்துலதேகி.

லக்கினத்திற்கு 2-ல் நின்றபலன்.—நல்லபார்வை யுடையவன், சமத் காரன், ஸ்திதிவந்தன், நல்ல களத்திர முடையவன், பெரிய குடும்பியாவன்.

„ 3-ல் „ அநேகச் சகோதராருடையவன், எண்ணத்தை நிறைவேற்றுபவன், இனத்தாரைக் காப்பாற்றுகிறவன்.

„ 4-ல் „ சந்துஷ்டி, ஸ்திதிவந்தன், படிப்புடையவன், வண்டி, குதிரை, பந்து ஒத்தாசையுடையவன், மாதுருப்பிரியன், சொந்த வீடு கட்டுபவன்.

„ 5-ல் „ உருண்ட கண்ணன், மந்திரி யாவான், வெகு ஜாக்கிரதையுள்ளவன், வர்த்தகத் திரமையுள்ளவன்.

„ 6-ல் „ அனேக பௌத்திரருடையவன், அஜீர்ண ரோகம்.

„ 7-ல் „ புத்திசாலி, நல்லபெய ரெடுப்பன், மிகு ஆசை யுள்ளவன், பயிர்த் தொழிலில், ஜெயம்.

„ 8-ல் „ ஈனபுத்தி, குடியன், வயிற்றில் நோயுடையவன், வெகுவயதுள்ளவன்.

„ 9-ல் „ வெகுபுத்திரர், ஸ்திதிவநதன், தகப்பனுக்கு தீர்க்காயுசும், வித்தைலாபமு முடையவன்.

„ 10-ல் „ வித்தியாலாபம், மரியாதையுள்ளவன், அனேக பூமிகளையுடையவன், வெகு புத்திரர், வாகன முடையவன்.

„ 11-ல் „ வாத்தியப்பிரியன், பிறபு, ஆனையும், குதிரையும், அதிகஸ்திதியும், தெய்வபக்தியுமுடையவனாக யிருப்பன்.

„ 12-ல் „ கொடுமையுள்ளவன், அற்பபுத்திரர்கள், தரித்திரம்.

## சுக்கிரன்.

லக்கினத்தில் நின்றபலன்.—கணக்கில் நிபுணன், வெகுவயதுடையவன் பூஷணலாபம், களத்திரப்பிரியன்.

லக்கினத்திற்கு 2-ல் நின்றபலன்.—அழகிய கண்ணன், வெகு குடும்பி, நல்ல களத்திரன், வித்தைக்குரியவன், சிறந்த ஆசிறியன், பண்டிதன்.

,, 3–ல் ,, அனேக சகோதரர், வணக்கமுடையவன், சிக்கனக்காரன், சவுக்கியன்.

,, 4–ல் ,, நன்றாய் சாப்பிடப்பட்டவன், வித்தை லாபமும், ஜாக்கிரதையும், பிரிய மாதுரை யுடையவனும், வாகனமுடையவனும், பசுமாடுகள். விருத்தியும் வுண்டாம்.

,, 5–ல் ,, ஜாக்கிரதை யுள்ளவனும், வித்தைக்குறியவனும், அனேக புத்திரர்களுடையவனும். தாயாருக்கு கெண்டமும் வுண்டாகும்.

,, 6–ல் ,, ஸ்திரீலோலன், பேறப்பிள்ளைகள் மெத்த வுண்டு.

,, 7–ல் ,, திரிவதில் சாமார்த்தியன், பெண்கள் பிரியன்.

,, 8–ல் ,, சந்துஷ்டி, அற்பவயது, தாய்க்குகெண்டம், தெய்வபக்தியு முள்ளவன்.

,, 9–ல் ,, பெரியோர்நேசம். தன் வேலையில் ஜாக்கிரதை யுள்ளவன், குருப்பிரியன்.

,, 10–ல் ,, தெய்வபக்தி யுடையவன், மூத்த சகோதரர்கள், வாகனங்களு முடையவன்.

,, 11–ல் ,, வித்தைக் குடையவன், அனேக பூஸ்திதி, நல்ல சகவாசஞ் செய்வன்.

,, 12–ல் ,, ஸ்திரீலோலன், ஈனஜாதியைச் சேருபவன், ஸ்திதிவந்தன், துர்க்கர்மி.

## ச னி.

லக்கினத்தில் நின்றபலன்.—தாழ்ந்த குலஸ்திரீயைச் சேருபவன், குடியன், புத்திரஹானி யுடையவன்.

லக்கினத்திற்கு 2-ல் நின்றபலன்.—இருதார முடையவன், ஆஸ்திகளை சிலவிடுவன், குடியன், சொற்பபூமி

லக்கினத்திற்கு 3-ல் நின்றபலன்.—சகோதரர்களால் பிழைப்பவன், சாந்தமும் வணக்கமு முள்ளவன், தைரியசாலி, சதாபோகி, அனேக ஆளுடைமை யுள்ளவன்.

„ 4–ல் „ கபடன், அன்னியதேசத்தில் லாபம், 2-தாயாருடையவன்.

„ 5–ல் „ சந்தான மில்லாதவன், கெட்டயெண்ணமுடையவன், கோள்சொல்பவன்.

„ 6–ல் „ செவிடன், பிடிவாதக்காரன், அற்பபுத்திரருடையவன், சண்டைக்காரன், ஸ்திரீமேல் விருப்பமுள்ளவன்.

„ 7–ல் „ மெலிந்ததிரேகன், அனேக களத்திரமும், செவிடனும், மோசக்காரனும், யாத்திரைவர்சியுமாக யிருப்பான்.

„ 8–ல் „ வறுமையுடையவன், தாழ்ந்தகுல ஸ்திரீயைச்சேருபவன், அற்பபுத்திரர், குடியனாக யிருப்பான்.

„ 9–ல் „ சத்திரங்கள் முதலியதுகட்டுவன், அலைச்ச லுடையவனாக யிருப்பான்.

„ 10–ல் „ பயிற்பிரியன், பெருத்த உத்தியோகஸ்தனாக வெளியூரி லிருப்பான்.

„ 11–ல் „ மூத்த சகோதரரில்லை, ஸ்திதிவந்தனும், அனேக பூமி யுடையவனும், நல்லவாகன முடையவனுமாக யிருப்பான்.

„ 12–ல் „ வித்தை லாபம், ஓரக்கண்ணன், கெட்ட விஷயத்தில் திரவியநஷ்ட முண்டாகும்.

## இராகு.

லக்கினத்தில் நின்றபலன்.—பிள்ளையில்லாதவன், தைரியசாலி.

லக்கினத்திற்கு 2-ல் „ நாஷ்டிகமுள்ள திரேகம், கொஞ்சம் ஸ்திதிவந்தன், பிள்ளைகளை யிழப்பவன்.

,, 3-ல் ,, அற்பபுத்திர ருடையவன், தைரியசாலி, அனேக சகோதரர்க ளுடையவன்.

,, 4-ல் ,, இதரபாஷையில் பிரியன், வெகு பூஷண முடையவன், 2-பெண்சாதிக ளுடைய வன்.

,, 5-ல் ,, பிள்ளைகளை யிழப்பவன், வஞ்சகன், பித்த தேகி யாவான்.

,, 6-ல் ,, ஸ்திதிகளை யிழப்பவன், சத்துருக்களைக் கொல்லுபவன், ஈனஜாதி ஸ்திரீகள் மேல் பிரியன்.

,, 7-ல் ,, 2-பெண்சாதியை யுடையவன், முதல்தா ரத்திற்கு உதரநோய்காணும், கைம்பெ ண்ணைச் சேர்பவன், இனிய பதார்த்தப் பிரியன்.

,, 8-ல் ,, ஈனபுத்தி யுடையவன், சண்டைக்காரன், 35 அல்லது 56-வருடத்திற்குள் கெண் டப்வரும்.

,, 9-ல் ,, அற்ப புத்திரர்களுண்டு, குடியன், பெண் களுக்கு அடக்க முடையவன்.

,, 10-ல் ,, கைம்பெண்சாதிப்பிரியன், ஸ்திதிவந்தன், அன்னியதேச சஞ்சாரன்.

,, 11-ல் ,, அனேக சிநேகிதர்கள், அனேகப் பிள்ளை கள், மூத்தசகோதரர், சகோதரிகளு முண்டு.

,, 12-ல் ,, அற்ப புத்திரரும், சிலவாளியுமாக யிருப் பான்.

## கேது.

லக்கினத்தில் நின்றபலன்.—பலயீன மானவன், அதிக சூடுள்ளதிரே கன், ஸ்திரீகள்மேல் ஆசையுள்ளவன், ஜாக்கிரதை யுடையவன்.

லக்கினத்திற்கு 2-ல் ,, வஞ்சகன், கோபி.

லக்கினத்திற்கு 3-ல் நின்றபலன்.—இளைய சகோதரரில்லை, ஸ்திதிவந்தன், அனேக பந்துக்களுடையவன்.

„ 4—ல் „ பாஷாணத்தால் கெண்டம், சண்டைக்காரன், பலயீனன், நோயுள்ள தாயார்.

„ 5—ல் „ தயாள முள்ளவன், சில பிள்ளைகளுண்டு, ஸ்திரீ லோலன்.

„ 6—ல் „ பெண்களால் பூசிக்கப்பட்டவன்.

„ 7—ல் „ வேலைக்காரரைச் சேருபவன், நோயுள்ள பெண்சாதி யுடையவன், கைம்பெண்ணைத் தேடுபவனாக யிருப்பான்.

„ 8—ல் „ சில பிள்ளைகளுண்டு, ஞானமில்லாதவன், சண்டைக்காரன்.

„ 9—ல் „ கண்ணுக்கு ஹீனம், பிள்ளைகளால் ஆதரிக்கப் பட்டவன், பந்துக்களும், சினேகிதர்களும், மெத்தவுண்டு.

„ 10—ல் „ அல்ப சந்தோஷி, கெட்டபந்துக்களுடையவன்.

„ 11—ல் „ அநேக சினேகிதர்கள், ஸ்திதி வந்தன், ஜாக்கிரதை யுள்ளவன், தைரியசாலியாவான்.

„ 12—ல் „ தாழ்மையுள்ள சினேகிதர்களுண்டு, பிறதேச சஞ்சாரி. அடிக்கடி யாத்திரைவாசியாய்த் திரிபவனாக யிருப்பான்.

## குளிகன்.

லக்கினத்தில் நின்றபலன்.—எவர்க்கும் விரோதி, துக்கன்.

லக்கினத்திற்கு 2—ல் „ எவர்களோடும் சண்டை, வழக்கிடுபவன், கோபி, நோயுடையவன்.

„ 3—ல் „ கெர்வி, பாக்கியமுடையவன், சகோதரவிரோதி, கோபி, சிற்ப நூலறிவன்.

„ 4—ல் „ ஜனங்களைவிட்டு காடுமலைகளில்சஞ்சாரஞ்செய்பவன், வெகுஜன விரோதி.

,, 5-ல் ,, சாதுக்கள்நேசம், புத்திரஹானி.

,, 6-ல் ,, ஞானமுடையவன்,பகைஞருக்கு விரோதி, சத்துருவை ஜெயிப்பவன்.

,, 7-ல் ,, களத்திரயீனன், சகலருக்கும் விரோதி, அழகில்லாமனைவி, மந்தன், கெர்வி, மனைவியால் துக்கன்.

,, 8-ல் ,, கோபி, சொற்பமேதகி, கோபுரமேறிவிழுந்திறப்பான்.

,, 9-ல் ,, பாவி, வஞ்சகன், துக்கியாவான்.

,, 10-ல் ,, யாசகஞ்செய்து ஜீவனம், கைவிரல்கள் குறைவு, மனதுக்கம்.

,, 11-ல் ,, தனநாசம், வாழ்வுநாசம், ஜேஷ்ட்டக் குருதோஷம்.

,, 12-ல் ,, நேத்திரவியாதி, பணவிரையம்.

# சோதிட ரகசியமென்னும்

## ஆயுள்கணித - மூலமும்-உரையும்,

முதற்பாகம் - முற்றிற்று.



உ

கடவுள் துணை.

# சோதிட ரகசிய மென்னும்

## ஆயுள்கணித மூலமும் உரையும்.

## இரண்டாம் பாகம்.

### விநாயகர்-காப்பு.

விருத்தம்.

சீருகுஞ் சோதிடச் சித்தியென்னுஞ்
சிரஞ்சீவி யாமாயுள் கணிதந்தன்னை
ஏருக்கும் வெகுநாளா யாலோசித்து
இயம்பினேன் முதற்காண்ட மெவருங்காண
காருகும் மிதுரண்டாங் காண்டந்தன்னை
கயருதற்கு மூலமுறை யாகவின்று
தாருகுந் தையல்வள்ளி முருகனோடுந்
தந்திமா முகவன் திருவடியே காப்பு.

### முகவுரை விருத்தம்.

ஆதிபரா பரத்தினிடப் பாதந்தன்னை
அனுதினமுந் தானேதொழு மன்பருவுஞ்
சோதியாஞ் சித்தருடு முத்தர்மூதோர்
சொன்னதோர் சோதிடநூற் பலதுமாய்ந்து
வாதியாங் கணிதநூற் புலவர்தாமும்
வரைகுஞ்சி ரனுபோக மதையுஞ்சேர்த்து
ஓதினே னுலகிலிது வாழவேண்டி
உத்தமரே கண்டுமன மகிழுவீரே.

—

## அற்பாயுள் யெனவறியும் பொதுப்பலன்.

விருத்தம்.

மாதெனக் காரிபொன் நீசமின்றி
  மருவிட யவரையுமே வெய்யோன்ருனும்
போதெனப் பொருந்தியே கூடப்பார்க்க
  புகழுள்ள மதிபெலங் குறைந்துநிற்க
நீதென யவர்க்குமே நாலாம்வீட்டில்
  நின்றிடச் சனியோடுப் புந்திதானும்
மாதென மதிகுரு நோக்கில்லாமல்
  மந்தன்புகர் கூடிடிலோ யுடனேசாவன்.

(இ-ள்.) ஆயுட்காரகனுகியச் சனியும், புத்திரக்காரகனுகிய குருவும் நீச்சமடையாமல் நிற்க, அவருடன் பிதுர்க்காரகனுகிபச் சூரியன் கூட அல்லதுபார்க்க, சந்திரன் பெலன் குறைந்திருக்க, அவர்க்கு நாலாம் ராசியில், சனியும், புதனுமாகவிருக்க, சந்திரன், குரு, இவர்கள் பார்வையில்லாதிருக்க, அல்லது சனியும், சுக்கிரனும், ஒன்ருகக்கூடிநிற்கப் பிறந்தபாலன் உடனேமறிப்பான், எ-று. (1)

சேவென யுதையத்திற் கெட்டில்மந்தன்
  சார்பாக யொருவனுமாய் நிற்கத்தானும்
மாவென மதியத்திற் கெட்டிற்பூமன்
  மருவிட மன்னனவ னிவர்க்கேழாக
ஆவென யதையொத்து யிரவிநிற்க
  யதற்கேழ்நான் காமிடமே மந்தன்வாழ
போவெனப் புவிதனிலே பிறந்தபாலன்
  பிரமன்விதி யற்றுநில்லா தேகும்பாரே.

(இ-ள்.) உதையவிராசிக்கு எட்டாம்ராசியில் சனி ஒருவனுகத் தனித்திருக்க, சந்திரனின்ற ராசிக்கு பத்தாம்ராசியிலும், எட்டாம் ராசியிலும், அங்காரகனிருக்க, குரு அவர்கள் நின்ற யிராசிக்கு ஏழாம் ராசியிலிருக்க, அதையொத்து சூரியனுமிருக்க, அவர்க்கு ஏழாம் ராசியிலும் நான்காம் ராசியிலும், சனியிருக்கப் பிறந்தபாலன் விதியானது அற்று பூமியின்மீது நில்லாமற் போய்விடும், எ-று (2)

பார்க்கவே யுதையத்திற் கெட்டிற் கெட்டில்
பகர்மந்த னுரகனு மிரவி நிற்க
மார்க்கமா மதிக்கெட்டுக் கெட்டில் னல்ல
மன்னவ னேடுமே பூமன் சேரக்
கார்க்கவே கதித்திட்டுச் சுங்கன்புந்தி
காணவே பார்வையு மில்லாதாக
ஏர்க்கவே யிப்புவியிற் பிறந்தபாலன்
எட்டுநாட் குள்மரண மாகுமென்னே.

(இ-ள்.) உதையராசிக்கு எட்டாம்ராசிக் கெட்டாம்ராசியில், ஆயுட்காரகனாகிய சனியும், பாம்புகளுஞ், சூரியனும் நிற்க, சந்திரலக்கினத்திற்கு எட்டுக்கு எட்டாம் ராசியில் வியாழமும், அங்காரகனும், கூடிநிற்க, அவற்கு எட்டாம்ராசியில் சுக்கிரபகவானும், புதனுங்கூடி நின்று அவர்களைப்பாராதிருக்கப் பிறந்தபாலன் பிரமதேவன் விதித்த வாருபோல் பூமியின்மீது எட்டுநாள் இராமல் மரணமாகிவிடும், எ-று.

என்னவே யருக்கனுக்கு யெட்டிற்காரி
இருந்திட யுதையத்திற் பூமன்தானும்
பன்னவே யவர்களையும் சுபரேபார்க்க
பகரக்கேள் சோமனை றன்றிகேளாய்
உன்னியப் பாம்புடன் கூடிநிற்க
உலகுதனி லேபிறந்த பாலன்றானும்
மன்னிய மறையவனுர் விதித்தவாறு
மண்மீது ஒருநாளும் நில்லாப்பாறே.

(இ-ள்.) சூரியபகவான் நின்ற ராசிக்கு எட்டாம் ராசியில் சனி இருக்க, உதையவிராசியில் அங்காரகனிருக்க, இவ்வடைவாக நின்ற இவர்களை நல்லோராகிய சுபக்கிரகங்கள் இன்பமோடுப் பாராமலிருக்க சந்திரனன்றி பாம்புடன் அவர்கள்கூடப் பிறந்தபாலன் பிரமதேவன் விதித்தவாறுப் பிறந்து இருபத்திநாலுமணி நேரத்திற்குள் வுயிர் துறந்துவிடும், எ-று. (4)

பாறெனக் காரிநின்ற மனைக்கு நான்கில்
பரிவாகச் செவ்வாயும் பரிந்துநிற்க
கூறெனத் தீக்கோட்க ளேறிநின்ற
குடிமனை யாமதற்கு குலவிநான்காய்

நேறெனச் சுபர்களுமே யதனைத்தாமும்
நீடியே பார்க்காமற் ருனிருக்க
கோறெனக் குவலயத்திற் பிறந்தபாலன்
குறித்தொருநாள் நில்லாது மரணங்கூறே.

(இ-ள்) ஆயுட்காரகனுகியச் சனி நின்ற ராசிக்கு நான்காம் ராசியில் அங்காரகன் நிற்க, தீக்கோட்கள் நின்ற மனைக்கு நான்கில் சுபர்கள் நின்றுயிருக்க, அவர்கள் பார்வையில்லா திருக்கப் பிறந்தபாலன், பிறந்து ஒருநாளைக்குள் இறந்து விடும், எ-று. (5)

ஆமென வொன்பதுபே றேறிநின்ற
அறையுமோர் நிலையதனி லொருமையில்லாத்
தாமெனத் துன்பமாய் யெட்டுக்கெட்டாய்
தக்கபடித் தோன்றியே தாங்கள் நிற்க
போமென யாட்சியுச்ச மாகத்தானும்
பொருந்தியே யிருந்திடிலுந் தீமையாகும்
நாமென யிவ்வடைவாய் நவக்கோள் நிற்க
நாடிவந்தப் பாலனுயிர் நட்டமாமே.

(இ-ள்.) ஒன்பது கிரகங்களும் நின்ற நிலையாகிய ராசியில் ஒருமையானது இல்லாமல், துன்பமாகிய எட்டுக்கெட்டாம் ராசியாக ஏறிநிற்கினும், ஆட்சி யுச்சமாக விருக்கினும், தீமையேயாகும், நற்பலன் ஒன்றுங் கொடார்கள், ஆயினும் இவ்வடைவாகக் கோட்கள் நிற்கப் பிறந்தபாலன் உடனே மரணமாகப் போய்விடும், எ-று. (6)

ஆகவே யாட்சியா மிருப்பிடத்துக்
காகியே யவர்பின்பு நால்வர் நிற்க
பாகமா யல்லது கேந்திர கோணம்
பரிவாக யவர்களுமே பண்பாய்வாழ
தாகமா யிவ்வடைவாய் நவக்கோள் நிற்க
தரணிதனி லேபிறந்தப் பாலன்ருனும்
ஏகவே யிப்புவியில் நில்லாமற்ருன்
ஏகுவன் மோட்சமென யியம்புவாயே.

(இ-ள்.) ஆட்சியாகிய கிரகம் நின்ற ராசிக்கும், அவர்க்குப் பின்னும், நான்கு கோட்கள் நிற்க, அல்லதுக் கேந்திரகோணம் ஏறிநிற்கப் பிறந்தபாலன் பிறந்தும் இப்பூமியில் நில்லாமற் மோக்ஷத்திற்குப் போய்விடும், எ-று. (7)

வாயெனக் குருவுக்கெட் டாகமந்தன்
வன்பிறை தனக்கேழில் புதனுர் நிற்க
ஆயென யறியவர்க் கெட்டிற்பாம்பு
யமர்ந்திட வெள்ளிக்கெட் டாகபூமன்
நேயென யிவராட்சி யுச்சமாக
நிற்கினு மொருசுபமு மில்லையில்லை
சாயெனச் சார்பாகப் பிறந்தபாலன்
சாற்றுவாய்ச் சாவதுவும் நிஜமேகண்டாய்.

(இ-ள்.); வியாழபகவான் நின்ற ராசிக்கு எட்டாம் ராசியில் சனியிருக்க, சந்திரன்நின்ற ராசிக்கு ஏழாம் ராசியில் புதன்நிற்க, புதன் நின்ற ராசிக்கு எட்டாம் ராசியில், பாம்புகள் நிற்க, சுக்கிரபகவான் நின்ற ராசிக்கு எட்டாம் ராசியில் அங்காரகன் நிற்க, இவ்வண்ணமாக நின்ற கிரகங்கள் ஆட்சியுச்சம் பெறினும் யாதொரு சுபமு மில்லையாம், சரியாகிய ராசியாக விருக்கினும் பாலன் பிறக்கில் மரணமாகிவிடும். ()

கண்டிட லக்கினமா மதற்குத்தானும்
காணயிருப் பக்கமதிற் பாபர்நிற்க
விண்டிட லக்கினத்தில் பாபர்தாமும்
விளங்கவே னின்றிடில் பாபியாக
உண்டிட யவர்க்கேழிற் பாவியேதான்
உற்றிட ஜென்மாதிப் பாவியாக
பண்டாக யிவராட்சி யுச்சமாகப்
பலனுறினும் பிறந்தசுத னிறந்துபோமே.

(இ-ள்.) லக்கினத்திற்கு இரண்டுபக்கமும் பாபர்களிருக்க, லக்கினத்தில் பாபிகளிருக்க அம்மனையோன் பாவியாக அவர்க்கேழிலும் பாவிகளிருக்க, ஜென்மாதிபதியும் பாவியாக இவ்வாறாகியக் கிரகங்கள் ஆட்சியுச்சம் பெறினும் பிறந்தபாலன் இறந்துபோகும், எ-று. (9)

போமெனவே ஜென்மாதி யீனமாக
  பொருந்தியே கதிரவனு மேழில்நிற்க
மாமெனத் தாமவரு மஸ்தமிக்க
  மருவிய மங்களனு மிலர்க்கேழாக
தாமெனத் தானவரும் பகையேசேர
  தக்கபாஷ்கரன்மகனும் யேழில்நிற்க
நாமென யவனெதிர்க்கப் பிறந்தபாலன்
  நங்கையரே புவியைவிட் டகலுமென்னே.

(இ-ள்.) இலக்கினதிபதி பெலயீனமாகவிருக்க, அவர்க்கேழாம் ராசியில் சூரியனிருந்து அஸ்தமிக்க, அவர்க்கு ஏழாம்ராசியில் அங்காரக னிருக்க, அவர்களுடன் பகையாகியக் கோட்கள்சேர சூரியன் சுதனாகிய சனி அவர்க் கேழாக நின்று பார்க்கப் பிறந்த பாலன் இறந்து விடும். எ-று. (10)

என்னவே கேந்திரத் திரிகோணத்தில்
  ஏறியே பவுமனவ னொருவன்நிற்க
கன்னவே யைந்துநால் காரிபாம்பு
  கலந்துற யவர்க்குநா லிரவிநிற்க
வன்னவே யவர்களுடன் சுபருஞ்சேர்ந்து
  வலமிட முறப்பார்வை யன்றிலாம
பன்னவே நஞ்சுட னுதித்தபாலன்
  பாறைவிட் டகலுமன் றிறவுதன்னில்.

(இ-ள்.) கேந்திர திரிகோணத்தில் சகோதரக்காரகனாகிய அங்காரகன் தனியாகவிருக்க, லக்கினத்திற்கு ஐந்தாம் ராசியிலும், நான்காம் ராசியிலும் ஆயுட்காரகனாகியச் சனியும், ராகு, அல்லது கேதுவாகக் கலந்து நிற்க, அவர்களுக்கு நான்காம்ராசியில் சூரியனிருக்க இவர்களுடன் சுபர்கள் சேர்ந்து வலமிடமாக நின்று பார்வைப்பாராதிருக்க நஞ்சுடன் பிறந்தபாலன் அன்றிறவு தன்னிலேதானே மரணமாகும். ()

தன்னியக் கதிரோனு மெட்டில்வாழ
  தான்விரைய மரவோடுச் சனியிருக்க
பன்னிய நான்கிற்சேய் தனியாய்நிற்க
  பண்பானச் சுபர்பார்வை யில்லாதாக

மன்னியப் பெருமையது நலிந்துநிற்க
    மானிலத்தி லேபிறந்தக் காளைதானும்
உன்னிய யன்றிறவு தன்னிலேதான்
    கூற்றநூர்ப் போகுமெனக் கூறுவாயே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு எட்டாம் ராசியில் சூரியபகவானிருக்க, பனிரண்டாமிடமாகிய விரையஸ்தானத்தில் ராகு, அல்லது கேதுவுடன் சனி கூடியிருக்க லக்கினத்திற்கு நாலாம் ராசியில் அங்காரகன் ஒருவனுகத் தனித்திருக்க, பெரியோராகிய சுபக்கோட்கள் பார்வையன்றியிருக்கப் பிறந்தகாளை அன்றிறவே நமனூர் போய்ச்சேரும். ()

கூறவே ழோறிடந்தே சனியேமேவ
    குறிந்தயெதி ரானிடத்தி லிறவினிற்க
பேறவே பிறைபொன்னே டொற்றுவாழ
    பூமிசுதன் பாம்போடுக் கூடினிற்க
வாளவே வாழுஞ்சுபக் கோட்கடாமும்.
    வலமிட மாய்னிற்கப் பார்வையன்றி
கோறவே குவலயத்திற் பிறந்தபாலன்
    கூற்றநா ரன்றிறவே போவான்சொல்லே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு ஏழாம் ராசியோருடைய மனையில் ஆயுட்காரகனுகியச் சனிபகவானிருக்க, எதிரியுடமனையில் சூரியனிருக்க, தேய்பிறைச் சந்திரன் குருவுடன் சேர்ந்திருக்க, சகோதரக்காரகனுகிய அங்காரகன் பாம்புகளுடன் கூடிநிற்க, வாழ்வைத் தரும்படியானச் சுபக்கோட்கள் வலமிடமாக நின்று நோக்கில்லாமல் இருக்கப் பிறந்தபாலன் அன்று இறவிற்குனே அந்தக நூர்ப்போய்ச்சேரும். ()

சொல்லவே யுதையமதிற் செவ்வாய்பாம்பு
    சேர்ந்திட விரையமதிற் காறிதானும்
புல்லவே யிரவியுமே யெட்டிலேறப்
    பேசிடும் பின்னேழில் செவ்வாய்நிற்க
வல்லவே சுபர்நின்ற மனையோர்தாமும்
    வரியவே பெலயீன மாயிருக்க
நல்லவே குறிகண்ட போதேபாலன்
    நமநூற்துப் போவனென்ன நவிலுவாயே.

(இ-ள்.) சமேகாதரக்காரகனுகிய அங்காரகனும், பாம்பும் உதைய பிராசியிலிருக்க, விரையஸ்தானமாகிய பனிரண்டாமிடத்தில் ஆயுஷ் காரகனுகிய சனி நிற்க, பெலன் பெற்று பிதுர்க்காரகனுகியச் சூரியன் இலக்கினத்திற்கு எட்டாம் ராசியிலிருக்க, அவர்க்குப்பின் ஏழாம் ராசியில் அங்காரகன் நிற்க, சுபக்கிரகங்கள் நின்ற மனைக்கதிபர் ஈன பெலனுக விருக்கப் பிறக்கும் பாலனைக் குறிகண்டபோதே கூற்றனூர் போய் சேருமென்று மேலோர் கூறுகின்றனர், எ-று. (14)

வாய்க்கவே யுதையமதில் வழுத்தக்கேளாய்
வலுவரக சேயோடு யரவேதாழும்
செய்க்கவே மதியோடு மந்தன்ருனும்
ஜென்மாதி தனக்குபகை யாகினிற்க
நோய்க்கவே நல்லோர்கள் நோக்கேயின்றி
நுவலுமெட் டாதியுமே யஸ்தமிக்க
தோய்க்கவே புவிதனிலே பிறந்தகாளை
தோஷமா மவ்விரவே மரணமாமே.

(இ-ள்.) உதையவிராசியில் பெலன்பெற்று அங்காரகனும், பாம்பு களும் கூடிநிற்க, சந்திரனுடன், சனியும், ஜென்மாதிபதிக்குப் பகை யாகவிருக்க, சுபர்களுடையப் பார்வையில்லாதிருக்க, லக்கினத்திற்கு எட்டாமாதிபன் அஸ்தமிக்கப் பிறந்தக் குழவயானது அன்றிரவே மரணமாகும், எ-று. (15)

மாமெனத் தேய்பிறை யிந்துவோடு
மந்தனுங் கூடியே மருவிவரழ
தாமென பெலனற்று நோக்கேயின்றி
தானுமே யிரவியுடன் கூடினிற்க
ஏமெனச் சேய்மதி யொன்ருய்க்கூட
எட்டாதி யரவுடனே யாறெட்டாக
நாமென யிருக்கவே பிறந்தபாலன்
நமன்பதி யன்றிறவே யேகுமென்னே.

(இ-ள்.) தேய்பிறைச் சந்திரனும், சனியும் கூடிநிற்க, பெலனற்று நோக்கின்றி உதையாதிபதியிருக்க, சூரியனுடன் கூட, அங்காரகனும் சந்திரனும் கூடிநிற்க, இலக்கினத்திற்கு எட்டாமதிபன் பாம்புகளு

டன் கூடி ஆறு அல்லது எட்டாம் இராசியிலிருக்கப் பிறந்தபாலன் அன்று இராத்திரியே மரணமாகும், எ-று. (16)

என்னவே யுதையாதிப் பதியிஞேடு
எழில்மதி நின்றிடத்தா னஸ்தமிக்க
பன்னவே மதியுயிற் சனியிஞேடு
பார்க்கவே யரவோடு செவ்வாய்த்தானும்
மன்னுமவர்க் கெட்டாக மேவிவாழ
மருவுஞ் சுபர்பாரு திருக்கத்தானும்
துன்னுபுவி வந்தகாலை துரிதமாக
தோஷமா யன்றிறவே மரணமாகும்.

(இ-ள்.) உதையாதிபதியும், மதிநின்ற யிடத்தானும் அஸ்தமன மாகவிருக்க, சந்திரன் சனியுடன்கூட, ராகு கேதுகள் செவ்வாயுடன் கூடி அவர்க்கு எட்டாம் ராசியிலிருக்க, சுபக்கிரகங்களின் பார்வை யில்லாதிருக்கப் பிறந்த காலை உடனே மரணமாகப் போய்விடும். ()

ஆகவே யுதையமதில் நல்லோர் நிற்க
யதற்கெட்டிற் குருமதியு மமர்ந்துவாழ
பாகமா மதிநின்ற மனைக்குநான்காய்
பண்பிலாப் பாபர்களு மேறிநிற்க
தாகமாங் காரினின்ற விடத்தான்றானும்
தானுற விறையமொடு யெட்டாம்வீட்டில்
ஏகமா யிருக்கவுமே பிறந்தபாலன்
என்சொல்வே னன்றிறவே நமனூர்காணும்.

(இ-ள்.) உதையவிராசியில் சுபக்கிரகங்களிருக்க லக்கினத்திற்கு ஆறும் ராசியிலும், எட்டாம் ராசியிலும் வியாழனும், சந்திரனுமிருக்க சந்திரனின்ற ராசிக்கு நான்காம் ராசியில் பாபர்கள் பெலன்பெற்றிருக்க, சனி நின்ற ராசிக்கு பனிரண்டாம் ராசியாகிய விரையத்திலும் எட்டாம் ராசியிலும் சனி நின்ற ராசியாதிபதி யிருக்கப் பிறந்தபாலன் பிறந்த உடனே இறந்துவிடும், எ-று. (18)

காணவே நல்லோர்கள் நால்வர்பாபர்
கருதியே நடுவாக நிற்கமற்றோர்
தோணவே யுதையாதி யோடுசோமன்
சுகமின்றிப் பாபரைக் கிட்டிவாழ

பூணவே யுதையாதி யெட்டாமாதி
பொருந்தியே யெட்டென்னு மிடத்தில்நிற்க
நாணவே நானிலத்திற் பிறந்தபாலன்
நங்கையே யன்றிறவே நமனூர்ச்சேரும்.

(இ-ள்.) நற்கோளாகிய சுபர்கள் நால்வரும் பாபரும் நடுநடுவாக ராசிகளில் நிற்க, மற்றக் கோட்களும் உதையாதிபதியும், சந்திரனும், சுகமில்லாமல் பாபருடன் கூடிநிற்க, உதையாதிபதியும், எட்டாமதிபனும் கூடி எட்டாமிடத்திலிருக்கப் பிறந்த காளையானது அன்றிறவே மரணமாகும், எ-று. (19)

சேரவே மதிநின்ற யிராசிக்கெட்டோன்
செப்பிடும் பாபருமே யுதையம்நிற்க
கூறவே மதியிடத் தானும்பாபர்
கூடியே மதிக்கெட்டா மிடத்தேநிற்க
நேரவே தேவகுரு வியாழன்றானும்
நீடியே யிவர்களையும் பார்க்காநிற்க
கோரவே குவலயத்திற் பிறந்தபாலன்
குறிக்குமைந்து நாழிகையில் மரணமாமே.

(இ-ள்.) சந்திரன் நின்ற விராசிக்கு எட்டாம் ராசியாதிபதியும், பாபக்கோட்களுமாகக் கூடி உதையவிராசியிலிருக்க, சந்திரனின்ற இடத்தானும் பாபருங்கூடி சந்திரனுக்கு எட்டாம் ராசியிலிருக்க இவரை வேதமூர்த்தியாகிய குருபகவான் பாராமலிருக்கப் பிறந்தபாலன் பூமியைவிட்டு ஐந்துநாழிகைக்குள் கூற்றநூர் போய்ச்சேரும், எ-று.

மாகவே யெட்டுடனே யெட்டோன்கூடி
மருவியே யிருபுறமும் பாவியாக
வாகவே துயருற்ற யெட்டுக்கெட்டில்
காரியு மாரலுமாய் கலந்துநிற்க
போகன வியாழனுமே யவர்கடம்மை
பொருந்தியே யம்மனையைப் பாராநிற்க
தாகனத் தரணிதனில் பிறந்தபாலன்
தானைந்து நாழிதனிற் றனிக்குஞ்சீவன்.

(இ-ள்) இலக்கினத்திற்கு, எட்டாம் ராசி யாதிபனும், எட்டாம் ராசிக்கு எட்டோனும் கூடிநிற்க, அவர்க்கு இருபுறமும் பாவிகளிருக்க, எட்டாம் ராசியுடன், அதற் கெட்டாம்ராசியில் சனியும், அங்காரகனும் கலந்துநிற்க, இவர்களைக் குரு பாராமலிருக்கப் பிறந்த பாலனுக்கு ஐந்து நாழிகையிற் குள்ளேதானே ஆவியானது பறந்துவிடும்.

பறக்கவே பனிரண்டோ னெட்டோன்கேந்திரம்
பதிந்திட யம்மனையோ ராறெட்டேற
சிறக்கவே சேருதா ருடனே தானும்
சசிபதியும் ஜென்மனுடன் சேர்ந்திருக்க
இருக்கவே புகர்பொன் னுங் கலந்தேயேழில்
இருந்திட யிரவியா றெட்டில்மேவ
நிற்கவே புவிதனிலே பிறந்தபாலன்
பேசுமன் றிறவினிலே மரணமாமே.

(இ-ள்.) இலக்கினத்திற்குப் பனிரண்டாம் ராசியாதிபதியும், எட்டாம் ராசிக்கதிபனும், கேந்திரமேறியிருக்க, இவர்கள் ஏறிய மனைக்கதிபர்கள் இலக்கினத்திற்கு ஆறும் ராசியினும், எட்டாம் ராசியிலும், யிருக்க, சேரத்தகாதப் பாவியர்களுடனே சந்திரகுருவும், ஜென்மாதிப்பதியுடன் சேர்ந்திருக்க, சுக்கிரனும், வியாழபகவானும், கலந்து, ஏழாம் ராசியிலிருக்க, சூரியன் எட்டாம் ராசியிலும் அல்லது ஆறும் ராசியிலிருக்கப் பிறந்தபாலன் அன்றிறவே அந்தகனூர்போய்ச்சேரும்.

மாமென யிறவியுமே யுதையம்நிற்க
மருவியே பத்துரண்டில் கரிசேய்வாழ
ஏமெனப் பரவியே யிருக்கயிந்தும்
ஏறியே பாம்பவர்க் காறெட்டாக
தாமென யரவுபகை யானோர்க்காரில்
தக்ககுரு னிற்கமதிக் கெட்டாய்கேளாய்
கோமென வெட்டோனு மஸ்தமிக்க
குழந்தைபிறந் தாலுடனே யிறந்துபோமே.

(இ-ள்.) சூரியபகவான் உதைய விராசியிலிருக்க லக்கினத்திற்கு, பத்தாம் ராசியிலும், இரண்டாம் ராசியிலும் சனியும், அங்காரகனுமிருக்க, சந்திரனின்ற ராசிக்கு ஆறும்ராசியிலும், எட்டாம் ராசியி

லும், பாம்புகளிருக்க, பாம்புக்குப் பகையாகிய ஆறும் ராசியில், குரு பகவானிருக்க, சந்திரனின்ற ராசிக்கு எட்டாம் ராசியில், எட்டாமிடத்தோன் அஸ்தமனமாக விருக்கப் பிறந்தபாலன் உடனே மரணமாகும், எ-று. (23)

போகவே காரியுடன் பாபர்கூட
 பொருந்தியே யாறில்கரி யரவந்தானும்
ஏகவே யிந்துபுந்திக் கரிக்காராக
 எழில்குரு யிவர்க்காரு யெட்டில்மேவ
தாகமா முதையமதி பகையாயவற்கே
 தானிருக்கப் பொன்னிவரை நோக்கானிற்க
தோகமாங் குய்யத்துடன் கருவேமாண்டு
 தொல்லையாய் விளையுமே தோகைமாதே.

(இ-ள்.) ஆயுட்காரகனுகியச் சனிபகவானுடனே பாபர்கள் கூடி நிற்க லக்கினத்திற்கு ஆறும்ராசியில் சந்திரனும், பாம்புகளும், சனியுங் கூடியிருக்க, சந்திரனும், புதனும், சனிக்கு ஆறும்ராசியிலிருக்க, குரு இவர்க்கு ஆறும்ராசியிலும், எட்டாம்ராசியிலுமிருக்க, உதையத்திற்குச் சந்திரன் பகைவராக விருக்க, குரு, இவர்களைப் பாராதிருக்கப் பிறந்தபாலன் குய்யத்துடனே கருவானதுமாண்டு தொல்லையானது விளைவிக்கும், எ-று. (24)

மாதென யுதையாதிப் பதியோன்றானும்
 மருவிச் சூரியனுடனே கூடிமேவ [ன்
போதன பொன்னுக்கெட்டோன் மதிக்குயெட்டோ
 பொருந்திய மந்தனுறேன் பார்வைபாற்க
தோதென புந்திபாம்பு கரிக்குநாலாய்
 துலங்கபொன் புகற்கேழு மாகனிற்க
ஓதென யுலகினிலே பிறந்தபாலன்
 உடனேநமன் பதிசேரு மென்றுசெப்பே.

(இ-ள்) உதையாதிபதி சூரியனுடனே கூடினிற்க, குருவுனின்ற ராசிக்கு எட்டாம் ராசியோனும், சந்திரனின்ற ராசிக்கு எட்டாமிடத்தோனும் கூடியிருக்க அவரைச் சனியனும், ஆறுமிடத்தோனும் பார்க்க, புதனும், பாம்புகளும், சனி நின்ற ராசிக்கு நாலாம் ராசியிலிருக்க, வியாழபகவானும், சுக்கிரபகவானும், ஏழாம்ராசியில் நிற்க பிறந்தபாலன் உடனே பிறந்துவிடும், எ-று. (25)

செப்பவே சுபக்கோட்கள் நோக்கேயின்றி
சேர்ந்துதைய மதனிலே பாபர் நிற்க
ஒப்பவே பத்தோடு நான்காம்வீட்டில்
உற்றிட நிலமகனும் முடவன்றனும்
தப்பவே பத்தினிலே பாம்பிராமல்
தானிருக்க வெள்ளியுடன் வேந்தன்றனும்
மெப்பவே மேதினியிற் பிறந்தகாளை
மெலிந்தாவிப் பறந்துயெம நூறுபோமே.

(இ-ள்.) நன்மையைத் தரும்படியாகிய சுபக்கோட்கள் அன்றி உதைய விராசியில் பாபக்கோட்கள் நிற்க, லக்கினத்திற்கு பத்தாம் ராசியிலும், நான்காம் ராசியிலும், அங்காரகனும், சனியுமாகயிருக்க அந்த பத்தாம் ராசியில் பாம்புகள் இராமல் சுக்கிரனும், வியாழபகவானுமாக இருக்க இப்பூமியிற் பிறந்தபாலன் மெலிந்து ஆவியானது பறந்து அப்போதே இயமபுரம்போய் சேர்குவான், எ-று. (26)

போமென யீனமா யிருக்கச்சந்திரன்
பொருந்தி யீராறில் கதிர்பாம்பு நிற்க
தாமென மதிதனக்கு யெட்டிற்கேளாய்
தனியாக சனியொருவ னிருந்துவாழ
நாமென யிவர்களுக்கு நான்காம்வீட்டில்
நண்ணியே செவ்வாயு மிருந்துமேவ
ஆமென யம்புவியிற் பிறந்தகாளை
அன்றிறவே காலநூ றடுக்குங்காணே.

(இ-ள்) மாதுர்க்காரகனுகியச் சந்திரபகவான் பெலயீனமாகவிருக்க, லக்கினத்திற்கு பனிரண்டாம் ராசியில் பிதுர்க்காரகனுகிய சூரியனும், பாம்புகளுமாக கூடியிருக்க, சந்திரன் நின்ற ராசிக்கு எட்டாம் ராசியில் சனி ஒருவனுகத் தனித்திருக்க, அவற்கு நான்காம்ராசியில் சகோதரக்காரகனுகிய அங்காரகன் நிற்கப் பிறந்தபாலன் அன்றே மரணமாகிவிடும், எ-று. (27)

காணவே யிந்துநின்ற வீட்டிற்கேதான்
கருதிய வைந்தினிலே கதிரோன்நிற்க
பூணவே முடவனுமே யொன்பான்மேவ
பொருந்திய நிலமகனு மதியோடாக
தோணவே குருபதியும் விரையமேற
தோஷமாம் பாம்புகளு மேழில்நிற்க
நாணவே நானிலத்திற் பிறந்தகாளை
நங்கையே யன்றிறவே சாகுமென்னே.

(இ-ள்.) சந்திரனின்ற ராசிக்கு ஐந்தாம்ராசியில் சூரியனிருக்க, ஆயுஷ்காரகனுகியச் சனியானவன் லக்கினத்திற்கு, ஒன்பதாம் ராசியிலிருக்க, அங்காரகன், சந்திரனேடுக் கூடிவாழ, குரு லக்கினத்திற்குப் பனிரண்டாம் ராசியிலிருக்க, பாம்புகள் ஏழாம் ராசியிலிருக்கப் பிறந்தபாலன் தீம்பாய் அன்றிறவே மரலியூர் போய்சேரும், எ-று. ()

என்னவே கேந்திர கோணத்தோர்கள்
ஏறியே யாறெட்டுத் தனிலேவாழ
பன்னவே பனிரண்டு யெட்டுள்ளோர்கள்
பண்பாகக் கேந்திர கோணம்நிற்க
மன்னிய யிவர்களுமே மறையக்கேளாய்
மதியோடு யீனருமே யாயிருக்க
கன்னியே காசினியிற் பிறந்தகாளை
காலநூர் தானுடனே யேகுமாதே.

(இ-ள்.) கேந்திரத் திரிகோணத் ததிபர்கள் லக்கினத்திற்கு, ஆறும் ராசியினும், எட்டாம் ராசியினும் இக்க லக்கினத்திற்கு பனிரண்டாம் ராசியாதிபனும், எட்டாம் ராசியாதிபனும் கேந்திர திரிகோணராசியில் ஏறி நிற்க. இவர்கள் சந்திரனேடு பெலயீனமாக விருக்கப் பிறந்தபாலன் பூமியில் விழுந்தவுடனே ஆவியானதுப் பறந்துக் காலனுடையப் பதியைப்போய்சேரும் என்று மேலோர்கள் கூறுகின்றனர்.

காணவே யெட்டிற்கு யெட்டாம்வீட்டில்
கருதியே யிருந்தவனும் பாவியாக
பூணவே சோமனேடுக் காரிதானும்
பொருந்தியே யவர்க்கேழில் பேரயிநிற்க

தோணவே யிறவிக்கு நான்கிற்கேளாய்
  தொகுப்பாக பொன்சுங்க னிவர்கள்மேவ
வேணவே யிவ்வடவாய் நலக்கோள் நிற்க
  வாகாக வுதித்தசுதன் மரணமாமே.

(இ-ள்.) லக்கினத்திற்கு எட்டாம் ராசிக்கு எட்டாம் ராசியிலிருந்தவன் பாவியாக அவற்கு ஏழாம்ராசியில் சந்திரனும், சனியுமாகயிருக்க, சூரியன் நின்ற ராசிக்கு நான்காம் ராசியில் குருவும் சுக்கிரனும் இருக்கப்பிறந்தபாலன் பிறந்தவுடனே மரணமாகிவிடும், எ-று. (30)

ஆமென யெட்டிற்கு யாறும்வீட்டில்
  இருந்தவன் சனிபகவா னவனேயாக
நாமென நான்கினிலே செவ்வாய் நிற்க
  நண்ணியே யிவர்தனக்கு நான்கிற்கேளாய்
தாமெனப் பொன்னவனோ டிறவிதிங்கள்
  தயவாக வொட்டுற வாகநிற்க
போமெனப் புவிதனிலே பிறந்தபிள்ளை
  பொருந்தாது யொருநாளில் மரலியூர்போம்.

(இ-ள்.) லக்கினத்திற்கு எட்டாம் ராசிக்கு ஆறும் ராசியில் சனியும் ஏறியிருக்க, லக்கினத்திற்கு நான்காம் ராசியில் அங்காரகனிருகக, அவற்கு நான்காம் ராசியில் குருவும், சூரியனும், சந்திரனும், இவர்கள் ஒட்டு உறவாகவிருக்கப் பிறந்தபிள்ளை ஒருநாளிலே தானே மரணமாகிவிடும், எ-று. (31)

போகவே பாம்புநின்ற யிராசிக்கேதான்
  பொருந்தியே நான்கினிலே சனியேநிற்க
ஏகவே யிவர்களுக்குப் பத்திற்கேளாய்
  இருந்திடக் கதிர்சுங்கன் புந்திமூவர்
ஆகவே யதற்கேழி லறையக்கேளாய்
  அம்புவி யோடுமே செவ்வாய் நிற்க
தாகமாய்த் தரணிதனிற் பிறந்தகாளை
  தக்காது மரணமது வாகும்பாரே.

(இ-ள்.) பாம்புகள் ஏறினின்ற ராசிக்கு நான்காம் ராசியில் சனி யிருக்க, அவற்குப் பத்தாம் ராசியில் சூரியனும், சுக்கிரனும், புதனு மாக இவர்கள் மூவரும் இருக்க, அவற்கு ஏழாம்ராசியில் சந்திரனும் அங்காரகனும், இருக்கப்பிறந்தபாலன் அன்றே மரணமாகிவிடும், எ-று

பார்க்கவே மதிக்காரில் மந்தன் நிற்க
 பரிவாக யவர்தனக்கு யேழிற்கேளாய்
எற்கவே யதிற்கோண மாகச்செவ்வாய்
 ஏறியே யிஷ்டமுட னிருக்கத்தானும்
கோற்கவே குருக்காரி லிறவிபுந்தி
 கூடியே தாமலருங் குலவிநிற்க
பூற்கவே புவிதனிலே பிறந்தபாலன்
 போகுமே திங்களாறிற் புவியைவிட்டே.

(இ-ள்.) சந்திரனின்ற ராசிக்கு ஆறும் ராசியில் சனிநிற்க, அவ ற்கு ஏழாம் ராசி யதுவே திரிகோணமாக செவ்வாயிருக்க, வியாழன் நின்ற ராசிக்கு ஆறும் ராசியில் சூரியனும், புதனுமாகச் சேர்ந்திருக் கப் பிறந்தபாலன் பூமியின்மீது ஆறுமாதம் வரையிலுமிருந்து மரண மாகிவிடும், எ-று. (33)

விட்டென யெட்டினிலே சனியேநிற்க
 விளங்குமூன் றினில்ரவியும் செவ்வாய்வாழ
கட்டென வதற்கைந்திற் பாம்புநிற்க
 கலந்துமே யவருடனே மதியேவாழ
பட்டெனப் பதிதனக்கு யீராறுகப்
 பரிவாகப் புகரரசன் புந்திமேவ
தொட்டெனத் தொல்புவியிற் பிறந்நபாலன்
 தோஷமாம் சாகுமெனத் தொகுத்திடாயே.

)இ-ள்.) லக்கினத்திற்கு எட்டாம் ராசியில் சனியணிருக்க, மூன் றுமிடத்தில் சூரியனும், அங்காரகனுமிருக்க, அவற்கு ஐந்தாம் ராசி யில் பாம்புகளிருக்க, அவர்களுடன் சந்திரன்கூட குருநின்ற ராசிக் குப் பனிரண்டாம் ராம்யில் சுக்கிரனும், குருவும், புதனும் இவர்கல் சதிரமாகவிருக்கப் பிறந்தபாலன் மரணமாகிவிடும், எ-று. (34

தொகுக்கவே சோமநா ரிருந்தவீட்டில்
துலங்கிடக் காலியுமே யேறிநிற்க
வகுக்கவே சோமநாற் குலமாயாறில்
வருந்தீயர் குருவோடுச் சுங்கன்வாழ
பகுக்கவே யிவர்தமக் குரண்டிற்கேளாய்
பணியோடுப் புந்தியுமே கூடிநிற்க
புகுக்கவே புவிதனிலே பிறந்தபாலன்
பொருந்தாம லாவிவிட். டேருமென்னே.

(இ-ள்.) சந்திரபகவானிருந்த ராசியில் சனியிருக்க, சந்திரனின்ற ராசிக்கு ஆறும் ராசியில் பாபரும், வியாழனும், சுக்கிரனுமாகவிருக்க, இவர்களுக்கு இரண்டாம் ராசியில் பாம்புகளும், புதனுங்கூடியிருக்கப் பிறந்தபாலன் உடனே மாணமாகிவிடும், எ-று. (35)

என்னவே யெட்டோனு மிருந்தவீட்டில்
இரவியுடன் பாம்புகளுங் கூடிநிற்க
மன்னவே யவர்தனக்கு யேழிற்கேளாய்
மகிட்சியுடன் செவ்வாயும் சேர்ந்துவாழ
பன்னவே காரிநின்ற ராசிக்காரில்
பரிவாகச் சந்திரனு மேறிநிற்க
கன்னியச் சுபருமே நீசமாகக்
காலைபிறந் தேயுடனே மறிக்கும்பாரே.

(இ-ள்.) லக்கினத்திற்கு எட்டாம் ராசியில் சூரியனும், பாம்புகளுங் கூடினிற்க, அவற்கு ஏழாம் ராசியில் அங்காரகன் ஏறிநிற்க சனி நின்ற ராசிக்கு ஆறும் ராசியில் சந்திரனிருக்க, சுபக்கிரகங்கள் நீசமடைந்திருக்கப் பிறந்தபாலன் உடனே இறந்துபோய் விடுகும். எ-று.

பார்க்கவே யெட்டோனும் நீசமாக
பறவியக் கதிர்பின்னே னஸ்தமிக்க
வார்க்கவே யுதையாசி பதியோன்றானும்
வாழ்மனைக்கு வலமதுவாய் செவ்வாய்கூட

ஏற்கவே யரவோடுக் காரிதானும்
  எழின்மதிக் கேழினிலே யிருந்துவாழ
பூற்கவே ரண்டினிலே புந்திசுங்கன்
  பொழிந்திட பிறந்தபிள்ளை யிறந்துபோமே.

(இ-ள்.) லக்கினத்திற்கு எட்டாம் ராசியாதிபன் நீசமடைந்திருக்க, நாலாம் ராசிக்குப் பின்னாக நின்றோன் அஸ்தமிக்க, உதையாதிபதி நின்ற ராசிக்கு வலமாக அங்காரகன் கூடியிருக்க, பாம்புகளும், சனியும் சந்திரனுக்கு ஏழாம் ராசியிலிருக்க, லக்கினத்திற்கு, இரண்டாம் ராசியில் புதனும், சுக்கிரனுமாகக் கூடியிருக்கப் பிறந்தபாலன் உடனே இறந்துவிடும், எ-று. (37)

போமெனப் பொன்னுக்கு வெட்டிற்காரி
  பொருந்திடக் குருமதிக் காரிற்பாம்பு
தாமெனப் பிறருக்கு மாறோன்சேய்க்கும்
  தான்வாழும் பின்னோனு மஸ்தமிக்க
காமெனக் கணக்கனுர் நீசமாகி
  காணவே மகிட்சியில் லாமல்நிற்க
நாமென நானிலத்திற் பிறந்தபிள்ளை
  நாசமாய்க் கருவற்றுப் போகுமாதே.

(இ-ள்.) வியாழன் நின்ற ராசிக்கு எட்டாம் ராசியில் சனியிருக்க வியாழனுக்கும், சந்திரனுக்கும், ஆறும் ராசியில் பாம்புகளிருக்க, மற்ற கிரகங்களுக்கும், லக்கினத்திற்கு ஆறும் ராசியில் நின்ற அங்காரகனுக்கும், பின்புறமாக நின்றக் கோட்கள் அஸ்தமிக்க, புதபகவான் நீசமடைந்து சுபர் பாராதிருக்க பிறந்த பிள்ளையானது அழிந்து போகும், எ-று. (38)

மாதென கதிருதையத் திற்கேயெட்டோன்
  மருவியே யுதையமதி லேறிநிற்க
ஏதென நான்கினிலே யியம்பக்கேளாய்
  எழில்காரிச் செவ்வாயு மிருந்துவாழ
ஓதென வெதிரெதிர்ச் சுபரில்லாமல்
  இருந்திட யிவ்வாறு யடைவதாக
போதெனப் புவிதனிலே பிறந்தபிள்ளை
  பொருந்தவொரு நாள்நில்லாமற்போகுமென்னே

(இ-ள்.) சூரியன், உதையமாகநின்ற ராசிக்கு எட்டாம் ராசியாதிபன், உதைய ராசியிலிருக்க, அந்த உதைய ராசிக்கு நாலாம் ராசியில் சனியும், அங்காரகனுமாக விருக்க, இவர்களுக்கு எதிரில் சுபக்கிரகங்கள் இல்லாமலிருக்க பிறந்த பிள்ளை பூமியின்மீது ஒருநாள்கூட நில்லாமற் போய்விடும், எ-று. (39)

என்னவே பரிதிக்கு யெட்டோனேழில்
இருந்திட யவரோடுச் சனியுங்கூட
உன்னவே யுதையாதி யஸ்தமிக்க
ஓதக்கேள் சோமனுர்க் கெட்டோனோடு
பின்னவே பின்புடன் மதியுங்கூடி
பேசிய யிவ்வடைவாய் நவக்கோள் நிற்க
பன்னவே பாரினிலே பிறந்ததள்ளை
பார்க்கவன் றிறவினிலே மரணமாமே.

(இ-ள்.) சூரியன் நின்ற ராசிக்கு எட்டாம் ராசியாதிபன், லக்கினத்திற்கு, ஏழாம் ராசியிலிருக்க, அவருடன் சனிகூட, உதையாதிபதி அஸ்தமிக்க, சந்திரன் நின்ற ராசிக்கு எட்டாம் ராசியதிபதியும், சந்திரனும் சேர்ந்து வாழப்பிறந்த பிள்ளையானது அன்றிறவே மரணமாகப் போயிவிடும், எ-று. (40)

மாமென மதியொடுப் புந்திசுங்கன்
மருவியே கன்னியுற மந்தன் நான்காய்
நாமுறப் பாபருமே யிரண்டில் நிற்க
தக்கதோர்க் கதிரவனும் விரையமேற
நாமெனச் செவ்வாயும் பத்தில் நிற்க
நண்ணியே யாறினிலே வியாழன்வாழ
போமெனப் புவிதனிலே பிறந்தபிள்ளை
பொருந்தாமற் சாகுமெனப் புகலுவாயே.

(இ-ள்.) சந்திரனும், புதனும், சுக்கிரனும், கூடி கன்னியாவிராசியில் நிற்க, லக்கினத்திற்கு, நான்காம் ராசியில், சனியிருக்க, லக்கினத்திற்கு, இரண்டாம் ராசியில் பாபர்களிருக்க, லக்கினத்திற்குப் பனிரண்டாம் ராசியாகிய விரையஸ்தானத்தில், சூரியனிருக்க, லக்

கினத்திற்கு, பத்தாம் ராசியில் அங்காரகனிருக்க, லக்கினத்திற்கு ஆறும் ராசியில் குருவிருக்கப் பிறந்தபிள்ளை சந்தேக மில்லாமல் உடனேசாகும், எ-று. (41)

புகலவே லக்கினத்திற் காரிநிற்க
பொருந்தியே யவரோடு யரவங்கூட
இகலவே யினியகுரு யேழில்நிற்க
இயம்பக்கே ளிவர்க்குநால் பூமன்வாழ
தகலவே வெய்யோனுந் தனியாய்நிற்க
தனக்கேழிற் சோமநார் தங்கிவாழ
அகலவே யவனிதனிற் பிறந்தபிள்ளை
அறைகுவா யிரண்டுதிங்கட் குள்ளேசாமே.

(இ-ள்.) ஜென்மலக்கினத்தில் சனிபகவானிருக்க, அவருடன் பாம்புகள் கூட, லக்கினத்திற்கு, ஏழாம் ராசியில் வியாழபகவானிருக்க, இவர் நின்ற ராசிக்கு நான்காம் ராசியில் அங்காரகன்வாழ, சூரியன் தனியாக ஒரு ராசியிலிருக்க, அவர் நின்ற ராசிக்கு ஏழாம் ராசியில் சந்திரனிருக்கச் சுபக்கிரகம் நோக்கின்றிப் பிறந்தப் பிள்ளையானது இரண்டுமாதத்திற் சாகும், எ-று. (42)

சாமெனக் கணக்கனுர்க் காரியோடு
சார்பாக் கதிரவனு மேழில்நிற்க
தாமெனப் புந்திக்கு யேழிற்றனும்
தனத்தோனும் சோமனு மாகச்சேர
பாமெனப் பொன்னவனுக் கேழிற்கேளாய்
பூமனும் வெள்ளியுமாய்ப் பொருந்திவாழ
நாமென நானிலத்திற் பிறந்தபிள்ளை
நவிலுவாய் வுடன்சாவ துண்மைதானே.

(இ-ள்.) புதனும், சனியும், சூரியனும், லக்கினத்திற்கு ஏழாம் ராசியிலிருக்க புதன் நின்ற ராசிக்கு ஏழாம் ராசியில் தனாதிபதியும் சந்திரனும்வாழ, குரு நின்ற ராசிக்கு ஏழாம் ராசியில் அங்காரகனும், சுக்கிரனுமாக விருக்கப் பிறந்தவுடனே சாவது உண்மையென்பாய். ()

தானென வருமுதையம் விரையமோடு
    தானுகு மாறெட்டில் மதியேநிற்க
நானென வுதையாதிப் பதிக்குயேழில்
    நண்ணியே சனியொருவ னிருந்துவாழ
ஏனெனச் சனியவனு மேழில்மேவ
    இயம்பவே செவ்வாயு மாரில்நிற்க
தேனெனத் திகழ்புவியிற் பிறந்தபாலன்
    தீதாக மாண்டுவிடு மென்றுபேசே.

(இ-ள்.) உதைய விராசியினும், அல்லது அதற்கு பனிரண்டாம் ராசியினும், அல்லது ஆரும் ராசியினும், அல்லது எட்டாம் ராசியினும், சந்திரனிருக்க, உதையாதிபதிக்கு ஏழாம் ராசியில் சனியிருக்க, ல்க்கினத்திற்கு ஏழாம்ராசியில் சந்திரனிருக்க, லக்கினத்திற்கு, ஆரும் ராசியில் அங்காரகன் நிற்கப்பிறந்த பிள்ளை தாயினுடைய அல்லது பந்துக்களுடைய அஜாக்கிரதையினால் உடனே இறந்துபோய் விடும், எ-று. (44)

பேசவே சனிநின்ற யிராசியை நல்லோர்
    பாராமல் கதிர்பூமனிரு பக்கம்நிற்க
வாசமா யெட்டினிலே பாம்பேநிற்க
    வம்புலிக்கு யேழினிலே சனியேவாழ
நேசமாய் சுபரிறவி விடையின்மேவ
    நிலையான வுதையாதி நீசமாகி
தோஷமாய் விரையமுறப் பிறந்தபிள்ளை
    தொல்லுலகில் நில்லாது மரணஞ்சொல்லே.

(இ-ள்.) சனி நின்ற ராசியைச் சுபர்பாராமல் சூரியனும், அங்காரகனுமாக நிற்க, லக்கினத்திற்கு எட்டாம் ராசியில் பாம்பு நிற்க, சந்திரன் நின்ற ராசிக்கு ஏழாம் ராசியில் சனியிருக்க, சுபக்கிரகங்களும், சூரியனுமாக ரிஷப விராசியிலிருக்க, உதைய இராசிக்கதிபதி நீசமாகி லக்கினத்திற்குப் பனிரண்டா மிடமாகிய விரைய ஸ்தானத்திலிருக்கப் பிறந்தபிள்ளை பிறந்தவுடனே வொரு கெண்டமென்று சொல்லவும்.

சொல்லவே யாறெட்டுக் குடையோர்தானும்
  சுத்தமுடன் சேர்ந்துமே தானும்வாழ
புல்லயம் புலியோடு இராஜன்சுங்கன்
  புகலக்கே ளாறெட்டுத் தன்னில்நிற்க
மல்லவே மறுத்தங்கு கூடாமற்றூன்
  மாரியே யுதையமதில் மருகிவாழ
வெல்லவே குருவும்விடை யேறிநிற்க
  விளங்கிய பாலனே ராண்டிற்சாமே.

(இ-ள்.) லக்கினத்திற்கு ஆறு மிராசி யாதிபதியும், எட்டாம் ராசியாதிபதியும் சேர்ந்து நிற்க, சந்திரனும், குருவும், சுக்கிரனும், லக்கினத்திற்கு ஆறும் ராசியிலும், எட்டாம் ராசியிலும், இருக்க அல்லது மறுத்துக்கூடாமல், உதைய விராசியில் ஏறி நிற்க, வியாழ பகவான் ரிஷபவிராசியி லிருக்கப் பிறந்தப்பிள்ளையானதற்கு ஒரு வருடத்தில் கெண்டமென்று சொல்லவும், எ-று. (46)

ஆமென யிரவிசுன் செவ்வாய்தானும்
  சார்பாக யிவர்நின்ற மனையாறோடு
சேமெனச் சேர்ந்துமே யுதையம்நிற்க
  செப்பக்கேள் சந்திரனும் யீனமாக
நாமென யாவுமே வுயிரெட்டாகி
  நண்ணியே யிவ்வடவாய் நவக்கோள்நிற்க
போமெனப் புவிதனிலே பிறந்தபாலன்
  பொருந்தாதுக் காலநூர்ப் போகுமென்னே.

(இ-ள்.) சூரியனும், சனியும், அங்காரகனும் நின்ற ராசியோர்கள் சேர்ந்து உதையவிராசியிலிருக்க, சந்திரன் பெலயீனமாக நிற்க, பாம்புகள், லக்கினத்திற்கு, ஆறும் ராசியினும், எட்டாம் ராசியினுமிருக்கப் பிறந்தபிள்ளை மூன்றுநாளைக்குள் கெண்டமென்று சொல்லவும், எ-று. (47)

மெள்ளவே பகையோரு மைந்தில்நிற்க
  மொழியுமவ் விடத்தாதி நான்கிலேற
துள்ளவே பகையோரும் நான்கிலேடும்
  பார்க்கவே யாறெட்டி லிருந்துவாழ

மன்னியே பொல்லாதக் கோளொன்றேதான்
மரையக்கே ளுதையமதி லேறிநிற்க
குன்னியே குவலயத்திற் பிறந்தபாலன்
கூறுநற் பருவமைந்திற் குலவிச்சாமே.

(இ-ள்.) பகையாகியக் கோட்கள் லக்கினத்திற்கு ஐந்தாமிடத்தில் நிற்க, அந்த ஐந்தாமிடத்தோனும் பாபரும், லக்கினத்திற்கு நான்காம் ராசியிலிருக்க, பகையோரும், நான்காமிடத் ததிபரும் லக்கினத்திற்கு ஆறும் ராசியினும், எட்டாம் ராசியினும் இருக்க, அன்றியும், ஓர் பகைக்கோள் உதைய விராசியிலேறி நிற்கப் பிறந்தபாலன் நல்லப் பருவவயதாகிய ஐந்தில் காலநூர்போய் சேரும், எ-று. (48)

போமெனவே யுதையத்திற் கிரண்டுபக்கம்
பொருந்தியே சனிசேயும் பாம்புநிற்க
தாமென யிந்துகுரு யெட்டிற்சேர
தங்கியே சுங்கனுமே மூன்றில்வாழ
காமெனக் கதிரவனும் நான்கில்நிற்க
காணவே யிவ்வடவாய் நவக்கோள்வாழ
நாமென நானிலத்திற் பிறந்தபாலன்
நாளிருபத் தேழுக்குள் நமநூற்போமே.

(இ-ள்.) உதைய ராசிக்கு இரண்டுபக்கம் சனியும், அங்காரகனும் ராகு, கேதுகளுமாக நிற்க, சுபக்கிரகம் பாராமல் சந்திரனும், வியாழனும், லக்கினத்திற்கு எட்டாம் ராசியிலிருக்க, சுக்கிரன் லக்கினத்திற்கு மூன்றுமிடத்திலிருக்க, சூரியன் நான்காம் ராசிலிருக்க இவ்வடவாக நவக்கோட்கள் நிற்கப் பிறந்தபாலன் இருபத்தியேழு நாளைக்குள் கெண்டம்வந்து நேருமென்று சொல்லவும், எ-று. (49)

வாயெனப் புகர்நின்ற யிராசிக்கேதான்
வாறெட்டுப் பனிரண்டில் வரையக்கோளாய்
காயெனக் கதிர்ச்செவ்வாய்க் கரிநிற்க
கனகனுர் நின்றதோர் ராசிக்கெட்டில்

பரயெனப் பாம்புக ளேறிநிற்க
பார்க்கமிந் துக்கேநான்கிற் சோமநிற்க
எயென யிப்புவியிற் பிறந்தபாலன்
இயம்புமோ ராண்டினிலே சாவான்சாற்றே.

(இ-ள்.) சுக்கிரன் நின்ற ராசிக்கு, ஆறும் ராசியிலும், எட்டாம் ராசியிலும், பனிரண்டாம் ராசியிலும் சூரியன், சனி, அங்காரகன், இவர்களிருக்க, குரு, நின்ற ராசிக்கு எட்டாம் ராசியில் இராகு கேது களிருக்க, சனி நின்ற ராசிக்கு நான்காம் ராசியில், சந்திரன் நிற்க இவ்வடவாக நவக்கோள் நின்று சுபக்கிரகம் பாராதிருக்கப் பிறந்த பாலன் ஒரு வருடத்தில் கெண்டம்வந்து நேரும், எ-று. (50)

சாற்றவே யேழோடு யுதையம்பத்தில்
சார்பாகத் தானிருக்க சனிசேய்தீயர்
ஏற்றவே யிந்துவுமே சுபர்களோடு
இருந்திடப் பாம்புகளு மெட்டிலேற
போற்றவே யிவ்வடவாய் நவக்கோள்நிற்க
புவிதனிலே வந்துதித்தப் பாலன்றானும்
தோற்றவே வாழ்வுடன் கூடமூன்று
வருடத்திற் குள்ளாவிப் பறக்குமென்னே.

(இ-ள்.) லக்கினத்திற்கு, ஏழாம் ராசியிலும், உதைய விராசியிலும், பத்தாம் ராசியிலும், சனிபகவானும், அங்காரகனும், பாபர் களுஞ் சேர்ந்திருக்க, சந்திரன் நல்லோர்களுடன் கூடி நல்ல இடத்தி லிருக்க, லக்கினத்திற்கு எட்டாம் ராசியில், ராகு கேதுகளிருக்கப் பிறந்தபாலன் நல்ல வாழ்வோடு கூடயிருந்து மூன்று வருடத்திற்குள் நமன்பதிச் சேர்வன், எ-று. (51)

என்னவே கோணத்தார் சேர்ந்துயெட்டில்
இருந்திடக் காரியுங் கூடிநிற்க
மன்னவே மதிபொன்னும் நாலுரண்டாய்
மருவியே யவர்களுமே யடுத்துவாழ

பன்னவே செய்ரண்டிற் பாம்புநான்கில்
பரவியே யிவ்வடவாய் நவக்கோள்நிற்க
உன்னியே யுலகுதனிற் பிறந்தபாலன்
ஒருநாளு மில்லாது மரணங்கூறே.

(இ-ள்.) திரிகோணுதிபதிகள் ஒன்றாகச்சேர்ந்து லக்கினத்திற்கு, எட்டாம் ராசியிலிருக்க, அவர்களுடன் சனியுங் கூடியிருக்க, சந்திரனும், வியாழனும், லக்கினத்திற்கு நாலாம் ராசியிலும், இரண்டாம் ராசியிலும் நிற்க, செவ்வாய் சந்திர லக்கினத்திற்கு, இரண்டாம்ராசியிலிருக்க, ராகு கேதுகள் சந்திர லக்கினத்திற்கு நான்காம்ராசியிலிருக்கப் பாலன் பிறந்தவுடனே மரணம், எ-று. (52)

கூறவே யாதித்தன் காரிசோமன்
கூடியே யிவர்களுமே குலவிநிற்க
கோறவே பொன்னேனு மெட்டில்மேவ
கோணமதிற் பாம்புகளு மேறிநிற்க
தேறவே தனமதிலே செவ்வாய்நிற்க
தெளிவாகச் சுக்கிரனுமவ ருடுவாழ
பேறவே யிவ்வடவாய்ப் பிறந்தபிள்ளை
போகுமே யாண்டிரண்டில் மரலியூறே.

(இ-ள்.) சூரியனும், சனியும், சந்திரனும், இவர்கள் மூவரும் கூடி லக்கினத்தில் நிற்க, குரு லக்கினத்திற்கு எட்டாம் ராசியிலிருக்க கோண விராசியில் ராகு, கேதுகளிருக்க, லக்கினத்திற்கு, இரண்டாம் ராசியாகிய தனஸ்தானத்தில் அங்காரகன் நிற்க, அவருடன் சுக்கிரனிருக்கப் சுபர் பாராதிருந்தால் பிறந்தபாலன் பூமியின்மீது இரண்டு வருடமிருந்து பின்பு மரணமாகிவிடும், எ-று. (53)

யூறெனக் காரிசேய் யெட்டில்வாழ
அரையும் லக்கினுதியோ டிறவிகூட
ஏறென யுதையமதி லியம்பக்கேளாய்
எட்டாதிப் பதியோனு மிருந்துமேவ
கூறென இவ்வடவாய் நவக்கோள்நிற்க
குவலயத்தி லேயுதித்தப் பாலன்றன்னை
நாமென்றுச் சொல்லாமல் நவிலக்கேளாய்
நமனுமே கொடுபோவ துண்மைதானே.

(இ-ள்.) அங்காரகனும், சனியுங்கூடி லக்கினத்திற்கு எட்டாம் ராசியிலிருக்க, லக்கினுதிபதியும், சூரியனும் கூடி நிற்க, உதைய விராசியில் லக்கினத்திற்கு எட்டாம் ராசி யாதிபனிருக்கப் பூமியின்மீதுப் பிறந்தவுடனே பாலனை எமன்கொண்டுபோவான் னென்பது நிட்சயமாகும், எ-று. (54)

தானெனச் சொல்லவுமே யின்னங்கேளாய்
தங்கியப் பிதுர் நவ நீசமூடம்
ஏனென சொல்லவுமே யைந்தெட்டுக்கே
எட்டோனும் யீனமா யிருந்துவாழ
தெனெனச் சந்திரப் பகவான் றனும்
தீதெனும் பகையுமே யாகிநிற்க
ஊனென யுலகுதனிற் பிறந்த பாலன்
ஒருநாளும் நில்லாது மரணஞ்சொல்லே.

(இ-ள்.) பிதுர்க்காரகனுகியச் சூரியனும், ஒன்பதா மிராசியாதிபனும், நீசமூடமாக விருக்க, ல்க்கினத்திற்கு, ஐந்தாம் ராசியாதிபனும், எட்டாம் ராசியாதிபனும் நின்ற மனைக்கு, எட்டாம் ராசியாதிபன் பெலயீனமாக விருக்க, மாதுர்க்காரகனுகிய சந்திரன் பகைபெற்றிருக்க பிறந்தப்பால்ன் பிறந்து ஒருநாளைக்குள்ளாகவே மரணமாகும்.

சொல்லவே மேற்சொன்ன யடைவாய்நிற்க
சுத்தமுட னேகுருவும் பாராறுகில்
எல்லவே யிப்புவியிற் பிறந்தகாலை
இயமன்பதி யேகுமே யிருந்திடாது
செல்லவே புகரவன் றம்மைத்தாமும்
சென்மாதிப் பதியோனுஞ் சிறந்துபாற்க
புல்லவே புவிதனிலே பிறந்தபாலன்
புகலொரு திங்களிருந் திறந்துபோமே.

(இ-ள்.) மேற்சொன்ன அடைவாக நவக்கோட்கள் நிற்க, அவர்களைக் குருவானவர் பாராமலிருக்கப் பிறந்தபாலன், பூமியின்மேல் நில்லாது, அன்றியும், களத்திரக்காரகனுகிய சுக்கிரனை, சென்மாதிபதி பார்க்கப் பிறந்தபாலன் பூமியின்மீது ஒருமாதம் வரையிலும் இருந்து நமன்பதி போய்விடும், எ-று. (56)

போமெனப் பிறையோடு கனகன்காரி
பொல்லாதப் பாபருமாய் நிற்கக்கூட
நாமென லக்கினத்திற் கெட்டோன்ருனும்
நலமதுக் குன்றியே யஸ்தமிக்க
தாமெனக் கேந்திரக் கோணந்தன்னில்
தக்கநல மின்றிகோ ளிருந்துவாழ
ஏமென யிப்புவியிற் பிறந்தகாளை
இருக்காது யேமநூ றேகுமென்னே.

(இ-ள்.) சந்திரனும், குருவும், சனியும், பாபக்கோட்களும் பிரியமாய் நின்றுக் கூட லக்கினத்திற்கு எட்டாமாதிபன் நல்லோர் பார்வையின்றி அஸ்தமிக்க, கேந்திர கோணங்களில் நின்ற சுபர்கள் லக்கினத்தைப் பாராதிருக்கப் பிறந்தபாலன் சாவது உண்மையாகும். ()

என்னவே காரிநின் றதற்குநான்கில்
இயம்பக்கேள் செவ்வாயும் பகையாய்நிற்க்
உன்னவே யிறவியுமே நான்கிலேதான்
ஒருவருடன் கூடாமல் தனித்துநிற்க
மன்னவே தேய்ந்தமதிக் கெட்டிலேதான்
மருவியே யுதையாதி பதியும்நிற்க
பன்னவே பார்தனிலே பிறந்தபாலன்
பகரலாம் சாகுமென் றுறைசெய்வாயே.

(இ-ள்.) ஆயுட்காரகனுகிய சனி நின்ற ராசிக்கு நான்காம் ராசியில், அங்காரகன் பகைபெற்று நிற்க, சூரியன் ஒருவருடனுங் கூடாமல் தனியாக நான்காம் ராசியிலிருக்க, தேய்பிறைச் சந்திரன் நின்ற விராசிக்கு எட்டாம் இராசியில் உதையாதிபதி நிற்கப் பிறந்தபால்ன் தப்பாமல் சாகுமென்று சொல்லவும், எ-று. (58)

மாதெனக் காரியுமே மரித்துநிற்க
மருவிபப் பொன்னவனு மஸ்தமிக்க
ஏதெனப் புகரோனும் நீசனுகை
இறவியுமே மதிதனக்கு யெட்டில்மேவ

போதெனப் பகையோர்கள் பொருந்திச்சேர
புகலக்கேள் பாம்புசே யுதையம்நிற்க
தோதெனத் தொல்லுலகிற் பிறந்தபாலன்
தோஷமாய்ச் சாகுமெனத் துணிவாய்ச்சொல்லே

(இ-ள்.) சனியானவன் வக்கிரித்து நிற்க, குரு அஸ்தமனமாக விருக்க, சுக்கிரன் நீசமடைந்து நிற்க, சூரியன் சந்திரனுக்கு எட்டாம் ராசியிலிருக்க, பகையோர்கள் ஒன்றாகக்கூட பாம்புகளும், அங்காரகனும், உதைய விராசியிலிருக்கப் பிறந்தபாலன் பூமியில் நில்லாது எ-று

சொல்லவே லக்கினாதி நீசனாகச்
சுத்தமுள ஜென்மாதி யஸ்தமிக்க
புல்லவே காரியோ டெட்டாமாதி
பொருந்தியே கூடியிவ ருதையஞ்சேர
வல்லதோர் செவ்வாயும் நான்கில்வாழ
வாகாகப் பாம்புமே யேழில்மேவ
வெல்லவே யிவ்வடைவாய் நவக்கோள்நிற்க
விளங்கியக் குழவியுமே மரணமாமே.

(இ-ள்.) லக்கினாதிபதி நீசமடைந்து நிற்க, ஜென்மாதிபதி அஸ்தமனமாக விருக்க, சனியும், லக்கினத்திற்கு எட்டாம் ராசியாதிபதியும் ஒன்றாகக்கூடி உதையவிராசியிலிருக்க, அங்காரகன் லக்கினத்திற்கு, நான்காம் ராசியிலிருக்க, ஏழாம் ராசியில், ராகு கேதுகளிருக்கப் பிறந்த உடனே சில்நாளில் இறந்துவிடும், எ-று. (60)

ஆமெனப் பாவிக ளோடுதானும்
அறியவே ஜென்மாதிக் கூடிநிற்க
தாமெனச் சுபருமே பாருமற்றுன்
தங்கியே மதிதனக் கெட்டில்நிற்க
ஏமென வுதையத்தான் காரிசேயும்
இயம்பக்கே ளேழினிலே யேறிநிற்க
போமெனப் புவிதனிலே பிறந்தபிள்ளை
போகுமே தீம்பாகப் புகலுவாயே.

(இ-ள்.) பாபக் கிரகங்களோடே ஜென்மாதிபதிக் கூடிநிற்க, சுபக் கிரகங்கள் பார்வையில்லாமல் நிற்க, அல்லது சந்திரனுக்கு எட்டாம் ராசியிலிருக்க, உதையாதிபதி சனி நின்ற விராசிக்கும், அங்காரகன் நின்ற ராசிக்கும் ஏழாம் ராசியிலிருக்கப் பிறந்தபாலன் பூமியில் நில்லாமல் தீம்பாக மரணமாகிவிடும், எ-று. (61)

புகலவே காரியொடு செவ்வாய்தானும்
பொருந்தியே யுதையத்திற் சேர்ந்துநிற்க
அகலவே யம்புலியு மேழில்நிற்க
அவனோடு அலறியுங் கூடிவாழ
தகலவே நான்கினிலே பாம்புநிற்க
தங்கியப் பிதுர்காரன் யெட்டாறுக
இகலவே யிருந்திடப் பிறந்தபாலன்
ஏகுமே யேமனூ றென்றுசெப்பே.

(இ-ள்.) சனியும், அங்காரகனும், உதையவிராசியில் சேர்ந்து நிற்க, சந்திரனும் ஏழாம் ராசியிலிருக்க அவருடன் சூரியன் கூடிநிற்க பாம்புகள் லக்கினத்திற்கு நான்காம் ராசியிலிருக்க, அல்லது பிதுர்க் காரகனுகியச் சூரியன், லக்கினத்திற்கு யெட்டாம் ராசியிலும், அல்லது ஆறும்ராசியிலும் இருக்கப் பிறந்தபாலன் பூமியில் நில்லாது மரணமாகும், எ-று. (62)

செப்பவே பத்துடன் பத்தாம்வீட்டில்
செயலாகப் பதியவர் பதியாய்நிற்க
ஒப்பவே கோணதிப் பதிகள்தாமும்
ஒருமிக்க யிழிகுலத்தோ ருகிநிற்க
தப்பவே யுதையாதி யேழாமாதி
தானவர் மனமிடந் தஸ்தமிக்க
மெப்பவே மேதினியிற் பிறந்தபிள்ளை
மதிக்ஷீண மாகவே மறிக்கும்பாரே.

(இ-ள்.) லக்கினத்திற்கு பத்தாம் ராசிக்குப் பத்தாம் ராசியில், வியாழபகவான் அத்தானதிபதியாக விருக்க, கோணதிபதிகள் யீனமாக விருக்க உதையாதிபதி ஏழாமாதிபதி இவர்கள் அஸ்தமனமாக சந்திரன் க்ஷீணமாகயிருக்கப், பிறந்தபாலன் பூமியில் நில்லாது மரண மாகிவிடும், எ-று. (63)

கார்க்கவே காரிநின்ற ராசிக்கெட்டில்
  கதிரவ னொருவனு மாகநிற்க
பூர்க்கவே கலையதுத் தானுயர்ந்த
  பூரணச் சந்திரன் தன்னைப்பாம்பு
ஏர்க்கவே நாவது நீட்டிப்பாற்க
  இவ்வடைவாய் நவக்கோட்க ளிசைந்துநிற்க
பார்க்கவே பார்தனிலே பிறந்தபாலன்
  பழியாகச் சாகுமெனப் பகருவாயே.

(இ-ள்.) சனி நின்ற ராசிக்கு எட்டாம் ராசியில் சூரியனிருக்க, கலையுயர்ந்தச் சந்திரனை, இராகு, கேதுகள் பார்க்கப்பிறந்த பாலன் சிலநாளில் மரணமாகிவிடும், எ-று. (64)



## வேறு கணிதம்

## ஆயுள் பலாபலன்.

விருத்தம்.

காணவே லக்கிணத்திற் கதிபதி யானோன்றானும்
பூணவே சரராசிதன்னில் பொருந்தியே தானிருக்க
ஊணவே யஷ்டமாதி யுஞ்சர ராசியேற
தோணவே பிறந்தபிள்ளை தீர்க்காயு சுடனேவாழ்வன்.

(இ-ள்.) லக்கினாதிபதி சரராசியிலிருக்க, அஷ்டமாதிபதியும், சரராசியிலிருப்பானாகில் பிறந்தபாலன் தீர்க்காயுசுடன் வாழ்வன் எ-று.

வாழவே லக்கினாதி வன்பதி சரத்தில்நிற்க
தாழவே யஷ்டமாதி திரமெனும் ராசிமேவ
மீழவே புவியில்தானு மிக்கவே பிறந்தபிள்ளை
ஊழவே மத்தியமாயு ளாற்றுமே வாழ்வா னென்னே.

(இ-ள்.) லக்கினாதிபதி சரராசியி லிருக்க, அஷ்டமாதிபதி ஸ்திரராசியிலிருக்க பிறந்தபிள்ளை மத்திம ஆயுசு உடையவனாகுவான்.

என்னவே லக்கினாதி யிருந்திட சரத்திலேறி
உன்னிய யஷ்டமாதி யுபயரா சியினில்வாழ
பன்னவே புவியிற்றானும் பரிவுடன் பிறந்தபாலன்
மன்னிய யற்பவாயு ளவனுக்கென் றுறைசெய்வாயே.

(இ-ள்.) லக்கினாதிபதி, சரராசியிலிருக்க, லக்கினத்திற்கு எட்டாம் ராசியாகிய அஷ்டமாதிபதி, உபயராசியிலிருக்கப் பிறந்தபாலன் அற்பாயு சுடையவனாகும், எ-று. (3)

செய்யவே லக்கினாதி திரராசி தனிலிருக்க
உய்யவே யஷ்டமாதி வுபையரா சியினில்வாழ
துய்யவே யுலகுதன்னில் தோன்றிய பாலன்றானும்
பையவே தீர்க்கவாயுள் பரிவுடன் பெற்றுவாழ்வன்.

(இ-ள்.) லக்கினாதிபதி திரராசியிலிருக்க லக்கினத்திற்கு எட்டம் ராசியாதிபதி உபய விராசியிலிருக்க, பிறந்தபாலன் தீர்க்காயுசுடன் பூமியின்மீது வாழ்குவன், எ-று. (4)

வரையவே லக்கினாதி வருந்திர ராசிநிற்க
நிரையவே யட்டமாதி நீள்சர ராசிமேவ
புரையவே புவியிற்றானும் புகழுடன் பிறந்தானுக்கு
மரையவே மத்திபந்தான் மாயுளா மென்றுபேசே.

(இ-ள்.) லக்கினாதிபதி ஸ்திரராசியிலிருக்க, லக்கினத்திற்கு எட்டாம் ராசியாகிய அஷ்டமாதிபதிச் சரராசியிலிருக்கப் பிறந்தபாலனுக்கு மத்திபமான வாயுளாகும், எ-று. (5)

பேசவே லக்கினாதிப் பதிதிர ராசிமேவ
நேசமா யஷ்டமாதி நின்றிடத் திரமேயாக
பூசவே புவியிற்றானும் புகழுடன் பிறந்தபாலன்
கூசவே யற்பவாயு ளுள்ளவ னென்றுகூறே.

(இ-ள்) லக்கினாதிபதி திரராசியிலிருக்க அஷ்டமாதிபதியும் அத்திராசியிலேயே யிருக்கப்பிறந்தபாலன் அற்பாயுளன், எ-று. (6)

கூறவே லக்கினாதிக் குலவிய வுபையம்வாழ
தேறவே யஷ்டமாதி திகழ்திர ராசிநிற்க
மீறவே புவியிற்றானும் மேலெனப் பிறந்தபாலன்
நேறவே தீர்க்கவாயுள் நீடியே வாழ்வானென்னே.

(இ-ள்.) லக்கினாதிபதி உபயராசியிலிருக்க, அஷ்டமாதிபதியும் திராசியிலிருக்கப் பிறந்தபாலன் தீர்க்காயுசுடன் வாழ்குவன், எ-று. ()

என்னவே லக்கினாதிப் பதியுப யத்தில்நிற்க
அன்னவே யஷ்டமாதி யவருமே யுபயமேற
பன்னவே புவியிற்றானும் பரிவுடன் பிறந்தபாலன்
மன்னிய மத்தியவாயு ளவனுக்கே யென்றுசாற்றே.

(இ-ள்.) லக்கினாதிபதி உபயராசியிலிருக்க, அஷ்டமாதிபதியும் அந்த உபய ராசியிலேயே யிருக்கப்பிறந்தபாலன் அற்பாயுளன். (8)

சாற்றவே லக்கினாதி சார்ந்துப ராசிமேவ
ஏற்றவே யஷ்டமாதி யிருந்திடச் சரத்திற்றானும்
தோற்றவே புவியின்மீதுத் துலங்கிடப் பிறந்தபாலன்
ஆற்றவே யாயுசுந்தான் அற்பமா மென்றுபேசே.

(இ-ள்) லக்கினாதிபதி உபயவிராசியிலிருக்க, அஷ்டமாதிபதி சாராசியிலிருக்கப் பிறந்தபாலன் அற்பாயுளனாகும், எ-று. (9)

வேறு-விருத்தம்.

பேசவே லக்கினாதிப் பதியோன்றானும்
பெருமைசேர் பலவாறு மாயிருக்க
கூசவே யாறெட்டு விரையந்தன்னில்
குலவியே பாபிகள் தாமிருக்க
நேசமாய்த் திருகோண ராசிதன்னில்
நேர்மையுள சுபர்களுமே நின்றுவாழ
வாசமாய் வையமிசைப் பிறந்தபாலன்
வாழ்வனே தீர்க்காயு சுள்ளோனாகே.

(இ-ள்.) லக்கினாதிபதி பெலவானாக விருக்க, லக்கினத்திற்கு ஆறும் ராசியினும், எட்டாம் ராசியினும், விரைய விராசியாகிய பனிரண்டாம் ராசியினும் பாபக்கிரகங்களிருக்க, திரிகோணங்களில் சுபக்கிரகங்கள் இருக்கப் பிறந்தபாலன் பூமியின்மீது தீர்க்காயுசுடனிருந்து வாழ்வான், எ-று. (10)

ஆகவே லக்கினாதி பதியோன்றானும்
ஆனதிரு கோணமுடன் கேந்திரமேற
ஏகவே யவர்தனையு மித்துருவானோர்
ஏற்கவே யிருகண்ணா லெட்டிப்பார்க்க
பாகமா மாயுட்க்கா ரகனுமானப்
பண்பான சனிபகவான் பலத்துதிற்க
போகமாம் புவிதனிலே பிறந்தபாலன்
புகழுமா யுசுவிர்த்தி யுள்ளோனாமே.

(இ-ள்.) லக்கினாதிபதி திரிகோண ராசியிலும், கேந்திரஸ்தானங்களிலும் ஏறியிருக்க, அவரை நட்புடைய மித்துரு கிரகங்கள் பார்க்க ஆயுட்காரகனாகிய சனிபகவான் பெலவானாகவிருக்கப் பிறந்தானுக்கு ஆயுசு விர்த்தியுண்டாம், எ-று. (11)

வேறு விருத்தம்.

சீர்பெரும் லக்கினாதிப் பதியுடன்று னுமே
செப்புமஷ் டாதிபதியும்
சிறந்ததச மாதிபதி யாகுமிவ் மூவரும்
ஜெயபெலன் பெற்றுவாழ
நேர்பெரும் நவக்கிரக திசையாண்டு நூற்றிருபன்
நீடுமுத்தம் வயதுமாம்
நிகழுரு மிரண்டுகோள் பெலமதுப் பெற்றிடில்
நிரைபாதிவய தருபதாம்
மூர்பெரு மொருகிரக மூற்றபலன் பெற்றிடில்
முப்பத்தி ரண்டுவயதே.

(இ-ள்.) லக்கினாதிபதியுடன் எட்டாமிடத்திற் குடையவனும், பத்தாமிடத்திற் குடையவனும், இம்மூவருந் உச்சதிரிகோண கேந்திரங்களில் பெலன்பெற்றிருக்க நூற்றிருபது வயதுடையனாகயிருந்து வாழ்வான், இம்மூவரில் இரண்டு கிரகங்களிருந்தால் அன்பதுவயதுடையவனும், ஒரு கிரகம் பெலன்பெற்றிருந்தால் முப்பதுவயதுடைவனாக யிருப்பான், எ-று. (12)

அறையவே யஷ்டமத்தா னேடுமெந்தன்
அடைவாக யாட்சியினிற் கூடநால்வர்
பிறையவனும் பேணியே யதிலேநிற்கக்
குடியாக மற்றதோர்க் கோட்கடாமும்
நிறையாக நாலுநா லாகிநிற்க
நீடியே யிப்புவியிற் பிறந்தபாலன்
குறையாமல் வயதுநூ றளவும்வாழ்ந்து
கோடியர் மாள்வனெனக் கூறுவோமே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு எட்டாம் இராசியாதிபதியும், ஆயுட்காரகனாகிய சனி பகவானும் ஆட்சியாகிய அவர் சொந்தவீட்டிலிருக்க அவர்களுடன் நாலுகிரகங்கள் சேர்ந்துக் கூடிநிற்க, மாதுர்க்காரகனாகிய சந்திரனும் அதிலேநிற்க,மற்ற கிரகங்கள் நாலுக்கு நாலாமிடமாக நிற்கப்பிறந்த பாலன் நூறுவயதளவும் உலகில் வாழ்வன். ()

கூறவே மந்தனொடு புந்திசுங்கன்
  குலவியே மதிவீட்டா னுதையத்தோனும்
சேறவே யிவர்களுமே யொன்றாய்க்கூட
  செப்பியே மற்றக்கோ ளவரவர்க்கு
ஏறவே யவரவர்க்கு நாலைந்தாக
  இருந்திடவே யிப்புவியிற் பிறந்தபாலன்
மீறவே செல்வமொடு மேலாய்வாழ்ந்து
  மிக்கநா ளுண்டிருந்து மறிப்பனென்னே.

(இ-ள்.) ஆயுட்காரகனாகியச் சனிபகவானும், வித்தியாரகக்காரகனாகிய புதனும், களத்திரக்காரகனாகிய சுக்கிரனும், மாதுர்க்காரகனாகியச் சந்திரன் நின்ற இராசியாதிபதியும், உதையாதிபதியும் இவர்கள் ஒன்றாகக் கூடிநிற்க, மற்றக் கிரகங்கள் அவரவர்களுக்கு நாலாம்வீடு ஐந்தாம்வீடாக நிற்கப்பிறந்தபாலன் உலகில் செல்வமோடு வாழ்ந்து நூறுவயதளவு மிருந்து மறிப்பன். எ-று. (14)

என்னவே யெட்டோனும் புந்திசுங்கன்
  இயம்பிடு மிந்துவொடு வுதையத்தானும்
மன்னவே யிவர்கலந்துக் கூடிநிற்க
  மருவிடு மம்மனையு மாட்சியாக
பன்னவே மற்றகோ ளிருபுறத்தும்
  பறவிடப் புவிதனிலே பிறந்தபாலன்
கன்னியமாஞ் செல்வமொடு வாழ்ந்துநின்று
  காணநா ளுண்டிருந்து மறிப்பான்பாரே.

(இ-ள்.) லக்கினத்திற்கு எட்டாம் ராசியாதிபதியும், புதனும்,சுக்கிரனும், சந்திரனும், உதையாதிபதியும் ஒன்றாகக் கலந்து நிற்க அவர்கள் நின்றமனை ஆட்சிவீடாகவிருக்க மற்ற கிரகங்கள் இரு புறமும் சேர்ந்துநிற்கப் பிறந்தபாலன் பூமியின்மீதுச் செல்வமோடு நூறுவயதளவும் வாழ்ந்து பின்பு மறிப்பான், எ-று, (15)

பாறென யெட்டாதி யெட்டில்மேவ
 பரிவாக மற்றக்கோள் பகரக்கேளாய்
நேறென யிருபுறமும் சரியாய்ச்சேர்ந்து
 நின்றிட நீணிலத்திற் பிறந்தபாலன்
கோறெனக் குலவியச் செல்வமோடு
 குறையிலா யோகமுந் தானுண்டாகி
சீறெனப் புவியில்நூ றுண்டுவாழ்ந்து
 சிவன்பதமுஞ் சேர்வனென செப்புவாயே.

(இ-ள்.) லக்கினத்திற்கு எட்டாமிடத்ததிபன் எட்டாம் ராசியி லிருக்க மற்ற கிரகங்கள் அவற்கு இருபுறத்திலும் சரிசரியாகக் கூடி நிற்கப் பிறந்தபாலன், அநேக செல்வமோடும் யோகமோடும், உலகில் நூறுவயதளவும் வாழ்ந்திருந்து பின்பு சிவபதமடைகுவான், எ-று. ()

செப்பவே யாட்சியினிற் காரிநிற்க
 சிறந்ததோர் மற்றக்கோள் சேர்ந்துகேளாய்
ஒப்பவே யவர்க்கிருப் புறமாய்நிற்க
 ஓதக்கேள் முந்தவோர் மந்தனுக்கு
மெப்பவே முன்மனை யமிசையாக
 மிக்கவே யிவ்வடைவாய் நவக்கோள்நிற்க
இப்புவி தன்னிலே பிறந்தபாலன்
 யிருப்பனே நூறுவய தென்றுசொல்லே.

(இ-ள்.) ஆட்சியாகிய தன் சொந்தவீட்டில் ஆயுட்காரகனாகியச் சனி நிற்க, மற்றக் கிரகங்கள் அவற்கு இரண்டுபக்கங்களிலும் சேர்ந் துநிற்க, சனிக்கு முன் மனையானது அமிசையுள்ளதாக விருக்க, இப் படி அடைவாகக் கிரகங்கள் நிற்கப் பிறந்தபாலன் பூமியின்மீது நூறு வயதிருந்து மறிப்பான், எ-று. (17)

சொல்லவே காரியி னிடத்திற்றானும்
 சுகமாக நான்குகோள் கூடிநிற்க
நல்லதோர் நிலவுமே யொன்றாய்கூடி
 நின்றிட யவரவர்க்கு நான்காய்மற்றோர்

வல்லவே யிருக்கவுமே மந்தனுட்சி
வாகாக யமிசையுறப் பிறந்தபாலன்
புல்லவே புகழோடுச் செல்வம்பெற்று
புவிமீது வாழ்வன்நூ ருண்டுகூறே.

(இ-ள்.) ஆயுட்காரகனுகியச் சனிபகவானுடைய க்ஷேத்திரமாகிய மகர கும்ப விராசிகளில் நான்கு கோட்கள் கூடிநிற்க, அவருடன் சந்திரனுங் கூட, அவரவர்கள் நின்ற விராசிக்கு மற்ற கிரகங்கள் நான்காம் ராசியாக நிற்க, சனிபகவான் ஆட்சியாயும் அமிசையாயு மிருக்கப் பிறந்தபாலன் புகழும் செல்வமும் உண்டாகி பூமியின்மீது நூறு வயதளவு மிருந்து வாழ்குவன், எ-று. (18)

கூறவே காரிநின்ற சீர்மனைக்கு
குலாவியே யாறேழு யெட்டுதன்னில்
ஏறியே புகர்புந்திப் பொன்னோன் நிற்க
எழிலாக மற்றக்கோ ளியம்பக்கேளாய்
பேறவே யெங்கேனும் பரவிநிற்க
பெருமையுட னேபிறந்த பாலன்றானும்
நேறவே நீணிலத்தில் வயதுநூறு
நீடியே யிருந்துமே வாழ்வான்காணே.

(இ-ள்.) ஆயுட்காரகனுகியச் சனிநின்ற ராசிக்கு 6-7-8-ம் ராசிகளில் களத்திரக்காரகனுகியச் சுக்கிரனும், வித்தியாக்காரகனுகிய புதனும், புத்திரக்காரகனுகிய குருவும் அம்மனையிலிருக்க, மற்ற கிரகங்கள் மற்றயிடங்களில் பரவியிருக்கப் பிறந்தபாலன் பூமியின்மீது நூறு வயதளவு மிருந்துவாழ்வான், எ-று. (19)

காணவே யெட்டோனு மெட்டாமாதி
கருதுசீ ரவருடனே யரசன்சுங்கன்
பூணவே மதியோடு மந்தன்றானும்
பொருந்தியே யோரிடத்தி லமர்ந்தேநிற்க
தோணவே யிவ்வடைவாய்க் கோட்கள்வாழ
தொல்புவியி லேபிறந்த பாலன்றானும்
வேணவே செல்வமது யிலங்கப்பெற்று
விளங்கநூ ருண்டுமே வாழ்வான்கூறே.

(இ-ள்.) லக்கினத்திற்கு எட்டாமிடத்தில் நின்றவனும், அந்தவெட்டாம் வீட்டிற் கதிபனுங் கூடி நிற்க, அவர்களுடன் வியாழனும் சுக்கிரனும், சந்திரனும், சனியுங்கூடி ஓர் மனையில் நிற்கப்பிறந்த பாலனுக்கு குறைவுபடாதச் செல்வமுண்டாகி வயது நூறளவு மிருந்து வாழ்குவான், எ-று. (20)

கூறவே யஷ்டமத்தோ னதில் நின்றோனும்
  கூடியே ஜன்மம்நா லிடமேமேவிப்
பேறவே யவர்தனக்கு நாலாம்வீட்டில்
  புண்ணிய சுபாிருக்க மந்தன்கேளாய்
நேறவே நின்றயிடத் திற்கேநான்கில்
  நிலையாகப் பொன்புக்கு மிருந்துவாழ
தேறவே திகழுடனே பிறந்தபாலன்
  திகழ்நிதியும் பெற்றிருப்பன் வயதுநூறே.

(இ-ள்.) அஷ்டமாதிபதியும் அஷ்டமத்தானத்தில் நின்றோனுங் கூடி ஜென்மலக்கினத்திலும், அல்லது நாலாமிடத்திலுமிருக்க, அவர்க்கு நாலாம் ராசியில் சுபக்கிரகங்களிருக்க சனிபகவான் நின்ற விராசிக்கு நான்காம் ராசியில் குருவும், சுக்கிரனுமிருக்க, பிறந்தபாலன் அளவற்ற திரவியங்களைத்தேடி உலகில் நூறுவயதளவுமிருந்து வாழ்குவான், எ-று. (21)

நூறெனு முடவனுட னிரண்டுகோட்கள்
  நுகர்ந்துமே நேராகக் கூடிநிற்க
நேறென யிவர்களுக்கு யைந்திற் கைந்தில்
  நீடியே மூன்றுகோள் நிலையாய்நிற்க
பேறென யிவ்வடைவாய் நவக்கோள்நிற்க
  பெருமையுட னித்தரையிற் பிறந்தபாலன்
ஏறென யெழில்தனப் பதியோனாகி
  இப்புவியில் நூறுண்டு யிருந்துவாழ்வான்.

(இ-ள்.) ஆயுட்காரகனாகியச் சனியுடன் இரண்டு கிரகங்கள் கூடிநிற்க, அவற்கு ஐந்தாம்ராசியில் மூன்றுகோள் ஏறிநிற்கப் பிறந்த பாலன் தனபாக்கிய முடையவனாகி நூறுவயதளவு மிருந்து வாழ்குவான், எ-று. (22)

வாழவே சுங்கனொடு புந்திமந்தன்
 வளமாக மூவருக்கும் முதலாய்நிற்க
சூழவே யொன்றிரண் டதனிற்றானும்
 சுத்தமுள சுபக்கிரக மேறிநிற்க
மீழவே யிவ்வாறு நவக்கோள்மேவ
 மேதினியி லேபிறந்தப் பாலன்றானும்
பேழவே நிதியோடு யாணும்பெண்ணும்
 பெற்றுநா றுண்டிருந்து வாழ்வன்மாதே.

(இ-ள்.) சுக்கிரனும், புதனும், சனியும் ஒன்றாய்க்கூடி, இவர்களுக்கு முதல்வனாகச் சனிபகவானிருக்க, லக்கினத்திலும், இரண்டாமிடத்திலும், சுபக்கிரகங்களிருக்கப் பிறந்தபாலன் செல்வமுடையயவனாய், ஆணும் பெண்ணும்பெற்று நூறுவயதளவு மிருந்து வாழ்குவான், எ-று. (23)

மாதென மகரமொடு கும்பந்தன்னில்
 மருவியே சனியிருக்க நீசமன்றி
ஓதென வுச்சமெனு மமிசையாகி
 ஓங்கியே யன்னேனு மேறிநிற்க
போதெனப் புவிதனிலே பிறந்தோனுக்கு
 புகழோடுச் செல்வமதுத் தானுண்டாகி
ஏதென வயதுமே நூறதாக
 இருந்துமே வாழ்வனென யியம்புவாயே.

(இ-ள்.) மகரவிராசியிலும், கும்பவிராசியிலும், சனியானவன் நீசஅமிசையைப்பெறாமல், உச்ச அமிசையைப் பெற்றிருக்க பிறந்தபாலன் பூமியின்மீது புகழும் செல்வமும் நீடிக்கப்பெற்று நூறுவயதளவு மிருந்து வாழ்வான், எ-று. (24)

இயம்பவே காரியுமே யுச்சமாக
 இந்துவுமே சொந்தமா மாட்சியாகி
நயம்பெறவே யரசனொடு சுங்கன்றானும்
 நாடியவர்க் கேநாலா மிடத்தில்நிற்க

பயம்பெறப் பிறந்திட்டப் பாலனுக்கு
பால்பெருகுஞ் செல்வமொடு பாக்கியவானய்
வயம்பெறவே வயதுமே நூறுமட்டும்
வையமிசை தானிருந்து வாழ்வான்பாரே.

(இ-ள்.) ஆயுட்காரகனுகியச் சனியானவன் உச்சஸ்தானமேறி நிற்க, மாதுர்க்காரகனுகியச் சந்திரன் தன் சொந்தவீடாகிய ஆட்சியிலேயிருக்க புத்திரக்காரகனுகிய குருவும், களத்திரக்காரகனுகிய சுக்கிரனும், சந்திரனுக்கு நாலாம் ராசியாக நிற்கப்பிறந்த பாலனுக்கு பால் பாக்கியமும் செல்வமும் உண்டாகி உலகில் நூறுவயதிருந்து வாழ்வான், எ-று. (25)

பார்க்கவே லக்கினத்திற் காறுரண்டோன்
பரியசனி யோனுயுள் கொடுத்தாலுண்டாம்
ஏர்க்கவே மற்றக்கோ ளெல்லாங்கேளாய்
இயம்பிட யிவர்க்கவர் சுபரேயாகில்
கோர்க்கவே யிவ்வாறு நவக்கோள் நிற்க
குவலயத்தி லேபிறந்தப் புதல்வன்றானும்
பூர்க்கவே புகழோடுச் செல்வம்பெற்று
பூமியினில் வாழ்ந்திடுவன் வயதுநூறே.

(இ-ள்.) லக்கினத்திற்கு 6-ம் ராசியாதிபனும் இரண்டாம் ராசியாதிபனும், சனியும், ஆயுசு கொடுப்பார்கள், அன்றியும், மற்ற கிரகங்கள், மேற்சொன்ன கிரகங்களுக்கு மேலாகிய சுபருகவிருக்கப் பிறந்தபாலன், யோகவானுயும், செல்வமுடையவனுகியும், புகழ்பெற்று நூறுவயதளவும் நீடித்து வாழ்குவான், எ-று. (26)

வயமெனக் கோட்களுமே கூடிதானும்
வரியவே திரிகோண மேறிநிற்க
நயமென நாடியே யணியாய் நின்று
நல்லதோ ருச்சமா மமிசையாக
தயமெனத் தரணிமிசைப் பிறந்தோனுக்கு
தான்வரும் யோகமுட னதிகசெல்வம்
பயமெனப் பர்தனிலே யெவருமெச்ச
பரிவாக நூறுவய திருந்துவாழ்வன்.

(இ-ள்.) கிரகங்களெல்லாம் ஒன்ருகக் கூடியிருந்தாலும், அல்லது திரிகோணம் பெற்ருலும், ராசிகளில் அணியணியாக நின்று நல்ல உச்ச அமிசையைப் பெற்றிருக்கப் பிறந்தபாலனுக்கு, யோகமும் செல்வமும் உண்டாகி உலகில்யாவரும் புகழும்படி நூறுவயதிருந்து வாழ்குவான், எ-று. (27)

சொல்லவே யுதையாதிப் பதியினேடே
சோமனுர் வீட்டோனு மெட்டோனேடு
புல்லவே காரியிவ ரிருந்தவீட்டோன்
பொன்னவனே டோடிவர்க ளாருபேரும்
வல்லவே யிவரிருவர்க் கொருவர்தாமும்
வருத்தமிலா யுறவாகத் தாமிருக்க
நல்லவே நானிலத்திற் பிறந்தபாலன்
நண்ணும்நூர் வயதிருந்து வாழ்வான்காணே.

(இ-ள்.) உதையாதிபதியும், சந்திரனின்ற ராசியாதிபதியும், லக்கினத்திற்கு எட்டாம் ராசியாதிபதியும், ஆயுட்காரகனுகியச் சனியும், சனியிருந்த வீட்டானும், குருவும் இவர்கள் ஆறுபேரும், ஒருவருக்கொருவர் துன்பமில்லாமல் வுறவாகவிருக்கப் பிறந்தபாலன் செல்வமோடு வயது நூறளவுமிருந்து யாவரும் புகழும்படியாக வாழ்குவான், எ-று. (28)

காணவே காரிநின்ற ராசிக்கெட்டில்
கருதியே பாபரவ ரில்லாமற்ருன்
பூணவே நல்லோர்கள் கூடப்பார்க்க
புகலக்கேள் யிவருக்கு நாலாம்வீடாய்
சேணவே பாபரன்றி ஜென்மத்திற்கு
செப்புமோ றெட்டினிற்சீ தளனுர்நிற்க
தோணவே தொல்லுலகிற் பிறந்தபாலன்
துலங்கசிரஞ் சீவியென வாழ்வான்சாற்றே.

(இ-ள்.) ஆயுட்காரகனுகியச் சனிநின்ற ராசிக்கு எட்டாம் ராசியில் பாபக்கிரகங்கள் இல்லாமலிருக்க, நல்லோராகிய சுபர்கள் அவர்களுடன் கூட அல்லது பார்க்க, இவற்கு நாலாம் ராசியாகிய ஸ்தான

த்தில் பாபக்கோட்க ளில்லாதிருக்க, ஜெனனமாகிய ராசிக்கு எட்டாம் ராசியில் சந்திரபகவானிருக்கப் பிறந்தபாலன் சிரஞ்சீவியாக வாழ்வானென, எ-று. (29)

சாற்றவே யெட்டாதி யெட்டுக்கெட்டாய்
சார்ந்துறவே யவர்க்கிருப் பக்கங்கேளாய்
ஏற்றவே சுங்கினொடு இராஜன்மேவ
இயற்கையா யுதையமதில் சோமன்வாழ
போற்றவே யலதுபுகற் கேழாய்நிற்க
புகலக்கேள் முடவனுக்கு நாலாம்வீட்டில்
தோற்றசெய் கதிரன்றிச் ஜெனித்தபாலன்
துலங்கியே நூருவய திருந்துவாழ்வான்.

(இ-ள்.) லக்கினத்திற்கு எட்டாம் ராசியாதிபன் எட்டுக்கு எட்டாம் ராசியிலிருக்க அவருக்கு இரண்டுபக்கமும், சுக்கிரனும், வியாழமும் இருக்க, உதையவிராசியில் சந்திரனிருக்க அல்லது சுக்கிரன் நின்றராசிக்கு ஏழாய்ராசியில் சந்திரனிருக்க, சனிக்கு நாலாம் ராசியில் செவ்வாயும், சூரியனும் இல்லாதிருக்கப் பிறந்தபாலன் தீர்க்காயுசோடியிருந்து வாழ்வான், எ-று. (30)

என்னவே சனிநின்ற மனைக்குநான்கில்
எழில்கதிர் பூமநா ரிவர்களன்றி
மன்னிய முக்கோணக் கேந்திரமாக
மதியோனுஞ் சகடம தன்றிவாழ
பன்னிய யாறினுக் காருரண்டோன்
பண்பான சுகவானு மாகநிற்க
கன்னிய முடனுதித்தப் பாலன்றானும்
கண்டிப்பாய் நூறுவய திருப்பான்வின்ளே.

(இ-ள்.) ஆயுட்காரகனாகியச் சனி நின்ற விராசிக்கு நான்காம் ராசியில் சூரியனும் அங்காரகனும் இல்லாமலிருக்க, திரிகோணகேந்திரத்தில், சந்திரன் சகடமன்றிவாழ, லக்கினத்திற்கு ஆறும் ராசியினும் இரண்டாம் ராசியினும் சுபர்களிருக்கப் பிறந்தபாலன் குறையாமல் நூறுவயதிருந்து வாழ்வான், எ-று. (31)

வில்ளவே நாலுகேந் திரத்துமன்னர்
விளங்கவே முக்கோண மதனிற்சேர
கொள்ளவே காரியு மாட்சியாக
கூறிடு மவர்க்கேழில் பாபரில்லா
தள்ளவே தனத்தோனுந் தானுமீறி
தக்கவெட் டாகியுமா யவனும்வாழ
துள்ளவே புவிதனிலே பிறந்தபாலன்
திகழாக நூறுவய தவனிருப்பான்.

(இ-ள்.) கேந்திர ஸ்தானமாகிய நாலு ராசியாதிபதிகளும், திரிகோண இராசியில் ஏறிநிற்க, சனியும் ஆட்சியாகவிருக்க, அவர் நின்ற ராசிக்கு ஏழில் பாபர்கள் இல்லாதிருக்க, தன ஸ்தானாதிபதியோன் வலுவாய் எட்டாமிடத்திலிருக்கப் பிறந்தபாலன் நூறுவயதிருந்து வாழ்குவான், எ-று. (32)

இருக்கவே யீனமது யில்லாமற்றான்
எழிற்கதிரோ னுடையபார்வை யன்றிநிற்க
மருக்கவே மருவக்கிர மில்லாமற்றான்
மன்னவ னுருடையப் பார்வைதோற்ற
பெருக்கவே சோமனுந் தாமுங்கூட
புகழாக வுதையம தேரிநிற்க
வருக்கமா மவர்க்கெட்டோ டெட்டோன்தானும்
வலுவுற வயதுநூ றிருப்பன்பாரே.

(இ-ள்.) யாதொரு யீனமுமில்லாமல் கோட்களுக்கு சூரியனுடையப் பார்வையு மில்லாதிருக்க, வக்கிரமின்றி வியாழபகவானுடையப் பார்வையுண்டாக, சந்திரன்கூட உதயவிராசியிலிருக்க, எட்டுக்கு எட்டாம் ராசியுடையவர்கள் வலுவாகயிருக்கப் பிறந்தபாலன் நூறுவயதிருந்து வாழ்வான், எ-று. (33)

நூறெனப் பொன்மதிக் காரிமூவர்
நெருங்கியே பாபர்மீனை யேறிநிற்க
தேறெனச் சனிமதி நின்றவீட்டோன்
நீடியே குபரேறு டீவரேசேர

காறெனக் காரியிந்து தனக்குநாலில்
கதிரவனும் செவ்வாயுங் கூடிநிற்க
பாறெனப் பார்தனிலே பிறந்தபாலன்
பகரும்நூர் வயதிருந்து வாழ்வானென்னே.

(இ-ள்.) விபாழபகவானும் சந்திரனும், சனியுங்கூடி பாபக்ஷேத்திரமேறிநிற்க, சனியும் சந்திரனும் நின்ற ராசிக்கதிபர்கள், சுபருடன் சேர, அல்லது சுபராகவிருக்க, சனிக்கும் சந்திரனுக்கும் நாலில் சூரியனும் செவ்வாயுமிருக்கப் பிறந்தபாலன் பூமியின்மீது சுகமோடு நூறுவயதிருந்து வாழ்குவான், எ-று. (34)

என்னவே காரிக்கு யெட்டிற்செவ்வாய்
இருந்திட மதிக்கெட்டிற் புந்தியாக
கன்னவே காலற்கீ ராறிற்றீயும்
காமனூர் தனக்குநான் காகவேந்தன்
பன்னவே பொன்னவனும் வுதைய்மாக
பண்புள்ள சுபக்கிரகம் பரவிநிற்க
உன்னிய வுலகுதனில் பிறந்தபாலன்
ஒருநூறு வயதிருந்து வாழ்வான்சீறே.

(இ-ள்.) ஆயுஷ்காரகனாகியச் சனி நின்ற ராசிக்கு எட்டாம் ராசியில் செவ்வாய்நிற்க, சந்திரனின்ற ராசிக்கு எட்டாம் ராசியில் புதன் நிற்க, சனிக்கு பனிரண்டாம் ராசியில் தீக்கோட்கள் நிற்கச், சுக்கிரன் நின்றராசிக்கு நான்காம் ராசியில் குரு நின்று, குரு வுதையமாக, சுபக்கிரகங்கள் பரவிநிற்கப் பிறந்தபால்ன் நூறுவயதளவும் சுகமுடன் இருந்து வாழ்வான், எ-று. (35)

சீறெண லக்கினத்திற் கெட்டாதி யேறிநின்ற
சிறந்ததோர் மீனைக்கிருப் பக்கந்தன்னில்
பேறெனச் சுபக்கோளே பேணிநிற்க
பெருமைசேர் சனியவனுக் கேழுநாலில்

நேறென மன்னவனும் வெள்ளிநிற்க
நீடியே பிறைக்கதிற் காருய்மேவ
கூறெனக் குவலயத்திற் பிறந்தபாலன்
குறைவிலா நூறுவய திருப்பான்மாதே.

(இ-ள்.) லக்கினத்திற்கு எட்டாமாதிபன் நின்ற விராசிக்கு இரண்டுபக்கமும் சுபக்கிரகங்களிருக்க, சனி நின்ற ராசிக்கு ஏழாம் ராசியிலும், நான்காம் ராசியிலும், வியாழமும், சுக்கிரனுமிருக்க, வளர்பிரைச்சந்திரன் சூரியனின்ற ராசிக்கு ஆறும் ராசியிலிருக்கப் பிறந்த பாலன் பூமியின்மீதுக் குறைவில்லாத செல்வத்தோடு நூறுவயதிருந்து வாழ்குவான், எ-று. (36)

## சோதிட ரகசியமென்னும்

### ஆயுள்கணித மூலமும்-உரையும்

### முற்றிற்று.



# நூதன புதிய புத்தகங்கள்.

## காசிராமேஸ்வர மஜிலிக்கதை.

எனதன்புப் பிரியமுள்ள நேயர்களே! நாம் எண்பத்திநான்கு லட்சஜீவராசியில் இந்த மானிடஜென்மமெடுத்தே தேதுப் பயனடைந்தோம், பக்தியென்னும் பெரும் விட்டைக்காணுதப்படி வீண்காலம் போக்கி மாயவலையிலகப்பட்டு மதிமயங்கி திரிவதைவிட மாதர்களும் புருடர்களும் இரவும் பகலும் பரம்பொருளாகிய சிவபெருமானை தியானித்து முக்தியடைவதற்கு நீதிமார்க்கம் அறியாமல் இருப்பதையறிந்து கண்ணாடிபோல் கலியுகத்தில் இந்தகாசி ராமேஸ்வர மஜிலிக்கதையை இதுவரையில் வடமொழியி லிருந்ததை யான் யறிந்து இதை உலகத்திற்கு வெளியிட்டால் நல்லப்பதவி யடைவாரென்று மனமுவந்து அந்நடையிலிருந்ததை செந்தமிழாய் வசனரூபமாக படிப்பவர் மனதையும் புத்தியைநிலைநிறுத்தி ஞானமென்னும் பெரும் குதிரைதனை சூக்ஷமமென்னும் ரதத்தில் கட்டி நடத்திதிக்விஜயமடைவதற்கு இது நலமானகதை இதை அன்பர்கள் வாங்கி பார்த்தால் சாரம் தெரியவரும்.

ஒரு புத்தகத்தின் விலை ரூபா 1 0 0

## பொப்பிலி இராஜன்கதை.

இதனால் சகலமான கனதனவான்களுக்கு தெரிவிப்பதுயாதெனில் இப்பவும் நாங்கள் வடமொழியிலிருந்த (பொப்பிலி ராஜன்கதைதன்னை) ஆங்காங்கு வசனமிட்டு தேசிங்குராஜன் கதைபோல் தமிழ்பாஷை தன்னில் அச்சிட்டிருக்கின்றோம் இதில் பொப்பிலி வேந்தனும், பிராஞ்சிதுரையும், விஜய நகரவேந்தன் அனுமதியால் சண்டை செய்வதும் அவரவருடைய பலாபலத்தைக்காட்டுவது மகா உசிதமாகயிருக்கும் இதில் விளங்கும் வீரத்தன்மை பெரியோர் வொழுக்கமும் தந்திர சமத்காரமும் கணிப்பதற்கு அளவு கிடையாது, இக்கதையை மாதர்களும் புருடர்களும் வீண்காலம் போக்காதபடி வாசித்து நன்மை தீமை அறிந்திடலாம்.

ஒரு புத்தகத்தின் விலை அணு 0 6 0

# பிழை திருத்தங்கள்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 10 | 14 | கெவ்வா | செவ்வா |
| ,, | 20 | ருகு | குரு |
| 10 | 10 | புரட்டாசிமீ | புரட்டாசிமீ |
| 16 | 16 | நிற்கில் | நிற்க, |
| 17 | 11 | | ல் |
| 17 | 16 | மீறி நிற்க | நிற்க |
| 17 | 19 | சகிக்கெட்டிற் | சசிக்கெட்டிற் |
| 20 | 3 | துலகமாக | துலாமாக |
| 22 | 13 | ரெட்டிராறில் | ரெட்டீராறில் |
| 34 | 5 | 5-வதுவரியை | 1-வதுவரியாக சேர்த்துக் கொள்ளவும் |
| 50 | 15 | ஆயுட்காரகனுகி | ஆயுட்காரகனுகிய |
| 51 | 3 | பன்புடன் | பண்புடன் |
| 52. | 4 | வாருள | வாகுள |
| 53 | 23 | சகோதரக்காரகனுகியக் | சகோதரக் காரகனுகியச் |
| 54 | 10 | வித்தியாக்காரகனுகிய | புத்திரக்காரகனுகிய |
| 55 | 11 | வித்தியாக்காரகனுகிய | புத்திரக்காரகனுகிய |
| 58 | 9 | வியாழபகவாண் | வியாழபகவான் |
| 60 | 19 | 6-ம் இராசியிலும், 12-ம் இராசியிலும் | 6-ம் இராசியையும், 8-ம்ராசியையும்,12-ம்ராசியையும் |
| 60 | 20 | 8-ம் இராசியிலும், பிறந்தபாலன் | பிறந்தபாலன் |
| 66 | 30 | வெகுவயதுதான் | வெகுவயததுதான் |
| 70 | 7 | றலனியோற்கு | றவனியோற்கு |
| 70 | 22 | யவனேகமாரக | யவனேமாரக |
| 80 | 2 | முடவறெட்டில் | முடவனெட்டில் |
| 80 | 8 | மரணமாகுவான் | யிரையாகுவான் |
| 82 | 27 | 6-ம் அல்லது இராசியினும் | அல்லது 6-ம்இராசியினும் |
| 84 | 7 | சனியினேடு | சசியினேடு |
| 102 | 25 | மாதய்-2, | மாதம்-2, |
| 111 | 4 | மேடாமெனும் | மேடமெனும் |
| 122 | 6 | நன்பன் | நண்பன் |
| 138 | 4 | மிலர்க்கேழாக | மிவர்க்கேழாக |
| 139 | 10 | கூறவேழோறிடந்தே | கூறவேழோறிடத்தே |
| 140 | 19 | குழுவ | குழுவி |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 143 | 17 | சந்திரகுருவும் | சந்திரனும் குருவும் |
| 145 | 9 | சபக்கோட்கள் | சுபக்கோட்கள் |
| 146 | 23 | இக்க | இருக்க, |
| 147 | 3 | நலக்கோள் | நவக்கோள் |
| 148 | 29 | ராம்யில் | ராசியில் |
| ,, | 29 | இவர்கல் | இவர்கள் |
| 149 | 2 | காலியுமே | காரியுமே |
| ,, | 3 | குலமாயாறில் | கு வலமாயாறில் |
| ,, | 24 | விடுகும் | விடும் |
| ,, | 27 | யுதையாசி | யுதையாதி |
| 150 | 6 | நின்றேன் | நின்றேன் |
| 151 | 12 | பிறந்ததள்ளை | பிறந்தபிள்ளை |
| ,, | 21 | நாமுறப் | தாமுறப் |
| 152 | 19 | சார்பாக் | சார்பாகக் |
| 153 | 26 | சனியிருக்க, சுபக் கிரகங்களும் | சனியிருக்க, அல்லது சுபக்கிரகங்களும், |
| 157 | 32 | துன்மைதானே | துண்மைதானே |
| 158 | 10 | தெனெனச் | தேனெனச் |
| 171 | 14 | வித்தியாரகக்காரகனுகிய | வித்தியாக்காரகனுகிய |



உ

சிவமயம்.

# பொருள் அகராதி.

| பொருள். | பக்கம். |
|---|---|

## கேது



## குளிகன்



## வ



## வா

பொருள் அகராதி

முற்றிற்று.







# சரசமோகன என்னும்

## ஓர் விநோதக்கதை.

அன்பர்காள்:—உலகிலுதித்த மனிதர்களின் மனதை சதா காலமும் ஆனந்தத்துடன் மனோரம்மியந்தருவதுமான இந்தசரச மோகன என்னும் அற்புதானந்த கதாரசக்கியானத்தை மற்ற சாதாரணக் கதைகள்போ லிருக்குமென்று நினைக்கவேண்டாம். எமது கம்பெனியில் வர்த்தகஞ் செய்யும் கல்வியிற் சிறந்த கன தனவான்களின் மனதை சந்தோஷிக்கும்படியான ஓர் கதாரத்ன மென்றே மதிக்கவேண்டும் இதைப்பற்றி இவ்வளவு சிலாகித்துச் சொல்வதற்கு மனந்துணிந்தது யாதெனில், கதாரசக் கியானங் களி னியல்பிற் குறியனவாகிய நவரசக்கியானமு மமைந்து சுரு தி யுக்தி அனுபவ திருஷ்டாந்தங்கட்குப் பொருந்தியனவாகிய உலகியல்பிற் கிசைந்த ஆனந்தரகஸ்ய அதிவிநோத சம்பாஷணை களும், ஆங்காங்கு விளங்கும் ஐதீக காட்சிகட் கிசைந்தவித மாய் அனேகவிதமாகிய திருவுருவமைந்து விளங்கும்படியான லெத்தகிராப் படங்களும் அமைத்து பிரகாசம் பொருந்திய பளபளப்பான உயர்ந்த கிளேஸ்கடிதத்தில் அச்சிட்டு விசித்திர அழகான பயிண்டுசெய்து விற்பனை செய்கிறோம்.

இதன் விலை அணு 8. தபாற்கூலி அணு 2.



நூதன புதிய புத்தகங்கள்.

# பாலநாகம்மாள் கதை.

இக்கதையானது இதுவரைக்கும் நமது தேசத்தாருக்கு இன்னதென விளங்காதபடி யிருப்பதால் இதையறிந்து நாங்கள் அம்மான் நடையாக ஆங்காங்கு வசனமிட்டு தெலுங்கு பாஷை யிலிருப்பதை தமிழில் மொழிபெயர்த்து செய்திருக்கின்றோம் ஆனால்இக்கதையைப்படித்தால் மாதர்கள்தன்கணவனிடத்திலும் பால்பரிடத்திலும் நடக்கவேண்டிய நீதியும் துஷ்டர் சாவகாசம் செய்வதினால் அமைக்கப்பட்ட துன்பமும், பதிவிரதா தர்மமும், இன்னதென செவ்வையாய் அறிந்திடலாகும், இந்நூலானது மாதற்கு கைக்கண்ணாடிபோல் காட்டலாகும், இதைப்படித்தவர் மனதையும் கரைத்து எவரெவர் எப்படி நடக்கவேண்டியதோ அதுபோல்நடக்க மாதர்களுக்கும் புருடர்களுக்கும் புத்தி யுக்தித் தரப்பட்ட கதையாகும் என்று இதை ஏற்படுத்தலாயிற்று.

இப் புத்தகத்தின் விலை அணா 0 6 0

செல்லரித்த முஞ்சிக்கு
கல்லிழைத்த கம்மல் என்பதுபோல

# விகட சுந்தரி என்னும் புத்தகம்.

## ஓர் வேடிக்கையான கதை.



இந்த விகட சுந்தரி கதையில் எல்லாம் சிரிப்பு எல்லாம் தமாஷ் எல்லா வேடிக்கையான விநோத விநோத கதைகளும் இல்லற மார்க்கத் தியல்பும் விபசாரத்தின் விபரீத கலகங் களும் பதிவிரதா லக்ஷணங்களும் பாபபுண்ணியத்தியல்பும் ஊழ்வினை சம்பவத்தின் விநோதக் காக்ஷிகளும் வாசிப்பவர் மனதைபிரமிக்கச்செய்யும் விநோதமான அகஸ்ய வசனங்களும், சன்மார்க்க ஸ்திரீகளை மணந்து சதா சந்தோஷத்தில் மூழ்கி பந்து ஜன மித்திருடன் ஆனந்த மெய்தும்படியான சமயோசிதமாகிய நீதி நூல்களை இதில் சேர்த்திருப்பதால் இந்த புத்தகத்தை வாசிப்போர் இகத்தில் கீர்த்தியும் பரத்தில் முக்தியெய்வது மல்லாமல் துன்மார்க்க ஸ்திரீகளை மணந்து வெகுதுயரடைந்து சரியொத்த சிநேகிதர் நகைத்துப் பரிகாசஞ் செய்து உற்றூர் உறவின்முறையார் பந்து ஜெனங்கள், அல்லது பகைஞரால் பற்பல துயரில் மூழ்கி அற்பரிடம் சிக்கி அலைந்து தவித்துக் கண்ணீர்விட்டுக் கதரியழுது வயற்றுச்சாமியார் வேஷம் போட்டுக்கொண்டு திண்ணை தூங்கியா யலைந்து திண்டாட்டம் போடுவதும் இவையனைத்தும் கண்கண்ட காக்ஷியைப்போல் அமைத்திருக்கும். இந்த விகடசுந்தரியின் கதாமஞ்சரியை வாசிப்பவர் வெகு ஜாக்கிறதையாய் துஷ்டரிடஞ் சிக்கித் துயரப்படாமல் அறிவானந்தமாய்ப் பிழைத்து இகத்தில் கீர்த்தியும், பரத்தில் முக்தியு மெய்தியிருப்பார். இப்புத்தகம் உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது.

இதன் விலை அணா 8. தபாற்கூலி அணா 2.

## கூந்தல் வளரும் பரிமளத் தைலம்.

இந்த தைலத்தில் கொஞ்சம் கையில்விட்டு தேய்த்து தலையில் தடவிவர மயிரின் சிவந்தநிரம் சுண்டு மயிர்வெடிப்பு தலைமயக்கம் தலைசுழற்றல் முதலிய பித்தசம்பந்தமான வியாதிகளையும் கண்டித்து மயிரை கறுமையாயும் செழிப்பாயும் அடர்த்தியாயும் வளரச் செய்வதோடு சுகந்த வாசனையையும் மயிர்கால்கள் கண்மூளை இவைகளுக் குகுளிர்ச்சியையும் கொடுத்து பித்த சாந்திசெய்து இரவில் சுகமானநித்திரையைகொடுக்கும் இவை நாளடைவில் உபயோகித்து வந்தால் பித்தத்தால்நரைத்தமயிர் களும் கறுக்கும் இதை ஒரு தடவை உபயோகித்தவர்கள் மறுபடியும் இதை கைவிடார்களென்பது திண்ணம் ஸ்திரீகள்புருஷர்கள் யாவரும் உபயோகிக்கலாம்




இந்த தைலமானது வேறுசில எண்ணைகளைபோல மயிரை உதிர்தல் முதலிய கெட்டகுணங்க ளில்லையென்று உறுதியாய் சொல்லுகிறோம்.

நண்பர்களே! தாங்கள் அநேகவித கூந்தல்வளர் தைலங்களை பார்த்தும் உபயோகித்து மிருப்பீர்களாயினும் ஒவ்வொருவரும் நமது தைலத்தையும் ஒரு முறை வாங்கி உபயோகித்து அதற்கு மிதற்குமுள்ள தாரதம்மியத்தைகண்டு களிப்பீர்களென நம்புகிறோம். இது உண்மை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மல்லிகைப்பூ எண்ணை | 5 பலம் டின் 1 க்கு | 1 | 0 | 0 |
| சம்பங்கி எண்ணை | 5 பலம் டின் 1 க்கு | 1 | 0 | 0 |
| தாழம்பூ எண்ணை | 5 பலம் டின் 1 க்கு | 1 | 0 | 0 |

4. டின் மொத்தமாய் வாங்கினால் ஒரு டின் இனமாய் சேர்த்து கொடுக்கப் படும்.

இந்த எண்ணைகள் கலியாணப் பெண்களுக்கும் கனவான் வீட்டு ஸ்ரீகளுக்கும் பிரதிதினம் கூந்தலுக்கு உபயோகப் படுத்தக்கூடிய உயர்ந்த எண்ணைகள் தான்.

